


# "உஜாலா சுப்ரீம் இன்ஸ்டா வைட்னிங் சிஸ்டம் மட்டுமே துணிகளுக்கு இணையற்ற வெண்மையின் ஜொலிப்பை தரும்"

INSTA-WHITENING SYSTEM

ஜோதி லேபின் நவீன தொழில்நுட்பங்கள் மற்றும் ஆராய்ச்சி மூலம், பரிசுத்தமான, துணிகளை, சேதப்படுத்தும் இரசாயனக் கூறுகள் எதுவும் இதில் இல்லை என நிரூபணம் பெற்ற மிக சிறப்பான ஃபார்முலாதான் உஜாலா சுப்ரீம் இன்ஸ்டா வைட்னிங் சிஸ்டம். தண்ணீரில் உடனடியாகக் கரைவதோடு, துணிகளின் நுட்பமான நூலிழைகளினுள் ஆழ்ந்து உளடுருவி, துரிதமாக செயல்பட்டு, துணிகளில் வெண்மையின் வெளிச்சத்தை கொண்டு வருவது உஜாலா **சுப்ரீம் இன்ஸ்டா வைட்னிங் சிஸ்டத்தால்** மட்டுமே முடிந்த ஒன்று.

விஞ்ஞான ஆதாரமற்ற முறையில் அல்லாத சாதாரணமான தயாரிப்புகளில் உள்ள தரங்குறைந்த இரசாயனங்கள் நாளடைவில் துணிகளில் நூலிழைகளை பாதித்து, வலுவற்றதாக்கிவிடும் துணிகளில் கறைகளை ஏற்படுத்தும்போது, உஜாலா சுப்ரீம் துணிகளுக்கு வலிமை குறையாதிருக்கச் செய்து வெண்மையை நிலை நிறுத்துகிறது.

விஞ்ஞான உண்மைகளை அறியாத ஒரு சிலர் உஜாலாவின் வாக்குறுதிகளையும் அதன் செயல்திறனையும் நம்ப மறுக்கலாம். அவர்கள் அறியாதது அதன் சிறப்பான ஃபார்முலாவையே.

நீங்களே சந்தேகங்களை போக்கிக் கொள்ள சுயமாக சோதித்துப் பாருங்கள்.



சாதாரண தயாரிப்புகளில் உள்ள தரம் குறைந்த இரசாயனங்கள் துணிகளில் நூலிழைகளை சேதப்படுத்துகின்றன



உஜாலா சுப்ரீம் இன்ஸ்டா வைட்னிங் சிஸ்டம் துணிகளில் இணையற்ற **வெண்மையான வெளிச்சத்தை** தருகிறது




UJALA *Supreme*

வெண்மையின் புதிய நிறம்

A product of Jyothy Laboratories Ltd.



கலைப்பொருள் சிறப்பிதழ்

"செய்கூலி இல்லை. சேதாரம் இல்லை" என்று நகைக் கடைக்காரர்கள் விளம்பரப்படுத்திக் கொண்டிருக்க, இந்தக் காலத்து, இளம் பெண்கள் என்னடாவென்றால், பொன்னை ஒதுக்கிவிட்டு, மண்ணை விரும்பிக் கொண்டிருக்கிறார்கள். அதுவும் ஜீன்ஸ் - பனியன், மிடி - டாப்ஸ் இவற்றுக்கு செம்மண்ணில் கலைநயத்துடன் உருவாக்கப்பட்ட டெரகோட்டா நெக்லஸ் காதணி செட் தான் மேட்ச் என்று சர்டிபிகேட்டே கொடுக்கிறார்கள்.



# மண் வாசனைப் பெண்!

"நாட்டியத்துக்கு விதவிதமான பாரம்பரியமான நகைகள் அணிவேன். காஷுவலாக அணிய டெரகோடா நகைகள் சிறந்தது. வித்தியாசமான அழகு மட்டுமல்ல; பாதுகாப்பும் கூட" என்கிறார் ஐஸ்வர்யா நாராயண்சுவாமி. இவர் அனிதா குஹாவின் பிரதான சிஷ்யை.

சென்னை, சேத்துப்பட்டில், 'கிராப்ட்டோ மேனியா' என்ற பெயரில் டெரகோடா ஐட்டங்களை தினுசு தினுசாக வடிவமைத்து விற்பனையும் செய்து வருகிறார் அனிதா கோயல்.

"மேற்கு வங்காளத்தில் கிடைக்கிற ஒருவித பிரத்யேக களிமண்ணைத்தான் பயன்படுத்துகிறோம். புதுப்புது டிசைன்களை வரையச் செய்து, கொல்கத்தா மண்பாண்ட கலைஞர்களிடம் கொடுத்து உருவாக்குகிறேன்" என்கிறார் அனிதா.

விலை எப்படி?

அறுபது எழுபது ரூபாயிலிருந்து, இருநூறு ரூபாய் வரை. புதுமை விரும்பும் இளம் பெண்கள் ஆசையாக அணிகிறார்கள். மண் வாசனைப் பெண்கள்!



சந்திப்பு : பாரதி
படங்கள் : ஸ்ரீஹரி


கல்கி இண்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com

புதிய ஈ மெயில் முகவரிகள் :

டிடோரியல் : kalki@kalkiweekly.com சந்தா : subscription@kalkiweekly.com பிற தகவல்கள் : info@kalkiweekly.com

மாநகராட்சி மற்றும் உள்ளாட்சி அமைப்புகளில் மோதல், அடிதடி, ரகளை. எதிர்க்கட்சித் தலைவர் பொறுப்பிலிருந்தால் அதிகாரம் குறைப்பு, பதவி பறிப்பு, இந்த நிலை மாறாதா?

''சுட்டாயம் மாற்ற முடியும்'' என்கிறார் ஓய்வு பெற்ற ஐ.ஏ.எஸ். அதிகாரி ஏ.கே. வேங்கடசுப்பிரமணியன். ''உள்ளாட்சிகளுக்குக் கட்சி சார்பில்லாமல் தேர்தல் நடத்தப்பட்டாலே விடிவு காலம்'' என்று பல தன்னார்வ அமைப்புகளுடன் இணைந்து போராடுபவரைச் சந்தித்தோம்.



# உருப்படுமா உள்ளாட்சிகள்?

“உள் 'சுய' ஆட்சி (Local Self Administration) தான் உள்ளாட்சி என்று மருவி வந்திருக்கிறது. முன்பு ஸ்தல சுயாட்சி என்று அழைத்தார்கள். உள்ளாட்சிகளுக்கு, சட்ட மன்றம், பாராளுமன்றம் போல் சட்டமியற்றும் அதிகாரம் இல்லை. குப்பைகளை அள்ளுதல், சாக்கடை, தெரு விளக்குகள், குடிநீர் விநியோகம், ஆகிய பணிகளை மேற்கொள்வதுதான் உள்ளாட்சி அமைப்புகள். உள்ளாட்சித் தேர்தல்கள் கட்சி அடிப்படையில் நடக்க வேண்டிய அவசியமேயில்லை. அந்தந்தப் பகுதியில் உள்ள மக்கள் தன்னார்வ அமைப்புகள் மூலமோ, குடியிருப்புச் சங்கங்கள் மூலமோ தமது பகுதியில் தாம் விரும்பும் ஒரு நல்லவரைத் தேர்ந்தெடுத்து, தேர்தலில் நிற்க வைத்து அவரை வெற்றி பெற வைக்கலாம். இப்போது ஊராட்சி மன்றத்துக்குக் கட்சி அடிப்படையில் தேர்தல்கள் கிடையாது. இதையே ஊராட்சி ஒன்றியம், பேரூராட்சி, நகராட்சி, மாநகராட்சி ஆகிய அமைப்புகளுக்கும் கொண்டு வர முடியும். இதை மாநில அரசுகள் நினைத்தால் செய்ய முடியும். இப்படிக் கட்சி சார்பின்றி உண்மையான சேவை மனப்பான்மை கொண்ட மக்கள் தேர்ந்தெடுக்கப்பட்டால் மட்டுமே உள்ளாட்சிகளில் நல்லாட்சி மலரும். நல்லவர்கள் அதிகம் செலவு செய்யாமல் பொது வாழ்வில் ஈடுபட உள்ளாட்சி அமைப்புகள்தான் ஒரே வழி. கட்சி அடிப்படையில் நபர்கள் தேர்ந்தெடுக்கப்படுவதால் அந்தந்த கட்சிகளின் அரசியல் ஆதாயத்திற்கு ஏற்ப உறுப்பினர்கள் செயல்பட வேண்டியதாகயிருக்கிறது. இதனால் போட்டி, பொறாமை, மோதல், அடிதடி, ரத்தக்களறி என்று நடக்கின்றன. மக்கள் நலப்பணிகள் பின்னுக்குத் தள்ளப்படுகின்றன. முதலமைச்சரின் படத்தை வைப்பதிலும் எடுப்பதிலும் மோதல்கள் உருவாகின்றன. இந்த கேவலமான நிலை ஒழிக்கப்பட வேண்டுமென்றால் கட்சி அடிப்படையின்றி உள்ளாட்சித் தேர்தல்கள் நடக்க வேண்டும். அதற்கு முன் வாக்காளர்களுக்கு விழிப்புணர்வு ஏற்படுத்த வேண்டும். எல்லோரும் வாக்குச் சாவடிக்கு வந்து வோட்டுப் போட வேண்டும்.

எங்கள் வார்டில் (152) எவ்

வளவோ விழிப்புணர்வு ஏற்படுத்தியும் பதிவானது 26 சதம் வோட்டுக்கள்தான். இத்தனைக்கும் 90 சதம் படித்த மக்கள் வாழும் பகுதி. இவர்களே இப்படி விட்டேத்தியாக இருந்தால் ரவுடிகளும், சமூக விரோதிகளும், கிரிமினல்களும்தான் உள்ளாட்சி மன்றங்களில் பவனி வருவார்கள். பொதுவாகவே, சமூக சேவையில் மக்களுக்கு நாட்டம் குறைந்து போய்விட்டது. 'நான்' 'எனது' என்று நாம் மிகவும் சுருங்கிப் போய்விட்டோம். நம்மை உடனடியாக, நேரடியாக பாதிக்காத எதைப் பற்றியும் நாம் கவலைப்படுவதில்லை.

"மற்றவர்களைப் பற்றிய அக்கறையே நமக்கு இல்லாமல் போய்விட்டது. இந்த மனோபாவம் மாற்றப்பட வேண்டும்" என்கிறார் ஏ.கே. வேங்கடசுப்பிரமணியன்.

"சென்ற மாநகராட்சித் தேர்தலில் 152வது வார்டில், கட்சி சார்பில்லாமல் மக்கள் நற்பணி மன்றங்களின் சார்பில் வனஜா கிருஷ்ணமூர்த்தி என்பவரை நிற்க வைத்தோம். ஆனால் அண்ணா பல்கலைக் கழகத்தில் வாக்கு எண்ணிக்கை நடந்த போது ஆளும் கட்சியினர் செய்த தில்லுமுல்லு காரணமாக அந்த வேட்பாளரின் வெற்றி தடுக்கப்பட்டது.

"அப்போது நடந்த முறைகேடுகளை எதிர்த்து நீதிமன்றம் சென்றுள்ளோம். எங்கள் வேட்பாளருக்கு விழுந்த வோட்டுக்களை எங்கள் கண்ணெதிரிலேயே ஆளும் கட்சித் தொண்டர்கள்(?) மையை ஊற்றி, செல்லாதவைகளாக மாற்றினார்கள். அரசு அதிகாரிகள் எவ்வளவோ தடுத்தும், அந்த அடாவடித்தனத்தை நிறுத்த முடியவில்லை. தேர்தல் வழக்கொன்றை மக்களே பதிவு செய்திருப்பது இந்தியாவிலேயே இதுதான் முதல் முறை. வரும் உள்ளாட்சித் தேர்தலில் மின்னணு வோட்டுப் பதிவு கருவி பயன்படுத்த வேண்டுமென்று போராடப் போகிறோம்."

**"இப்போது ஸ்டாலின் இரண்டாவது முறையாகப் பதவியேற்றது செல்லாது என்று பழைய முனிசிபல் சட்டத்தின் அடிப்படையில் தீர்ப்பு சொல்லப்பட்டுள்ளதே?"**

"அவர் வேட்புமனு தாக்கல் செய்தபோதே தேர்தல் அதிகாரிக்கு இதுபோன்ற விதியிருப்பது தெரிந்திருக்க வேண்டுமே! அப்போதே மனுவைத் தள்ளுபடி செய்திருக்கலாமே! ஏன் செய்யவில்லை? தவிர அப்போது, மற்ற கட்சிகளும் அவர் மனுதாக்கல் செய்ததை ஆட்சேபிக்கவில்லையே!"

**"இப்போது மீண்டும் தேர்தல் நடக்கும் பட்சத்தில் தி.மு.க.வே வெற்றி பெற்றால் மாநகராட்சியின் பழைய கதை தானே தொடரும்! உருப்படியாக ஒன்றும் நடக்காதே!"**

"இதற்குத்தான் கட்சி அடிப்படையிலேயே தேர்தல்கள் வேண்டாமென்று சொல்கிறோம். உள்ளாட்சியில் நல்லாட்சி வேண்டுமென்றால் வெளியாட்சியை (அதாவது கட்சி ஆட்களை) ஒழிக்க வேண்டும்."

**"உள்ளாட்சி மன்றங்கள் நிதி ஒதுக்கீட்டுக்கு மாநில அரசைச் சார்ந்திருக்கையில் சுதந்திரமாக இயங்க வாய்ப்பு இருக்கிறதா?"**

"உள்ளாட்சிகளே தங்கள் நிர்வாக மற்றும் மக்கள் நலப்பணிகளுக்கு வரிகள் போட்டு வருமானத்தைத் தேடிக்கொள்ள வேண்டும். இப்போது, கட்சி சார்பில் ஆட்கள் உள்ளாட்சிகளில் இருப்பதால், அடுத்த தேர்தலை மனத்தில் வைத்து நல்ல பெயர் வாங்க, வரி போடாமல் காலம் தள்ளப் பார்க்கிறார்கள். இது தவறான அணுகுமுறை. மேலும், உள்ளாட்சிகள் நம்மிடம் வசூலிக்கும் சொத்து வரி மற்றும் தொழில் வரி ஆகியவற்றிலிருந்து கல்வி, நூலகம் போன்றவற்றிற்கும் செலவிட வேண்டும். ஆனால் இப்போது என்ன நடக்கிறது? கல்விக்கு ஒதுக்கப்படும் தொகை உள்ளாட்சி அமைப்புகள் நடத்தும் கல்விக்கூடங்களுக்குச் செலவழிக்கப்படுவதில்லை. இப்படிப் பல நிதி முறைகேடுகள் உள்ளன. அரசியல் சட்ட திருத்தங்களில் சொல்லப்பட்ட அதிகாரங்களை உள்ளாட்சிகளுக்குக் கொடுக்காமல் மாநில அரசு டபாய்க்கிறது. எனவே அதிகாரப் பரவல் மூலம் உள்ளாட்சிகள் தங்கள் தேவைக்கான நிதியை தாங்களே உருவாக்கிக் கொள்ள முடியும்.

சந்திப்பு : **ப்ரியன்**

படம் : **ராஜன்**



"என்ன நாரதரே! எப்பொழுதும் சண்டை பிடிக்கும் நம் தேவிகள் இப்போது எந்தச் சண்டையும் போடுவதில்லையே ஏன்?"

"பிரபு, பூமியிலிருந்து கேபிள் கனெக்ஷன் கொடுத்ததிலிருந்து தேவியர்கள் சீரியலில் மூழ்கிக் கிடக்கிறார்கள், எங்கே அவர்களுக்குச் சண்டை போட நேரம்!"

- சகிதா முருகன்

• வளர்த்த கவிஞர்கள்!

● கே. சங்கர், சென்னை - 13.

? இலங்கையில் விடுதலைப் புலிகள் இயக்கத்திற்குத் தடையை நீக்கியுள்ளது எதைக் காட்டுகிறது?

! விரைவில் மீண்டும் தடைவிதிக்க நேரும் என்பதை.

● ஜி. நீலா, மன்னார்குடி.

? 'மகசேசே' விருதுக்கான பரிசுப் பணத்தை மட்டும் சந்தீப் பாண்டே திருப்பிக் கொடுத்தது பற்றி...?

! அவ்வாறு செய்திருக்க வேண்டாம். சொந்த உபயோகத்துக்காக வைத்துக் கொள்ளாமல் பிற நல்ல காரியங்களுக்குக் கொடுத்து உதவியிருக்கலாம்.



## நீங்கள் கேட்டவை - தராசு



• முன்னும், பின்னும்

# விட்டல் விட்ட இடத்தில் சங்கர் தொடர்வாரா?

● ஜி.கே.எஸ். மூர்த்தி, கோபிசெட்டிப்பாளையம்.

? இறைபக்தி. தேசபக்தி - எது முக்கியமானது?

! இரண்டும் வெவ்வேறல்ல; ஒன்றே என உணர்ந்தால் நாட்டில் மதக்கலவரங்கள் இராது; முன்னேற்றம் இருக்கும்.

● ஆர். வஸந்தா, திருவனந்தபுரம் - 4.

? ரியோ டி ஜெனிரோவில் நடக்கும் உலக பெட்ரோலிய காங்கிரஸில் பங்கேற்க நம் நாட்டிலிருந்து 51 பேர் அடங்கிய குழுவை அழைத்துச் சென்றுள்ளாரே ராம் நாயக். (குறைந்தபட்ச விமானக் கட்டணம் 80,000 ரூபாய்) நாடு இருக்கும் இருப்பில் இந்த ஆடம்பரம் அவசியமா?

• காத்த மௌனம்!



! பெட்ரோலியம் காங்கிரசுக்கு நம் பிரதிநிதி போக வேண்டியதுதான். ஆனால் 51 பேர் என்பது பகீர் செய்தி. உண்மையாயின், 'ராம் அநியாயக்' என்ற பட்டத்துக்கான தமது தகுதியை உயர்த்திக் கொண்டிருக்கிறார் அமைச்சர்.

● டி. சுப்ரமணியன், மேலையூர்.

**? சோனியா காந்தி பிரதமர் ஆகக் கூடாது என்பதற்காக இந்தியா முழுவதும் பிரசாரம் செய்யத் தயாராய் இருப்பதாக ஜெயலலிதா கூறுகிறாரே?...**

! அடேயப்பா, என்ன வேகம்! சோனியாவைப் பிரதமராக்கிவிட்டுத்தான் மறுகாரியம் பார்ப்பார் போலிருக்கிறது!

● சுதாமதி, மதுரை.

**? சென்ற ஆண்டு வினாயக சதுர்த்தியில் குரோர்பதி வினாயகர்; இந்த ஆண்டு 'பாபா' வினாயகர்! இப்படி வருடா வருடம் கடவுளுக்கு ஃபான்ஸி டிரெஸ் போடுவது மரியாதைக் குறைவு இல்லையா...? சாஸ்திர விரோதமில்லையா?**

! மஞ்சள் தூளைப் பிடித்து வைத்து, 'பிள்ளையார்' என்று பூஜிக்கும் வழக்கம் நம் சம்பிரதாயத்தில் ஆண்டாண்டுக் காலமாக இருக்கிறது. அதன் அர்த்தம் என்ன? 'எளிமையாக என்னை எண்ணிப் பார்; ஒரு அருகம்புல் போட்டால் போதும்; மனத் தூய்மையும் மெய்யான பக்தியும் தான் முக்கியம்; ஆடம்பரம் அல்ல' என்பதுதான். வேறென்ன சொல்ல!

● பி.எம். வள்ளி, மதுரை - 16.

**? காங்கிரஸ் – த.மா.கா. இணைப்பு என்பது சைபரும் சைபரும் சேர்ந்தது போல்தான் என்கிறாரே சு. சுவாமி..?**

! இப்படி ஒரு சைபர் சொல்வதால் அதற்கு மதிப்பில்லை.



• பூண்ட உறுதி!



• உதிர்த்த உமிச்சொல்!

● ராஜிராதா, திருச்சி - 14.

**? 'பாபா' ரிலீஸ் ஆகும் முன் பத்திரிகைகள்தான் ஆஹா ஓஹோ என்று புகழ்ந்தன. படம் ரிலீஸ் ஆன ஒரே நாளில் 'தண்டம்' என எழுதிமுடித்துவிட்டன. இப்படிப் புகழ்ந்திருக்கவும் வேண்டாம், இகழ்ந்திருக்கவும் வேண்டாம் என வாசகர்கள் நினைப்பது சரியா...?**

! படம் ரிலீஸ் ஆகும் முன் செய்திகள் வருகின்றன. ரிலீஸ் ஆன பிறகு விமர்சனங்கள் எழுதப்படுகின்றன. இரண்டுக்கும் வித்தியாசம் தெரியாமல் குழப்பிக் கொண்டால் தடுமாற்றம் ஏற்படத்தான் செய்யும்.

● வி. ரூபஸ், கோவை - 37.

**? அன்டோனியா மெய்னோவின் மௌனம்?**

---

❒ ரூ. 100/- பரிசு பெறுபவர்:
எம். ஆரோக்கியதாஸ்,
கர்ணன்பிள்ளைதெரு,
கூடலூர் – (தே.ஏ)
தேனி மாவட்டம் – 625 518

* ரூ. 50/- பரிசு பெறுபவர்:
ஜி.கே.எஸ். மூர்த்தி,
40, கருமாயா வீதி – 4,
வடக்குப் பகுதி,
கோபிசெட்டிப்பாளையம் – 638 452

! புத்திசாலித்தனமானது: வலிமையானது!

● **உமரி பொ. கணேசன், மும்பை - 37.**

***? அன்னதானம் என்ற பெயரில் கோவில்களை ஹோட்டல்களாக மாற்றி விட்டார்களே... இதனால் கோவில்களின் புனிதம் கெடாதா...?***

! உங்கள் ஆதங்கத்தில் அர்த்தம் இருக்கிறது. கோவில் சோம்பேறி மடம் ஆகிவிடக் கூடாது என்பதால்தான் அந்தக் காலத்தில், அவற்றுக்கு வெளியே அன்னச்சத்திரம் கட்டி வைத்தார்கள்.



• 'ஜே' கோஷ...

● **பொன்விழி, அன்னூர்.**

***? ம.தி.மு.க.வைத் தடை செய்தால், நெசவாளர் பிரச்னை தீருமா? காவிரி நீர் கிடைக்குமா? வழக்கறிஞர்கள் பிரச்னை தீருமா...? அரசு கல்லூரி ஆசிரியர்கள் போராட்டம் வாபஸ் பெறப்படுமா...?***

! அதைப் பற்றியெல்லாம் யாருக்குக் கவலை? அதிகார பலம் பிரகடனமாகும்; அது போதுமே!

● **சி.எம். குமார், மதுரை - 1.**

***? கவிஞர் மீராவின் மறைவு...?***

! மரபுக் கவிதையின் மண் பார்த்து, புதுக்கவிதையின் விண் பார்த்தவர். மீரா தனி மனிதரல்ல; அவர் ஓர் இயக்கம் என்பார் கவிஞர் இந்திரன். அது உண்மைதான். ஊற்றுக் கண்களாகத் தோன்றிய இளம் கவிதை சக்திகளை, நதிகளாகப் பிரவாகம் எடுக்க வைத்தவர் அவர். மீரா போன்ற பேராசிரியர்கள் புதுக் கவிதை எழுதியபோதுதான் தமிழகம் நிமிர்ந்து உட்கார்ந்து அதற்கு இலக்கிய அந்தஸ்தும் அளிக்க முன் வந்தது. குழுக்களாக விரிந்த தமிழிலக்கிய உலகில் அவர் ஒரு ஜனநாயகவாதி.

● **எஸ். ராமசாமி, மேட்டுப்பாளையம்.**

***? வீரப்பனுக்குப் பொது மன்னிப்பு வழங்கினால், அவனைப் பிடிக்கும் முயற்சியில் கோடி கோடியாகச் செலவாகிற பணத்தையாவது மிச்சப்படுத்தலாமே...?***

! பணத்தை மிச்சப்படுத்தி நாட்டில் விஷத்தை விதைக்கும் முடிவாகவே அது அமையும். மேலும் சில வீரப்பன்கள் தோன்றி வளரக் காரணமாகும்.

● **கே. தெய்வசிகாமணி, சென்னை-30.**

***? ஊழல் தடுப்பு நடவடிக்கைகளை, விட்டல் விட்ட இடத்தில் சங்கர் தொடர்வாரா...?***

! 'ஜே ஜே விட்டல்!' என்று சொல்லிக் கொண்டே லஞ்ச ஊழல் புரிந்தவர்கள் இனி 'சங்கரா சங்கரா' என்று கூறியபடி லஞ்ச – ஊழல் புரிவார்கள். லஞ்ச - ஊழலை இப்படியெல்லாம் ஒழித்து விட முடியாது. அதற்கு, minimum government; maximum freedom, என்ற கொள்கை முற்றிலுமாக அமுலாக வேண்டும்.

● **எம். ஆரோக்கியதாஸ், கூடலூர்.** ❑

***? காவல் நிலையத்தில் புகார் கொடுக்க வரும் நபர்களிடத்தில் காவல்துறை அதிகாரிகள் 'வாயா!' 'போயா!' என்று கூறுகிறார்களே. அதையே புகார் கொடுக்க வருவோர் திருப்பிக் கூறினால் அதிகாரிகள் ஏற்றுக் கொள்வார்களா?***



• ...மன்னர்கள்!

! பின்னி எடுத்து விடுவார்கள்! 'ஐயா' என்பது மரியாதைக்குரிய சொல்தான். ஆனால் அதை உச்சரிக்கும் விதத்தில் அவமரியாதை தொனிக்கிறது. காக்கி உடுப்புக்கே உரிய கர்வத்தைக் கட்டுப்படுத்தவும் மக்களின் சேவகர்கள் என்ற எண்ணத்தை உருவாக்கவும் பண்பாடு கற்றுத் தரவும் சிறப்பு வகுப்புகளில் தனிப் பயிற்சி தேவை.

● **நீ. தமிழ் அமுதன், சென்னை – 24.**

***? போலிச் சாமியார், போலி டாக்டர் போல போலி அரசியல்வாதியை எப்படிக் கண்டுபிடிப்பது...?***

! அவரது வீட்டில் அதிரடி ரெய்டு நடத்தினால், எல்லாக் கட்சிகளின் கரை வேட்டிகளும் அகப்படலாம். மனைவியை ஒரு கட்சியிலும் மகனை இன்னொன்றிலும் உறுப்பினராக்கியிருக்கலாம்.

# திருமந்திரம்

**சலுகை விலை ரூ.225 மட்டுமே**

**மூலமும் தெளிவுரையும் 1800 பக்கங்கள்**

**3 தொகுதிகள் ரூ.450**

தமிழ் இலக்கியப் பரப்பில் பல்லாயிரம் பாடல்கள் உண்டு. அவற்றில் உள்ள எண்ணற்ற அடிகள் அனைத்தையும் யாரும் எப்போதும் நினைவில் வைத்திருப்பதில்லை. ஆனால் சில அடிகளை நாம் மறப்பதே இல்லை. 'தமிழ்' என்றவுடனே நினைவுக்கு வரும் மிகச் சிறந்த அடிகள்

"ஒன்றே குலம் ஒருவனே தேவன்"

"யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்"

என்பவை. இவற்றை அருளியவர் சித்தரும், சிவயோகியுமான **திருமூலர்** ஆவார். இவர், நந்தியிடம் உபதேசம் பெற்றவர். தமிழகத்தில் ஒரு ஞானப்பரம்பரையை உருவாக்கிய சிவயோகி. தில்லையில் பதஞ்சலி முனிவருடன் இறைவனின் திருக்கூத்தைக் கண்டு களித்தவர்; திருவாவடுதுறைக் கோயிலில் இருந்த ஓர் அரசமரத்தடியில் மூவாயிரம் ஆண்டு சிவ யோகத்தில் அமர்ந்து, ஆண்டுக்கு ஒரு பாட லாக மூவாயிரம் பாடல் பாடியவர். இந்த 3000 பாடல்களைக் கொண்ட இத் திருமந்திரம், சைவத் திருமுறைகளுள் பத்தாம் திருமுறையாகும்.

சைவ சித்தாந்தத்தின் அரிய கருத்துக்கள் எளிய சொற்களில் விரைவாகவும், இனிமை யாகவும் எப்படி வெளிவருகின்றன என்பதைக் காணுங்கள்.

திகைக்கின்ற சிந்தையுள் சிங்கங்கள் மூன்று
நகைக் கின்ற நெஞ்சகள் நரிக்குட்டி நான்கு

இதில் அமைந்துள்ள தத்துவக் கருத்துக்கள் எண்ணி எண்ணி மகிழத்தக்கன.

திருமூலரின் தலையான கொள்கை அன்பே சிவம் என்பதாகும். இதனை அறியாதார் அறிவிலார் என்பது அவருடைய கருத்து.

அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்

சிவன் அன்பு வடிவானவன் என்னும் இவ் வுண்மையை வற்புறுத்தும் இத் திருமந்திரமே சைவசித்தாந்த முதல் நூலாகும். இதனைக் கொண்டே பதினான்கு சித்தாந்த நூல்களும் எழுந்தன. சித்தாந்தம் என்ற தொடரை முதல் முதலில் வழங்கியது இந்நூல்.

இந்நூலில் அறம்
பேசப்படுகிறது. தத்துவம்
பேசப்படுகிறது. சமயம்
பேசப்படுகிறது. எல்லாவற்றுக்கும்
மேலாக இதன் ஆசிரியர்
யோகத்துக்குத் தனி இடம்
கொடுத்துள்ளார். அதாவது,
இந்நூலில் இல்லாத எப்பொருளும்'
இல்லை எனலாம்.

தோத்திரமாகவும், சாத்திரமாகவும்,
வாழ்க்கை நூலாகவும் அமைந்த
'திருமந்திர' நூலினை அனைவரும்
கற்றுணர வேண்டும் என்ற நோக்கில்
தெளிவான உரையோடு
வெளியிடுகிறோம். மகாயோகியான
திருமூலரின் சிந்தனைகளைத் தாங்கிய
திருமந்திரம் அனைவர் கையிலும்
திகழ்வதாக!

இந்நூலினைத் தபாலில் பெற,28.9.2002 க்குள் கடிதம் எழுதுக. மூன்று தொகுதிகளையும் V.P.P. யில் அனுப்புகிறோம். சலுகை விலை, தபால் மற்றும் கட்டுச் செலவு சேர்த்து ரூ.250 மட்டும் செலுத்தி நூல்களைப் பெற்றுக் கொள்ளலாம். நேரில், 28.9.2002க்குள் ரூ.225 மட்டும் செலுத்தி நூலினை உடனே பெற்றுக் கொள்ளலாம். நேரம் : காலை 10 மணி முதல் இரவு 8 மணி வரை. இடைவேளை யின்றி. ஞாயிறு மற்றும் தமிழக அரசு விடுமுறை நாட்களில் விற்பனை இல்லை.

கடிதம் எழுத வேண்டிய முகவரி :
**வர்த்தமானன் பதிப்பகம்**
15. சரோஜினி தெரு, தியாகராயநகர், சென்னை-17.
(உஸ்மான் சாலை - கீதாஞ்சலி ஹோட்டல் அருகில்)
☎ : 435 0561.

**இச்சலுகை 28.9.2002 வரை மட்டுமே !**

கோயமுத்தூர் விஜயா பதிப்பகத்திலும் இதே சலுகை விலை ரூ.225யினை மட்டும் (நேரில் 28.9.2002க்குள்) ரொக்கமாகச் செலுத்தி நூலினைப் பெறலாம். விஜயா பதிப்பகம், கோவை. ✆ : 394614, 382614.



கலைப்பொருள் சிறப்பிதழ்

## சீதா ரவி

"என் செல்லம் பெத்த செல்லமே!
என் அன்பு பெத்த குஞ்சலமே
என் ஆசை பெத்த மணியே
என் மணி பெத்த மகுடமே
என் மகுடத்தின் சிகரமே
என் எல்லையில்லா இன்பமே!"

_ பாட்டி இப்படித்தான் கொஞ்சுவாள் என்னை. மூச்சுத் திணற அவள் பிடிக்குள் சிக்கியிருக்க எனக்குத் துளிக்கூட பிடித்ததில்லை. அதிலும் ஹேமா பாண்டி விளையாடக் காத்திருக்கிற நேரத்தில் இப்படிச் சிறைப் பட்டு முத்த மழையில் நனைந்து கொண்டிருப்பது நேர விரயம் என்று கோபம் வரும்.

எனினும் பாட்டியிடம் பின்னிக் கொள்ளத்தலையை ஒப்படைத்துவிட்டால், இந்தச் சீராட்டலையும் அவளது சொல்லாட்சியையும் சகித்துக் கொண்டுதான் ஆக வேண்டும். அம்மாவைப் போல் சட்டென்று உச்சி முகந்தோ அல்லது ஒரு கணத்தில் கன்னத்தைத் தடவியோ அனுப்பி வைக்கத் தெரியாது அவளுக்கு. சமையலறை சாம்ராஜ்யத்தையும் புழக்கடை தோட் டத்தையும் ராஜாங்கமாய் ஆண்டு அனுபவிப்பது போல், பேரன் பேத்திகளை அனுபவிப்பதும் அவ்வப்போது அலட்சியம் செய்வதும் கூட தன்னுடைய பிறப்புரிமை எனக் கருதி வாழ்ந்தவள்.

இப்போது நினைத்துப் பார்க்கையில் அவளது கவிதையுணர்வுதான் எல்லாவற்றைக் காட்டிலும் வியப்பூட்டுகிறது. கையெழுத்தின் கோணலும் எழுத் துப் பிழைகளும் அவள் கடைசிக் காலம் வரையிலும் மாறவில்லை. ஆனால் என் குழந்தையைத் தொட்டிலி லிட்ட தினத்தில் புதிதாக ஒரு பாட்டு கட்டிப் பாடி விட்டாள்:

கவ்விக் கொண்டு
உட்கார்ந்திருந்த
கொப்புகள்,
அலங்கரித்துக்
கொண்டு
மணையில் அமர்ந்த
மூன்று
மணப்பெண்களைப்
போல் பவ்யமாய்
ஜொலித்தன.



"வண்ணச் சிறு தொட்டிலிலே
தாலாட்டுவேன்;
முத்து மாணிக்க கட்டிலிலே
சீராட்டுவேன்..."

வார்த்தைகள் ஏதோ ஒரு நோட்டுப் புத்தகத்தில் பத்திரமாய் இருக்கின்றன. முத்தும், மணியும், மாணிக்கமும் ஆபரணங் களும் மாறி மாறி இடம் பெற்றன

# கல்லிழைத்த குஞ்சலம்



அவளுடைய எளிய கவிதைப் படிமங்களில்.

"குழந்தைக்குக் கூடையைக் கவிழ்த்த மாதிரி தலை நிறைய மயிர் இருக்கு... பெரியவளானால் இழைய வாரிப் பின்னி, கொள்ளுப்பாட்டி ஞாபகமா இதை வைச்சுவிடு..."

அழகான கருக்குப் பையை அவள் என் கையில் திணித்தபோது அதனுள்ளிருப்பது என்ன என்பது உடனே புரிந்துவிட்டது. சிவப்புக் கல் இழைத்த பொன் குஞ்சலம்!

பதினொரு வயதில் நான் பெரியவளான போது பாட்டி முத்து ஆசாரியை வீட்டுக்கு வரவழைத்து ஒன்றரை பவுன் காசைக் கொடுத்துச் செய்யச் சொன்னாள்.

முத்து ஆசாரி தமது சிவப்பு ரெக்ஸின் பையிலிருந்து குட்டி தராசை எடுத்து காசுகளை நிறுத்துப் பார்த்ததும், காகிதம் தரச் சொல்லி தமது இங்க் பேனாவால் கல் பதித்த கொப்புகளுக்கு டிசைன் வரைந்ததும், பதினைந்து முறை திருத்திய பிறகு அதைப் பாட்டி ஏற்றுக் கொண்டதும், 'ரூபாய் நூற்றியிருபது மட்டும் அட்வான்ஸ் பெற்றுக் கொண்டேன்' என்று முத்து ஆசாரி வெள்ளைத் தாளில் எழுதி கையொப்பமிட்டுக் கொடுத்ததும் ஞாபகம் வருகின்றன.

கல்லிழைத்த குஞ்சலம் செய்து வந்த தினத்தில் பாட்டியைப் பார்த்திருக்க வேண்டுமே..! ஒரு பட்ட மகிஷிபோல் அவள் கூடத்தில் அமர்ந்து பார்க்க, தரையில் துணி விரித்து அதன் மீது மூன்று கரும்பட்டுச் செண்டுகளை முத்து ஆசாரி வைக்க, அவற்றைக் கவ்விக் கொண்டு உட்கார்ந்திருந்த கொப்புகள், அலங்கரித்துக் கொண்டு மணையில் அமர்ந்த மூன்று மணப்பெண்களைப் போல் பவ்யமாய் ஜொலித்தன. கொப்புகளின் பூ வடிவங்களில் செக்கச் செவேலென்று கற்கள், அவற்றை இணைத்த பொன்னிழைகள், இடுக்கில் இடுக்கில் எட்டிப் பார்த்த குஞ்சலத்தின் கரும்பட்டு நூல், விரிந்த தாமரையின் கவிழ்ந்த வடிவம் போன்ற அக்கொப்புகளின் முடிவில் கட்டிய முத்துச் சதங்கையின் அடங்கிய வெண்மை, ஒவ்வொரு முத்துத் தொங்கலையும் சீராக அதனிடத்தில் நிறுத்திய மிக மெல்லிய தங்கக் கம்பியின் நுனி முடிச்சு...

இத்தனை நுணுக்கங்களையும் பாட்டி புரட்டியெடுத்து ரசித்ததுபோல் அன்றைய பருவத்தில் எனக்குக் கவனித்து அனுபவிக்கத் தெரியவில்லைதான். ஆனால், மிக அழகான கலைப்பொருள் ஒன்றை எனக்காக பாட்டி செய்ய வைத்திருக்கிறாள் என்கிற மகிழ்ச்சி பெருகிற்று.

பேசிய தொகைக்கு மேலாக இருபத்தைந்து ரூபாய் தரப்பட்டது முத்து ஆசாரிக்கு. நல்ல நாள் பார்த்து என் தலையில் அதை வைத்துப் பாட்டி பின்னித் தொங்க விட்டபோது அவர் வந்து பார்த்து சந்தோஷப்பட்டதோடு "பாப்பாவுக்கு வளை வாங்கிப் போடுங்க" என்று ஐந்து ரூபாய் பணமும் கொடுத்துவிட்டுப் போனார்.

இத்தனை ஆசையாய் எனக்கென்று செய்ததை, கல்யாண நகைகளோடு தர மறுத்துவிட்டாள் பாட்டி. கல்லிழைத்த குஞ்சலம் குடும்பச் சொத்து என்பது அப்போதுதான் எனக்குப் புரிந்தது.

"நாளைக்கு தம்பிக்குக் கல்யாணமானா அவன் பெண்டாட்டிக்கு வைச்சுப் பார்க்கணுமில்லியா... இருக்கட்டும் இங்கேயே" என்று சொல்லிவிட்டாள். உள்ளூர கொஞ்சம் ஏமாற்றமாகத்தான் இருந்தது. 'நித்தியம் என்ன குஞ்சலமா வைத்துப் பின்னிக் கொள்ளப் போகிறோம்!' என்று சமாதானம் செய்து கொண்டாலும் இதைப்போல வேறொன்றை இனி பார்க்க முடியாது என்கிற எண்ணம் என் ஆசையை வளர்த்தது.

தம்பிக்குக் கல்யாணமானபோது சுசீலாவின் தலையில் தான் மீண்டும் கல்லிழைத்த குஞ்சலத்தைப் பார்த்தேன். தோளோடு நின்றுவிட்ட அவள் தலைமுடியின் நுனியில் அது அசிரத்தையாகப் பொருத்தப்பட்டு ஏற்றலும் தாழ்த்தலுமாய்த் தொங்கலாடிய

**"என்னடா கிண்டலா? 'பறப்பன சில வற்றை எழுது'ன்னா மைக், செருப்பு, நாற்காலி'ன்னு எழுதியிருக்கியே..."**

**- தஞ்சை தாமு**



போது முத்து ஆசாரியின் ஞாபகம்தான் வந்தது. தமது கைவண்ணம் இப்படி அல்லாடுவதைக் கண்டால் அவர் எப்படி உணர்வார் என்று யோசிக்கலானேன். அதற்குள் அம்மா அழைத்து இட்ட வேலைகளில் அந்த சிந்தனைகளுக்கு முற்றுப் புள்ளி விழுந்தது.

**சு**சீலாவுக்கு நகைகளிடத்திலே சுவாரஸ்யமில்லையென பாட்டிக்கு முழுதுமாய்ப் புரிந்த பிறகுதான் கல்லிழைத்த குஞ்சலம் என் கைக்கு வந்தது – அதுவும் 'குழந்தைக்கு கூடையைக் கவிழ்த்த மாதிரி தலைமயிர்' என்ற காரணத்தோடு! பத்மா பெயருக்குத் துளியூண்டு தலைமயிரோடு பிறந்திருந்தால் என்னவாகியிருக்கும் என்று நினைத்துப் பார்த்தேன். கல்லிழைத்த குஞ்சலம் என் கைக்கு வராமலே போயிருக்கக் கூடும்.

பாவம் பாட்டி! பத்மா கூடையைக் கவிழ்த்தது போன்ற தன் தலைமுடியை கழுத்தோடு வெட்டிக் கொள்வாள் என்று எப்படி எதிர்பார்த்திருக்க முடியும். குஞ்சலங்கள் – கல்லிழைத்தவையானாலும் சரி அல்லாதவையானாலும் சரி – பத்மாவின் தலைமுறையினருக்கு வெறும் காட்சிப் பொருள்கள்தான்.

இந்த மாற்றத்தை ஏற்கும் வலிகளைப் பாட்டிக்கு வைக்காமல் கடவுள் அவளுக்கு அமைதி தந்துவிட்டார். நான்தான் கிடந்து தத்தளித்துக் கொண்டிருக்கிறேன்.

காலத்தின் போக்குகளுக்குள் தங்களை வார்த்துக் கொண்டு வளரும் என் குழந்தைகளின் ரசனையும் வாழ்வியலும் எனக்குப் பரிச்சயமாக மறுக்கின்றன.

"நீ பரிச்சயப்பட மறுக்கிறாய்" என்பாள் பத்மா.

இருக்கலாம். எப்படியானாலும் சரி, இந்த இழுபறியில் கல்லிழைத்த குஞ்சலங்களுக்கு என்ன அர்த்தம் இருக்க முடியும்...? இனிமேல் என் நரைத்த தலையில் அதை வைத்துப் பின்னி நானே அழகு பார்த்துக் கொள்ள முடியுமா?... பாட்டியின் அழகுணர்ச்சியோடு முத்து ஆசாரியின் கலையுணர்ச்சியும் கைத்திறனும் அதில் அவர் கொண்ட பெருமிதமும் எல்லாமுமல்லவா உதாசீனப்படுகின்றன!

**இ**ப்படியொருநாள் விரக்தியான சிந்தனையில் மூழ்கிய கணத்தில்தான் சௌந்தரத்தின் பெண் வாசலில் வந்து நின்றது.

"அம்மா! அம்மா!"

"யார் வேணும்?"

"சௌந்தரம் மாமி – இங்கே சமையல் வேலை பண்றாங்க..."

"உள்ளே வா!" என்று அழைத்தபோதும் மறுத்துவிட்டு பயத்தோடு பார்த்தது.

சமையலறையிலிருந்த சௌந்தரத்தை அழைத்தேன்.

வெளியே வந்து எட்டிப் பார்த்தவள் ஒரே கணத்தில் புரிந்து கொண்டாள்.

"மாமி, குழந்தை பெரியவளாயிட்டா. நான் இப்போ போயிட்டு நாளைக்கு வரேன்..."

செலவுக்குப் பணம் கொடுத்து அனுப்பி வைத்தேன். தோட்டத்துக் கம்பிக் கதவைத் தாண்டி சௌந்தரம் வெளியேறிய போது அவள் குழந்தையின் தோளை அணைத்து அழைத்துப் போனாள். பாவாடைச் சட்டையணிந்த அந்தச் சிறுமியின் முதுகில் நீண்டு தொங்கிய பின்னலின் முனையில் அசைந்து ஆடியது ஒரு குஞ்சலம். மலிவான பிளாஸ்டிக் முத்துக்கள் பதித்த நைலான் இழை குஞ்சலம்தான்– ஆனாலும் அது அழகாய்த்தான் தோன்றியது – என் பீரோவில் சுருக்குப் பைக்குள் சுருண்டு கிடக்கும் கல்லிழைத்த குஞ்சலத்துக்குச் சற்றும் சளைக்காத அழகாய்த் தோன்றியது. முத்து ஆசாரியும் பாட்டியும் கூட அப்படித்தான் கருதியிருப்பார்கள் என்று சர்வ நிச்சயமாகத் தோன்றியது.



"இதென்ன கல்யாணத்துக்கு வர்றவங்க மேலே பன்னீருக்குப் பதிலா டெட்டால் ஸ்ப்ரே பண்றாங்க...?"

"இது டாக்டர்வீட்டுக் கல்யாணமாச்சே!"

- என்.சி. தர்மலிங்கம்




# நிழலாகத் தொடரும் நிஜமான உறவுகள்!

தொன்று தொட்டுத் தொடர்ந்து வரும் உறவுகள் இனியவை. மிக இனிதான இந்த உறவுகள், குடும்பத்தின் அடுத்தடுத்த தலைமுறைகளுக்கும் நிழல் போலத் தொடர்ந்து வரும் நிஜமான உறவுகளாகத் திகழ்கின்றன.

## சின்னச் சின்ன ஆசை...

"ஒரே நேரத்தில் இரண்டு காரியங்களைச் செய்ய நினைத்தார் தந்தை. என் அக்காவின் திருமணம் மற்றும் சொந்தத்தில் வீடு. நடைமுறை சாத்தியமா? கல்யாணம் சிறப்பாக நடந்தது. வீடு லிண்டல் வரை வந்து நின்று விட்டது. சிலிங் போட நினைத்த போது, கையில் பணம் இல்லாமல் போய்விட்டது. அப்போது அவருக்கு உதவியது ஸ்ரீராம் சிட்டுதான்.

காலம் சுழன்றது. நானும் ஒரு மத்திய அரசு ஊழியனானேன். என் மனத்திலும் ஒரு ஆசை. சொந்தமாக ஒரு வீடு. கூடவே, கொசுறாக இன்னொரு சின்ன ஆசை - ஸ்கூட்டர் வாங்க வேண்டும். வீடு கட்டுவதற்கே ஆபீஸிலும் வெளியிலும் கடன் வாங்க வேண்டிய சூழ்நிலை. இதில் ஸ்கூட்டருக்கு எங்கே போவது? ஸ்கூட்டர் வாங்க எனக்குத் துணை நின்றது ஸ்ரீராம் தான். அது சரி, வீடு? அது வேறு கதை."

எஸ்.ரவிக்குமார்
சென்னை - 44.

தேவைகளைப் பூர்த்தி செய்யவும், கனவுகளை நிறைவேற்றிக் கொள்ளவும், 28 ஆண்டுகளாக, சீட்டுச் சேமிப்பு மூலமாக வாய்ப்புகளை உருவாக்கித் தந்து வருகிறது ஸ்ரீராம் சிட்ஸ்.

**ஸ்ரீராம் சிட்ஸ்**
தமிழ்நாடு (பி) லிமிடெட்
சுப்ரமணியன் பில்டிங், 1, கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை 600 002. போன்: 8461833-39.






# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப்
பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா
- பாரதியார்.

## காவிரி பாலிடிக்ஸ்!

'**வா**ன் பொய்ப்பினும் தான் பொய்யா காவிரி' என்று பண்டைத் தமிழ் இலக்கியங்கள் பலவற்றில் கொண்டாடப்படும் காவிரி, இன்று தமிழ்நாட்டு விவசாயிகளுக்கு எட்டாக்கனியாகிவிட்டது! ஆயிரம் ஆண்டுகளுக்கும் மேலாக அனுபவித்து வந்த ஆயக்கட்டு உரிமைகளுக்காக இன்று போராடவும் வழக்குத் தொடரவும் வேண்டியிருக்கிறது. உரிய வகையில் முறையிட்டு, உச்சநீதி மன்றத்திடம் நாம் பெற்ற நியாயத்தைத் தந்திரத்தால் வென்று, தண்ணீர் விடாமல் ஏமாற்றுகிறது கர்நாடகம்.

காவிரி ஆணையம் கூடி முடிவெடுக்கும் வரை, 1.25டி.எம்.சி. தண்ணீரை கர்நாடகம் தமிழகத்துக்கு விடவேண்டும் என்பது உச்சநீதிமன்ற ஆணை. இவ்வாணைப்படி நடக்க விரும்பாததால், அவசர அவசரமாக ஆணையத்தைக் கூட்டச் சொல்லி பிரதமரை வற்புறுத்தி வெற்றி கண்டுள்ளார் கர்நாடக முதல்வர் எஸ்.எம். கிருஷ்ணா. 1.25 டி.எம்.சி. என்பதை 0.8 டி.எம்.சி. என்று ஆணையம் குறைத்து நிர்ணயித்தது முதல் அநீதி. அந்தத் தண்ணீரையும் தமிழகத்துக்கு அனுப்ப விடாமல் கர்நாடக மாநில விவசாயிகள் மறியல் செய்ய அனுமதிக்கப்படுவது மற்றும் ஓர் அநீதி.



2002 செப்டெம்பர் 22
சித்ரபானு புரட்டாசி 6
மலர் : 61
இதழ் : 8




கர்நாடக நீர்வளத்துறை அமைச்சரின் பேச்சோ, இதுவரை கேட்டறியாத அதிசயமாய் இருக்கிறது. 'காவிரி ஆணையம், மேட்டூருக்குத் தினமும் 0.8. டி.எம்.சி. தண்ணீர் வரவேண்டும் என்றுதான் சொல்லியிருக்கிறதேயொழிய அது கபினியிலிருந்து வரவேண்டும் என்று சொல்லவில்லை. ஆகவே, மழை நீரோ, காட்டாற்று நீரோ, கசிந்துவரும் நீரோ எதுவாயினும் பாதகமில்லை. –0.8 டி.எம்.சி. என்ற கணக்கு வந்தால் போதும்' என்கிறார் அமைச்சர் எச்.கே. பாட்டீல்!

ஆகக் கூடி, கர்நாடக அரசும் முதல்வரும் தமிழகத்துக்குக் காவிரித் தண்ணீர் திறந்துவிட வேண்டியதன் அவசியத்தைக்கூட ஏற்கத் தயாராயில்லை; உச்சநீதி மன்றத்தின் அதிகாரத்தை மதிக்கவும் தயாராயில்லை. அதனால்தான் உச்சநீதிமன்றம் நிர்ணயித்த அளவைக் குறைத்து 0.8 என நிர்ணயிக்கச் செய்தனர்.

'மத்திய அரசிடமும் கர்நாடக அரசிடமும் தமிழகத்துக்கு நியாயம் கிடைக்காது; உச்சநீதிமன்றத்திடம் முறையிடுவதைத் தவிர வேறு வழியில்லை' என தமிழக முதல்வர் ஜெயலலிதா எடுத்துள்ள நிலை மிக நியாயமானது என்பது நிரூபணமாகியிருக்கிறது.

எனினும், கர்நாடக முதல்வர் பிரச்னையை அரசியல் சேற்றில் புரட்டியெடுப்பதுபோல் ஜெயலலிதாவும் செய்வது ரசக் குறைவாயிருக்கிறது.

'மத்திய அமைச்சரவையில் இடம்பெற்றுள்ள தமிழ்நாட்டு அமைச்சர்கள் யாருமே தஞ்சை விவசாயிகளுக்காகப் போராடவில்லை...' என்கிறார் ஜெயலலிதா.

தமிழகத்தின் இதர கட்சிகளிடம் காவிரி குறித்து கலந்தாலோசிக்காமல் தன் போக்கில் தான் முதல்வர் செயல்பட்டார். அவ்வாறிருக்க மத்திய அமைச்சர்கள் இவ்விஷயத்தில் ஒத்துழைக்கவில்லை என்று அவர் குற்றம் சாட்டுவது ஏற்கத்தக்கதல்ல.

'வரவிருக்கிற கர்நாடகா தேர்தலை மனத்தில் கொண்டு அங்கே ஆளுங்கட்சியான காங்கிரசும் மத்தியில் ஆளும் பி.ஜே.பியும் செயல்பட்டுள்ளன, கர்நாடகா விவசாயிகளிடம் நற்பெயர் வாங்குவதற்காகத் திட்டமிட்டு இயங்கியுள்ளன' என்று குற்றம் சாட்டுவது ஒரு வேளை உண்மையாயிருந்தாலும், அக்குற்றச்சாட்டு இப்போதைய நிலைமையை மேலும் சிக்கலாக்குமேயொழிய சீர்ப்படுத்தாது.

உச்சநீதி மன்றத்திடம் மீண்டும் முறையிட்டுள்ள தமிழக அரசுக்கும் தஞ்சை விவசாயிகளுக்கும் நீதி கிடைக்கும் என்று நம்புவோம். ஆனால் அது கிடைப்பதற்குள் இங்கே பயிர்கள் கருகுவதையும் பட்டினிச் சாவுகள் நிகழ்வதையும் எவ்வாறு தடுத்து விவசாயிகளையும் கூலியாட்களையும் காப்பது?




– தமிழக அரசின் சிந்தனையெல்லாம் இந்தத் திசைநோக்கியே திரும்ப வேண்டும்.

திருவாரூர் மாவட்ட சிறுவன் பிரகாஷ் பட்டினியால்தான் இறந்தான் என்பதைத் தனியார் ஆய்வுக்குழு ஒன்று ஆராய்ந்து உறுதிப்படுத்தியிருக்கிறது.

வறட்சி நிவாரணப் பணிகள் திட்டமிடப்பட்டாலும் மக்களுக்குப் பணமும் தானியங்களும் போய்ச் சேருவதில் தடைகளும் முறைகேடுகளும் இருப்பது தெளிவு.

கர்நாடகம் கைவிட்டாலும் நாங்கள் உங்களைக் கைவிடமாட்டோம் என்று தமிழக விவசாயிகளை அரவணைத்துச் செல்வது அத்தியாவசியம். மனிதாபிமான நோக்கில் மட்டுமின்றி, அரசியல் நோக்கிலும் இதுவே அறிவுடைமை. மத்திய, கர்நாடக அரசுகளைக் குறைசொல்வதால் தண்ணீரும் கிடைக்காது; நம் விவசாயிகளின் தவிப்பும் தீராது; அரை வயிறு கஞ்சிகூட கிடைக்காது.

உச்சநீதிமன்றத்திடம் முறையிட்டுள்ள தமிழக அரசு, தற்காலிக அவசர நிவாரணத்துக்குப் போராடுவது ஒரு புறமிருக்க, தமிழகத்தின் ஆயக்கட்டு உரிமைகளைப் பாதுகாக்கும் ஒரு நிரந்தர, சட்டபூர்வமான தீர்வுக்காகவும் போராடி ஜெயிக்க வேண்டும்.

மஹாராஷ்டிர மாநிலத்தில் கிருஷ்ணாவுக்குக் குறுக்காக அணைகட்டி மின் உற்பத்தி திட்டம் தீட்டுவதை இன்று கர்நாடகம் ஆட்சேபிக்கிறது. ஆனால், இதே கர்நாடகம் காவிரிக்குக் குறுக்காக அணைகள் கட்டி தனது விவசாய நில விஸ்தீரணத்தை அதிகப்படுத்திக் கொண்டிருக்கிறது. இந்த முரண்பாடையும் உலகெங்கும் மதிக்கப்படுகிற ஆயக்கட்டு உரிமைகளையும் எடுத்துச் சொல்லி, தமிழகத்துக்கு நீதி கிடைக்கப் பாடுபடுவதுதான் ஒரு சிறந்த அரசின் குறிக்கோளாக இருக்க வேண்டும்.

மக்கள் தொகை பெருக்கத்தால் அனைத்து மாநிலங்களிலும் தண்ணீர்த் தேவையும் உணவுத் தேவையும் அதிகரித்துக் கொண்டேதான் போகும். இன்று 'மழை பொய்த்து விட்டதால் தண்ணீர் விட முடியாது' என்று மறுக்கும் கர்நாடக அரசு, நாளை பருவமழை பொய்க்காமல் பெய்தாலும் அத் தண்ணீரை திசைதிருப்பிப் பயன்படுத்திக் கொண்டு, தமிழகத்தை வாடவிடும் வாய்ப்பு உண்டு. அபரிமித மழையின் போது மட்டுமே அணைக்கட்டுகளைத் திறந்து, தஞ்சை டெல்டா பகுதியை வெள்ளக்காடாக்கி நாசம் செய்வார்கள்!

தமிழகம் எப்போதும் காவிரியின் கடைமடைப் பகுதியில்தான் இருக்கும் என்பதால், கர்நாடகத் துடனான மோதல் தொடரவே செய்யும். உச்சநீதி மன்றம் மூலம் நிரந்தரத் தீர்வு வரப்பெற்றால் மட்டுமே நாம் நிம்மதி பெறலாம். அதுவரை போராடத்தான் வேண்டும்.○



கலைப்பொருள் சிறப்பிதழ்

இரண்டு கைப்பிடியளவு கிழங்குமாவு எடுத்து வசம்பு, வேம்பு, நீர் கலந்து அந்தப் பெண் சப்பாத்திமாவு போல பிசைகிறார். ஈரம் காய்வதற்குள் உடனே கூர்மையான கத்தி கொண்டு சின்ன சின்னதாய்.... வெயிட் வெயிட்.. சமையலறை சமாசாரம் அல்ல. ஓவியத்தில் சிற்பம் என்னும் நவீன வகை ம்யூரல். வேலைப்பாட்டில் மும்முரமாக இருக்கிறார் ஓவியர்



# ஓவியத்தில் சிற்பம்!

ஸ்வர்ணலதா. ரவிவர்மா பாணி ஓவியங்கள் வரைவதில் ஆர்வம் கொண்ட இவர் அவ்வப்போது ம்யூரலுக்குத் தாவுவதும் உண்டாம்.

"கெட்டியான கிழங்கு மாவு, நல்ல பசையுள்ள மண், சலித்த கருங்கல் தூள் கொண்டு ம்யூரல்ஸ் உருவாக்குவது என்னுடைய பாணி. பெரும்பாலும் கிருஷ்ணர், ராமர் என தெய்வ உருவங்களுக்கு முக்கியத்துவம் தருகிறேன். இந்த வகை ஓவிய சிற்பத்தில் செயற்கை வண்ணங் களைப் பயன்படுத்துவதில்லை. எல்லாமே காய், கனி, மலர், இலை என இயற்கையான மூலிகைச் சாறுகள் தான்" என்கிறார் ஸ்வர்ணா.

"அது என்ன கிழங்குமாவு? எந்த ஊர் மண்?" என் றெல்லாம் கேட்டால், சிரித்து மழுப்பி விடுகிறார்... தொழில் ரகசியம்!

சந்திப்பு : லாலி





கலைப்பொருள் சிறப்பிதழ்

தஞ்சாவூர் கலைத்தட்டுக்கு இருக்கும் மவுசு கொஞ்சம் அலாதிதான். பாரம்பரிய கலை அழகு என்பதால் சட்டென்று வசீகரித்துவிடுகிறது. உயர் ரக பித்தளை, செம்பு, வெள்ளி ஆகிய மூன்று வகையான உலோகங்களால் செய்யப்படுகிறது. மையப் பகுதியில் பெரிய அளவில் ஸ்வாமி படமொன்று வெள்ளித் தகட்டினால் ஆன உருவத்துடன் பொருத்தப்பட்டிருக்கும். ஸ்வாமி படத்தைச் சுற்றி விளிம்பு கட்டப்பட்டு அதன் வட்ட வடிவத்தில் அஷ்டலட்சுமிகளின் உருவங்கள் பொறிக்





# தஞ்சை கலையழகு!

கப்பட்டிருக்கும். மேல் விளிம்பில் வெள்ளி, செம்பு என மாறி மாறி நகாசு பூ வேலைப்பாடுகள் நுணுக்கமாகச் செதுக்கப்பட்டிருக்கும். மைய விளிம்புகளில் சின்னஞ்சிறு பித்தளைக் குமிழ்கள் பதிக்கப்பட்டிருக்கும்.

தஞ்சாவூர் கலைத்தட்டுகளின் கலையழகு மாசு படாதிருப்பதற்காக, இப்போதெல்லாம் அத் தட்டுகள் மீது அக்ரிலிக் (வெண்மை) ஷீட்டுகளைக் குவி வட்ட வடிவமாகப் பொருத்தித் தருகிறார்கள். அதனால் பித்தளைத் தகட்டின் மீது கருமை படர்வதில்லையாம்!

> "வெளி நாட்டுக்காரங்க ஆசையா வாங்குவாங்க. இப்ப, அவங்க வர்றதும் குறைஞ்சு போச்சு."

தஞ்சாவூர் கலைத் தட்டுகள் உலகில் வேறெங்கும் தயாரிக்கப்படுவது இல்லையென்பது இதன் தனிச் சிறப்பு. இத் தயாரிப்பு வேலையை, தஞ்சையில் பல குடும்பங்கள் தலைமுறை தலைமுறையாகக் குடிசைத் தொழில் போலச் செய்து வருகின்றன. நாணயக்காரச் செட்டித் தெரு, எல்லையம்மன் கோயில் தெரு,



கரந்தைப் பகுதி முழுக்க, தட்டு தயாரிக்கும் கலைஞர்கள்தான்.

தஞ்சை அரண்மனை வளாகத்தின் உள்ளே, தஞ்சாவூர் கலைத் தட்டு தொழிலாளர்கள் கூட்டுறவு குடிசைத் தொழிற்சங்கம் என்கிற அலுவலகம் ஒன்று இயங்கி வருகின்றது. தமிழக அரசின் தொழில் வணிகத் துறையைச் சார்ந்தது இந்த அலுவலகம். நூற்றியெழுபது உறுப்பினர்கள் உள்ளனர். அவர்கள் தத்தம் தயாரிப்புகளை இக் கூட்டுறவுச் சங்கம் வாயிலாகவும், தங்களையே நேரடியாகத் தேடி வரும் ஆர்டர்கள் மூலமாகவும் விற்பனை செய்து வருகிறார்கள். இக் கூட்டுறவுச் சங்கம் மூலமாக கடந்த ஆண்டு மட்டும் எட்டு லட்ச ரூபாய்க்குத் தஞ்சாவூர் கலைத் தட்டுகளை விற்பனை செய்துள்ளதாகக் கூறுகிறார்கள். ஆனால், நான்கைந்து ஆண்டுகளுக்கு முன்னர் இருந்ததற்கு இதனை ஒப்பிடும்போது, இது மிகவும் குறைவான தொகையே என்கிறார் தொழிற் கூட்டுறவு அலுவலரும் நிர்வாகியுமான ஆர். சாந்தா.

"முன்னே எல்லாம் அரசு விழான்னா, தஞ்சாவூர் கலைத் தட்டுகளை நினைவுப் பரிசாக வழங்கும் நடைமுறை இருந்தது. இப்போ ஏனோ திடீர்னு மாத்திட்டாங்க. வெளி நாட்டுக்காரங்க ஆசையா வாங்கு வாங்க. இப்ப, அவங்க வர்றதும் குறைஞ்சுபோச்சு. அதான் விற்பனை மந்தமாயிடுச்சு'' என்று இவர்கள் சொல்வதற்கு மாறாக உள்ளது தஞ்சாவூர் பூம்புகார் விற்பனை நிலையத்தின் சிறப்பு.

பூம்புகார் விற்பனை நிலையத்தின் கீழ்த் தளத்தில் தஞ்சாவூர் கலைத் தட்டுகள் தயாரிக்கும் தொழிற்கூடமொன்று இயங்கி வருகின்றது. முப்பது தொழிலாளர்கள் வேலை பார்த்து வருகிறார்கள். இங்கு தயாரிக்கப் படும் தஞ்சாவூர்க் கலைத் தட்டுகள் பூம்புகார் விற்பனை மையத்தின் தமிழகக் கிளைகள் பதினான்கு மற்றும் டெல்லி, கொல்கத்தா, பெங்களூர், பாண்டிச்சேரி ஆகிய நகரங்களில் உள்ள பூம்புகார் விற்பனை நிலையங்களுக்கும் அனுப்பப்பட்டு வருகின்றன. இங்கிருந்து கடந்த ஆண்டில் மட்டும் முப்பது லட்ச ரூபாய்க்கு தஞ்சாவூர் கலைத்தட்டுகள் தயார் செய்து அனுப்பி வைக்கப்பட்டுள்ளன. இத் தொழிற்சாலை கடந்த ஏழெட்டு ஆண்டுகளாகவே சிறப்பாகச் செயல்பட்டு வருவதாகக் கூறுகிறார்கள் அதன் தொழிலாளர்கள்.

தஞ்சாவூர் தட்டுகளைப் போலவே குடத்துக்கும் மூன்று வகையான உலோகங்கள். செம்புத் தகட்டினால் குடம் வடிவமைத்துக் கொள்ள வேண்டும். கழுத்துக் கமலத்தில் பூ வேலைகள் வெள்ளியினால் ஜிகினா பட்டன் போல பித்தளைக் குமிழ்கள். மேல்பட்டியில் ராதா ருக்மணி பலவித உருவங்களில், கீழ்ப் பட்டியில் அஷ்ட லட்சுமியின் உருவங்கள் வெள்ளியினால். இடையிடையே நகாசு வேலைகள் பித்தளையில்.

மூன்று தலைமுறைகளாக, தஞ்சாவூர்க் குடங்கள் மட்டும் செய்வதையே பரம்பரைத் தொழிலாகக் கொண்டிருக்கும் குடும்பத்தைச் சேர்ந்த எம். முருகேசனுக்கு வயது நாற்பத்து ஐந்து. அவர் கடந்த இருபத்தியேழு வருடங்களாக இவ் வேலையைச் செய்து வருகிறார். தஞ்சாவூர்க் குடங்கள் ஐந்நூறு ரூபாயிலிருந்து இருபத்தைந்தாயிரம் ரூபாய்க்கும் கிடைக்கின்றன.

குட முழுக்கின்போது புனித நீர் சுமந்து வரவும், வரலெட்சுமி நோன்புக்கும் தஞ்சாவூர்க் குடங்களை விரும்பி வாங்கிச் செல்கின்றனர். "கலையழகு மிக்க தஞ்சாவூர்க் குடங்கள் செய்து தருவோர் இப்பொழுது ஏழெட்டுப் பேரே உள்ளனர்'' என்கிறார் முருகேசன்.

சந்திப்பு, படங்கள்:
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

முன்னோர்களுக்கு திதி கொடுக்கும் வழக்கத்தை விட்டவர்களுக்கும் - மறந்தவர்களுக்கும் தம்மை நினைவுகூறும் குடும்பத்தாருக்கு மஹாளயபக்ஷ காலத்தில் பிதுர்க்கள் பூமிக்கு வந்து நல்லாசி வழங்குகின்றனர்.



# புண்ணியக்ஷேத்ரம் இராமேஸ்வரத்தில் மஹாளயபக்ஷ அமாவாஸை திதியில் அன்னதானம் செய்வோம் வாருங்கள்!

அன்புடையீர், புரட்டாசி மாத மாளயபக்ஷ அமாவாசையன்று, சர்வ கோடி லோகங்களிலுமுள்ள மஹரிஷிகள் உட்பட அனைத்து ஜீவன்கள், தேவதைகள் அனைவரும் பூலோகத்திற்கு வந்து புண்ணிய நதிக்கரைகளிலும், சமுத்திரங்களிலும், இராமேஸ்வரம் போன்ற புனிதத் தலங்களிலும் தர்ப்பண பூஜையை மேற்கொள்கின்றனர். வசு, ருத்ர, ஆதித்ய, பித்ரு தேவர்களே இந்நாளில் தர்ப்பணம் இடுகின்றனர் என்றால் மாளயபக்ஷ மஹிமை பெரிதன்றோ? நம் மூதாதையர்களான பித்ருக்கள், தாம் நினைத்தபடியெல்லாம் பூலோகத்திற்கு வர இயலாது. ஆனால், அமாவாஸை, இறந்த திதி, மாதப் பிறப்பு, மாளயபக்ஷ நாட்கள் போன்ற நாட்களில்தான் அவர்கள் பூலோகத்திற்கு வர அனுமதிக்கப்படுகிறார்கள். எனவே அவர்கள் சூட்சும தேகத்தில் பூலோகத்திற்கு வருகின்ற நாட்களில், நாம் பித்ரு தர்ப்பண பூஜைகளை நிறைவேற்றிட, அவர்கள் அவற்றை இங்கு நேரடியாகப் பெற்று ஆசியளிக்கின்றனர்.

மஹாளயபக்ஷ அமாவாஸை திதியில் அன்னதானம் செய்வது வெகு விசேஷமான தொன்றாகும். அது, தர்ப்பணப் பலன்களைப் பன்மடங்காக நமக்குப் பெற்றுத்தரும் என்பதில் எவ்வித ஐயப்பாடும் வேண்டாம். இராமேஸ்வரத்தில் அமாவாஸை தினத்தில் அன்னதானம் செய்தால் மனித குலம் மாபெரும் புண்ணியத்தை பெறும். புத்திரப்பேறு உண்டாகும். நாகதோஷம் முதலியன நீங்கும். அனைவரும் நலம் பெறுவர்.

★ தடைபட்ட திருமணம், புத்திர பாக்யம் இவை உண்டாகும் ★ வறுமை அகல ★ கொடிய நோய்கள் நீங்க ★ தொழில் மந்தம் நீங்கி முன்னேற்றம் காண ★ பிரிந்தவர்கள் ஒன்றுசேர ★ நீண்ட ஆயுள், கடன் தொல்லையிலிருந்து விடுதலை ★ மனநிம்மதி பெற ★ பெற்றோர், மூதாதையர் நினைவு நாளில் ★ ஆக நீங்கள் நினைத்த காரியம் நிறைவேற நாங்கள் உங்கள் சார்பாக அன்னதானமளித்து, பிரஸாதம் அனுப்பி வைக்கிறோம்.

★ சிறியதொகை மற்றும் அரிசி போன்ற உணவு பொருட்களும் ஏற்றுக் கொள்ளப்படும்.
★ ரூ.500 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் ஒரு ஆண்டுக்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ.1000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ.5000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் பத்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

ரூ.1000 அனுப்பும் அன்பர்களுக்கு கந்தபுராணம் அல்லது பகவத்கீதை புத்தகம் அனுப்பி வைக்கப்படும். ரூ. 5,000 அளிக்கும் அன்பர்களுக்கு கவி-ந்யாய-மீமாம்ஸ சிரோமணி ஸ்ரீமான் **திருவெண்காடு டி.கே. முத்துஸ்வாமி சாஸ்திரிகளால்** தயாரிக்கப்பட்டு பூஜையில் வைத்த யந்திரம் அன்பர்களின் விருப்பத்திற்கேற்ப எந்த யந்திரம் தேவையோ அந்த யந்திரம் இலவசமாக வழங்கப்படும். ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்திக்கு அணில் செய்த ஸேவை போல் இந்த லோகக்ஷேமத்திற்கு நம்மால் இயன்றளவில் உபகாரம் செய்திடுவோம். நேரில் கலந்து கொள்ள அன்புடன் அழைக்கிறோம்.

நன்கொடை அனுப்பும் அன்பர்கள் **GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST, CHENNAI-41** என்ற பெயரில் CHEQUE/D.D./M.O. மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். புனித ஸேவையில் மனப்பூர்வமாக செயலாற்றும் எமது பணிக்கு உங்களது மேலான ஒத்துழைப்பை என்றென்றும் நாடுகிறோம்.

*CHEQUE/D.D./M.O. அனுப்ப வேண்டிய முகவரி :*


## கோபுர தரிசனம் அன்னதான அறக்கட்டளை

## GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST

**M-11/F-4, TNHB FLATS, I MAIN ROAD, THIRUVALLUVAR NAGAR, THIRUVANMIYUR, CHENNAI - 600 041. SOUTH INDIA**

☎: 4900303, 4900603 Fax: (044)4916316 E-mail: gopuradarisanam@yahoo.com


★ நீங்கள் தேடும் மனநிம்மதி அன்னதானத்தில் கிடைக்கிறது ★ ஸர்வேஜனா: - ஸுகினோபவந்து

ஈரோடு மாவட்ட கலெக்டர் கா. பாலசந்திரனைச் சந்திக்கு முன் ஒரு சின்ன முன்னுரை:

ஒரு மாவட்டத்துக்கு, சில திட்டங்களுக்காக ஒதுக்கப்படும் நிதியைப் பயன்படுத்தாமலே, மத்திய அரசுக்குத் திருப்பிக் கொடுத்தால் யாருக்கு நஷ்டம்? அந்த மாவட்ட மக்களுக்குத்தான் இல்லையா? விழுப்புரம் மாவட்டத்துக்கென மூன்றரை கோடி ரூபாய் முதியோர் கல்வித் திட்டத்துக்கு ஒதுக்கப்பட்டிருந்ததாம். பயன்படுத்தாமலே மத்திய அரசுக்கு அதைத் திருப்பி அனுப்பி விட்டார்கள் என்று ஒரு செய்தி காதில் விழுந்தது.

## டாப் டென் கலெக்டர்கள்-3



• தகவல் மேடை இயக்கி வைத்தல்....



• கா. பாலசந்திரன்

# "நாங்களும் செய்திருக்கிறோம் சில சாதனைகள்!"

**மகளிர் - குழந்தைகள் சுகாதாரத்துக்குச் சிறப்பாகப் பணியாற்றியதில், மாவட்டம் முதலாவதாக இருக்கிறது.**

நாம் தேர்ந்தெடுத்த பத்து ஆட்சியரும், ஒரு சில அளவுகோல்களில் வெற்றி பெற்றவர்கள் என்று நாம் சேகரித்த தகவல்களின் அடிப்படையிலேயே இக் கட்டுரைத் தொடரை ஆரம்பித்தோம்.

இனி ஈரோடு கலெக்டரிடம் பேட்டி...

"**சா**தனைகள் படைக்கப்பட வேண்டும் என்ற நோக்கத்தில் நாங்கள் செயல்பட ஆரம்பிக்கவில்லை. ஆனால் இட்டப்படி செயல்பட வேண்டும் என்பதில்

தீர்மானமாக இருந்தோம். சட்டம் - ஒழுங்குப் பிரச்னைகளால் மேம்பாட்டுத் திட்டங்கள் எதுவும் பாதிக்கப்படவில்லை என்பது ஒரு சாதகமான அம்சம். 'பெர் கேபிடா இன்கம்' எனப்படும் தனிநபர் வருமானம் இங்கே சற்றே அதிகம் என்பதும் குறிப்பிடத்தக்கது!'' என்றார் கலெக்டர் பாலசந்திரன்.

''ஆண்களோடு சரிநிகர் சமானமாக, ஒன்பது கோடி ரூபாய் செலவில் கட்டப்பட்டு வருகிறது. ஒன்றே முக்கால் கோடி ரூபாய் ஒதுக்கி, கோபி பக்கத்தில் மேல் பவானி - கீழ் பவானி பாலம் கட்டிக் கொண்டிருக்கிறோம். தாராபுரத்தில் சாலக் கடையில், 1.72 கோடிக்குப் பணிகள் முடிக்கப்பட்டு விட்டன. வெண்டிப்பாளையத்தில் 150 கோடி ரூபாய் செலவில், நீர்மின்சாரம் - ஹைடல் பவர் - உற்பத்தி செய்வதற்கான



• காளிங்கராயன் வாய்க்கால் தூர்வாருதல்...



• டாக்டர் ஜீவானந்தம்

வணிகத் துறையில் மகளிரும் நூறு சதவிகிதம் கவனத்தோடு உழைக்கிறார்கள். குழந்தைகளுக்கு ஐந்து வயது நிரம்பி விட்டாலே விவசாயமோ, வியாபாரமோ எதுவானாலும் அதில் இயல்பாகப் பழக்கி விடுகிறார்கள். வீட்டில் சும்மா உட்கார்ந்திருப்பது என்ற பேச்சே ஈரோட்டைப் பொறுத்தவரை கிடையாது என்பது பெருமைப்பட வேண்டிய அம்சம்'' என்று தொடர்ந்தார் கலெக்டர்.

**• பொதுப்பணித் துறையில், குறிப்பிடும்படி ஏதும் செய்திருக்கிறீர்களா?**

25000 ஏக்கர் பரப்பளவுக்கு விவசாயம் செழிப்பாக நடக்க, மொடக்குறிச்சி பகுதியில் முப்பத்தெட்டு லட்ச ரூபாய் செலவில் குரங்கனோடை அணை கட்டி வருகிறோம். இது காட்டாறு. பணி முடிந்து விட்டால் பலன் கணிசமாக இருக்கும். எம்.பியின் வட்டார நிதியுதவித் திட்டத்தில் பவானி சாகர் கரைகளைப் பலப்படுத்தி இருக்கிறோம். முப்பது லட்ச ரூபாய் இதற்காகத் தரப்பட்டது. நெடுஞ்சாலைத் துறையில் குமாரபாளையத்தையும் பவானியையும் இணைக்கும் பாலம் வேலை நடைபெறுகிறது.

**• சமூகக் காடு வளர்ப்பு, விவசாயத் துறை...**

நூற்றைம்பது ஏக்கர் வனப் பகுதியில் மரக் கன்றுகள் ஒரு லட்சம் நடப்பட்டு வருகிறது. மழை பெய்து நீர் கிடைப்பதால் வளரும் மரங்கள் இவை. மலையில் இருந்து வருகிற தண்ணீர் விவசாயத்தை அழித்து விடாமல் பாதுகாக்க வரப்பு கட்டும் பணிக்கு ஒன்றரைக் கோடி ரூபாய் செலவிட்டிருக்கிறோம். பூச்சிகொல்லி மருந்துகளை அறவே உபயோகிப்பதில்லை என்றும், இயற்கை உரம், வளங்களையே பயன்படுத்துவது என்றும், தீர்மானம் பண்ணி, பல விளைநிலங்களில் பின்பற்றப்பட்டும் வருகிறது.

(நிச்சயம் இதற்கு ஒரு பாராட்டுத் தர வேண்டும்!)

**• 'குறை கேட்கும் தின'த்தில் ஈரோடு சாதனை படைத்திருப்பதாகக் கேள்விப் பட்டோமே?**

முன்பு ஒரு நாளைக்கு நூறு விண்ணப்



"டாக்டர்... எனக்கு மூச்சுப் பிடிப்பு இருக்கு... இடுப்புப் பிடிப்பு இருக்கு... முழங்கால் பிடிப்பு இருக்கு..."

"கொள்கைப் பிடிப்பைத் தவிர வேறே எல்லாப் பிடிப்பும் இருக்குன்னு சொல்லுங்க..."

- தஞ்சை தாமு

பங்கள் குறை கேட்கும் தினத்தன்று கொடுத்தார்கள். இப்போது சுமார் முந்நூறு வரை வருகின்றன. முப்பது நாட்களுக்குள் இவற்றை செட்டில் பண்ணி விடுகிறோம். எண்பது சதவிகிதம் வரை பொதுமக்கள் திருப்தி அடைகிற அளவுக்குக் குறைகள் தீர்க்கப்பட்டுவிடுகின்றன.

**● மீதி இருபது சதவிகிதம்?**

அவை பெரும்பாலும் பட்டா கேட்டு வருபவையாகவும், விதிகளுக்கு முரணானவையாகவும், தகுதியில்லாத காரணங்களுக்காகக் கோரப்படுபவையாகவும் இருக்கின்றன. அவற்றைப் பொறுமையாக எடுத்துச் சொல்லி, சாத்தியமில்லாததற்கான பதிலையும் சொல்லி விடுகிறோம்.

**● விண்ணப்பங்கள் அன்றன்றே பரிசீலிக்கப்படுகின்றனவாமே?**

ஆமாம். வெள்ளக்கோயிலில் பட்டா சம்பந்தமாக ஒரு முறையீடு வந்தது. பிளாக் டெவலப்மென்ட் அதிகாரி அங்கேயே போய், அளந்து காட்டி, பிரச்னையை அப்போதே தீர்த்து வைத்து விட்டார். இது ஒரே ஓர் உதாரணம்தான்.

**● நிர்வாக இயந்திரம் சுறுசுறுப்பாக இயங்கி வருகிறதா?**

ஒவ்வொரு வாரமும் டெபுடி கலெக்டர்களைக் கூட்டி ரிவ்யூ நடத்துகிறோம். அதேபோல பிராந்திய அதிகாரிகளையும் சந்திக்கிறோம். ஒவ்வோர் ஒன்றியத்துக்குமான மேம்பாட்டுச் செயல் திட்டங்களைப் பார்த்துக் கொள்ளச் சொல்லிவிட்டு, இவற்றை இரு வாரங்களுக்கு ஒருமுறை ரிவ்யூ செய்கிறோம். எவ்வளவு பொது விண்ணப்பங்கள் வந்திருக்கின்றன, அவற்றில் எத்தனைக்குப் பதில் அனுப்பப்பட்டிருக்கிறது என்றும், எத்தனை மீதி இருக்கிறது என்றும் மறுபரிசீலனை செய்கிறோம். இது வெகு கவனமாக நடக்கும் பணி. கணக்கம் காண்பிப்பதில்லை.

**● சுற்றுச் சூழலில் கூட அதிக அக்கறை காட்டப்படுவதாக அறிகிறோம்...**

டாக்டர் ஜீவானந்தம், டாக்டர் சரவண பாபு ஆகியோர் உதவியுடன் எக்கோ கிளப் எல்லாப் பள்ளிகளிலும் ஆரம்பித்திருக்கிறோம். இப்போது கல்லூரி மாணவர்களும் இதில் சேர வேண்டும் என்று விருப்பம் தெரிவித்திருக்கிறார்கள். ஆறு கல்லூரிகளில் - கொங்கு ஆர்ட்ஸ், சிக்கைய நாய்க்கர் கல்லூரிகள் உட்பட - இதைத் தொடங்கியிருக்கிறோம். மரக்கன்றுகள் நடுவதோடு நிற்காமல், இவற்றுக்குத் தண்ணீரும் ஊற்றுகிறார்கள்! ஓவியப் போட்டி, கட்டுரைப் போட்டி என்று வைத்து உற்சாகப்படுத்துகிறோம். காவிரி ஆறு பாயும் காளிங்கராயன் வாய்க்கால் மாசுபடாமல் இருக்கச் சுத்தம் செய்தபோது மாணவர்களின் ஒத்துழைப்பு அற்புதமாக இருந்தது.

(பாராட்டை ஆட்சியர் வழியாக மாணவர்களுக்கு வழங்குவோம்!)

**● சுய உதவிக் குழுக்கள், சுகாதாரம், கிராம இணைப்புச் சாலைகள் போன்ற திட்டப் பணிகளில் எந்த அளவுக்குச் சாதனை செய்திருக்கிறீர்**

---

**பாராட்டுகிறார் டாக்டர் ஜீவானந்தம்:**

காளிங்கராயன் வாய்க்கால் காப்புப் பயணம், மாநாடு போன்றவற்றிற்கும், மழை நீர் சேமிப்பு, ஈரோடு மாவட்ட வளங்கள் காப்பு, பிளாஸ்டிக் பயன்பாடு குறைப்பு போன்றவற்றிலும் உணர்வுபூர்வமாக ஆட்சியர் துணை நிற்கிறார். பசுமைவாதிகளுக்குப் பக்கபலமாக இருக்கிறார்.

---

கள்?

ஒவ்வொன்றாகச் சொல்லுகிறேன். குறித்துக் கொள்ளுங்கள்: 4026 சுய உதவிக் குழுக்களில் 75,600 மகளிர் உறுப்பினர்களாக இருக்கிறார்கள். 3 கோடியே 42 லட்ச ரூபாய் சேமித்திருக்கிறார்கள். சுகாதாரத்தில், பெர்சனல் ஹைஜீன் பற்றி வலியுறுத்துகிறோம். குறைந்த வயதில், சொந்தத்தில் திருமணம் செய்து கொள்ளுவதைத் தடுக்க ஆலோசனை தருகிறோம். ஊனமுற்றோர் சர்வே நடத்தியிருக்கிறோம். அதில் இருபது பேருக்கு வீடுகள் கட்டித் தந்திருக்கிறோம். பத்து அர்ச்சகர்களுக்கு, இருபது மீனவர்களுக்கு, கொத்தடிமையிலிருந்து மீட்கப்பட்ட இருபது பேர்களுக்கு, என்று தேர்வு செய்து வீடுகள் கட்டிக் கொடுத்திருக்கிறோம். கிராம இணைப்புச் சாலைகளில், நான்கு கோடி ரூபாய் செலவில் முப்பத்தொரு சாலைகள், 4.11 கோடியில் இருபத்தாறு சாலைகள் முடித்து விட்டோம். உயர் அதிகாரி சந்திரலேகா இவற்றை நேரில் பார்வையிட்டு, தரம், பணி இவற்றை உறுதி செய்திருக்கிறார்.

● **லஞ்ச ஊழல் தடுப்பில்...?**

ஒவ்வொரு மாதமும் நான்காவது வெள்ளிக்கிழமை இதற்காகக் கூட்டம் நடத்தி, ஊழலில் ஈடுபட்டவரைக் குறித்த ரிப்போர்ட் தருவார்கள். நான் இதைப் படித்த பிறகு வேண்டிய நடவடிக்கை எடுத்து வருகிறேன். இதில் தண்டிக்கப் பட்டவர்கள் உண்டு. யாராவது புகார் கொடுத்தாலும், குறிப்பாகக் கவனிக்கச் சொல்லுகிறேன். பிறகு தகுந்த நடவடிக்கை எடுக்கிறேன்.

இருபது அம்சத் திட்ட நிறைவேற்றத்துக்காக மாவட்டம் மாநிலத்திலேயே முதலாவதாக வந்திருக்கிறது. சிறு சேமிப்பில் ஆறாவது இடம். ரோடரி, தொண்டு நிறுவன ஒத்துழைப்புடன் பல்ஸ் போலியோ திட்டத்தில் சாதனை.

முதலமைச்சரின் பதினைந்து அம்சத் திட்டத்தில், மகளிர் - குழந்தைகள் சுகாதாரத்துக்குச் சிறப்பாகப் பணியாற்றியதில், மாவட்டம் முதலாவதாக இருக்கிறது.

பேட்டி, கட்டுரை:
**சாருகேசி**

---

## "மும்தாஜை அனுப்புங்கள்!"

**"ரஜினிகாந்த்தை அனுப்ப வேண்டும்" என்று டாக்டர் ராமதாஸ் கூறினாராம். மற்ற பிரமுகர்களைக் கேட்டால்...? ஒரு கற்பனை:**



"கராத்தே தியாகராஜனை அனுப்புங்கள்"
- மு.க. ஸ்டாலின்

"பி.டி.ஆர். பழனிவேல்ராஜனை அனுப்புங்கள்."
- மு.க. அழகிரி

"குமாரதாஸை அனுப்புங்கள்."
- ஜி.கே



"இராம. கோபாலனை அனுப்புங்கள்."
- கி.வீரமணி

"லிங்டோவை அனுப்புங்கள்."
- குஜராத் முதல்வர் மோடி



"நிதீஷ்குமாரை அனுப்புங்கள்."
- மம்தா பானர்ஜி

"பேனசிர் பூட்டோவை அனுப்புங்கள்."
-முஷாரஃப்

"விவேக்கை அனுப்புங்கள்."
-கவுண்டமணி

"மும்தாஸை அனுப்புங்கள்."
- மந்த்ரா

"வாழப்பாடியை அனுப்புங்கள்."
— ஈ.வி.கே.எஸ். இளங்கோவன்

"தேவாரமே இருக்கட்டும்."
- வீரப்பன்

**- தஞ்சை தாமு**



ஆர்.எம். வீரப்பனின் 77ம் பிறந்த நாளை இலக்கிய விழாவாகக் கொண்டாடினார்கள். எம்.ஜி.ஆர். வரலாற்றில் 1977 என்பது முக்கியமான வருடம். எனவே '77'ம் வருட நினைவுகளைக் கேட்டோம் அவரிடம்.

# ஆர். எம். வீ. 77



"எம்.ஜி.ஆர் 1972ல் கட்சி துவங்கியதற்குப் பிறகு நாங்கள் சந்தித்த முதல் பொதுத்தேர்தல் 1977ம் வருடம் நடந்த பாராளுமன்றத் தேர்தல்தான். காங்கிரஸுடன் கூட்டணி அமைத்தோம். அப்படி ஒரு கூட்டணி அமைய திரைமறைவில் நான் எடுத்த முயற்சிகள் நிறைய. இந்திராகாந்திக்குப் பயந்து கொண்டுதான் காங்கிரஸோடு எம்.ஜி.ஆர் கூட்டணி அமைக்கிறார் என்றெல்லாம் சொன்னார்கள். ஆனால் நடந்தது என்ன? அந்தக் கூட்டணி சம்பந்தமாக ஓர் அரசு உயர் உளவுத்துறை அதிகாரிதான் எங்களிடம் பேச வந்தார். பாராளுமன்றத்துடன் சட்டமன்றத் தேர்தலையும் சேர்த்து நடத்துவதாக இருந்தால் மூன்றில் இரண்டு பங்கு இடங்கள் என்ற கணக்கில் (அதாவது பாராளுமன்றத்திற்கு காங்கிரஸுக்கு இரண்டு பங்கு; எங்களுக்கு ஒரு பங்கு. சட்டமன்றத் தில் எங்களுக்கு இரண்டு பங்கு; காங்கிரஸுக்கு ஒரு பங்கு) இட ஒதுக்கீடு செய்து கொள்வதாக தலைவர் சொன்னார். ஆனால் பாராளுமன்றத் தேர்தலை மட்டும் நடத்தியதால் அந்த ஃபார்முலா கையாளப்படவில்லை. காங்கிரஸுக்கு எங்களை விட குறைவான இடங்களே கொடுக்கப்பட்டன. எனவே எம்.ஜி.ஆர் யாருக்கும் பயந்து செயல்படவில்லை என்பது எனக்கு நன்றாகவே தெரியும். மத்தியில் ஜனதா ஆட்சிக்கு வந்தது.

அடுத்த ஆறுமாதத்தில் சட்டமன்றத்திற்குத் தேர்தல். என்னைப் போட்டியிடச் சொல்லி வற்புறுத்தினார் எம்.ஜி.ஆர். ஆனால், கட்சிப் பிரசாரத்தையும் மற்ற பணிகளையும் கவனித்துக் கொள்கிறேன் என்று சொல்லிவிட்டேன். மாபெரும் வெற்றி பெற்றோம். துணை சபாநாயகர் பதவிக்குப் பட்டதாரி இளைஞரைச் சொல்லுங்கள் என்றார் எம்.ஜி.ஆர். அறந்தாங்கி திருநாவுக்கரசை (திருநாவுக்கரசர்) சொன்னேன். அமைச்சரவை பட்டியல் இறுதியாக்கப்படும்போது என்னைத் தேடினார். பார்த்தேன். "உங்களையும் சேர்க்கிறேன்" என்றார். "வேண்டவே வேண்டாம். உங்களிடம் அறுபது ரூபாய் சம்பளத்தில் சேர்ந்தேன். இப்போது ஐந்நூறு ரூபாய் சம்பளம் வாங்குகிறேன். அப்படியே தொடர்ந்து சம்பளம் வாங்குபவனாகவே இருக்க விரும்புகிறேன். அமைச்சர் பதவி ஏற்றுக் கொண்டால் அதை இழக்க நேரிடும்" என்றேன். வற்புறுத்தினார். ஒப்புக்கொண்டேன். அமைச்சரானேன். ஓர் அரசியல்வாதியாக, அரசு நிர்வாகியாக பின்னர் நான் பணிசிட பிள்ளையார் சுழி போடப்பட்டது 1977ல் தான்.

சந்திப்பு: **ஸ்ரீநிவாசன்**
படம்: **ராஜன்**

# பிஞ்சு பாடம்

க.அம்சப்ரியா



வண்ணத்துப் பூச்சியொன்றை
வரையும்படியான
அவர்களின் வற்புறுத்தலில்
தரையில் உதிர்ந்திருந்தன
என் சிறகுகள் -

நதியொன்றை
அடையாளப்படுத்தும்
அவர்களின் முயற்சியில்
வற்றிப் போயிருந்தது
என் ஈரம் -

சூரியனைப் பற்றிய
கற்பித்தலில்
ஒளியிழந்திருந்தது
எனக்கான வானம்...!

என்னைப் பள்ளியில்
சேர்த்திருப்பதாகச்
சொல்லிப் போனார்கள்
பெற்றவர்கள்!




"அதி.மு.க. மேடையிலே கூட்டம் சேர்க்க என்ன பாட்டு வைக்கிறதுன்னு தெரிய வேணாமா...?"

"ஏன் என்ன ஆச்சு...?"

" 'கஞ்சி தொட்டி தேடி வந்த கன்னுக்குட்டி நான்'னு பாட்டு போட்டுட்டாங்க!"

— எஸ். முகம்மது யூசுப்



''எதுக்கு உன் வீட்டு வேலைக்காரி நடு நிசியிலே உக்கார்ந்து பாத்திரம் தேய்க்கிறா?''

''சீரியல் இல்லாத நேரங்கள்ல மட்டும்தான் வேலை செய்வேன்னு அக்ரிமெண்ட் போட்டுட்டுதான் வேலைக்கே சேர்ந்தா!''

— தூத்துக்குடி சகிதா முருகன்

# தங்கள் சிரிப்பு எங்கள் பாக்கியம்!

''நம் அரண்மனையில் 'முரசு' கொட்டுபவர் ஏன் நீண்ட விடுப்பில் சென்றுள்ளார்?''

''ஏ.ஆர். ரஹ்மான் ஆர்க்கெஸ்ட்ராவில் சான்ஸ் கிடைத்து விட்டதாம் மன்னா!''

— வி. ரூப்ஸ்



''காதலருடன் பகவத் கீதை உபன்யாசத்துக்குப் போனது தப்பாப் போச்சுடி!''

''என்னாச்சு?''

''நம்ம கல்யாணம் எப்போதுன்னு கேட்டா, 'காதலைச் செய்; கல்யாணத்தை எதிர்பாராதே'ன்னு அட்வைஸ் பண்றார்!''

— எஸ்.பி. நீலமேகம்



இராமஸேதுவுக்கு வாருங்கள்! ஸ்ரீ இராமநாதசுவாமி அருளைப் பெறுவீர்கள்!

# பரிகாரத்தலமாக விளங்கும் இராமேஸ்வரத்தில்
# தீபாவளி அமாவாசையன்று
# நெய் தீபமேற்றி அன்னதானம் செய்வோம் வாருங்கள்!

**ஆன்மீக அன்பர்களின் வேண்டுகோளுக்கிணங்க ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் அருளாசியுடன் பெருவாழ்வும், பேரின்பமும் அளிக்கும் புனித க்ஷேத்ரமான இராமேஸ்வரத்தில் நெய் தீபமேற்றி அன்னதானம் செய்வதில் நீங்களும் பங்குகொள்ள அன்புடன் அழைக்கிறோம்!**

பேரன்புடையீர்! வணக்கம். அருள்மிகு ஸ்ரீ இராமநாதசுவாமி தீபாவளித் திருநாளில் தங்களுக்கு அனைத்து நலன்களையும் தந்தருளப் பிரார்த்திக்கிறோம்.

பன்னிரெண்டு ஜோதிர்லிங்க ஸ்தலங்களுள் ஒன்றான இராமேஸ்வரத்தில் ஸ்ரீ பர்வதவர்த்தினி சமேத ஸ்ரீராமநாதசுவாமி உடனிருந்து அருள்பாலிக்கிறார். மூர்த்தி, தீர்த்தம், தலம் மூவகையாலும் இராமேஸ்வரம் சிறப்புற்று சிவவிஷ்ணு ஸ்தலமாக பிரகாசிக்கிறது. மாங்கல்ய தோஷம், புத்திர தோஷம், செவ்வாய் தோஷம், நாகதோஷம் போன்ற எல்லாவிதமான தோஷங்களுக்கும் பரிகாரத்தலமாக இராமேஸ்வரம் விளங்குகிறது. இத்தகைய சிறப்புமிக்க புண்ணிய க்ஷேத்ரமான இராமேஸ்வரத்தில் நேரில் சென்று நெய் தீபமேற்றி அன்னதானம் செய்ய இயலாத அன்பர்களுக்காக, "ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்" மூலம் அன்னதானத்திருப்பணி நடைபெறுகிறது. புண்ணியபூமி இராமேஸ்வரத்தில் ஏழைகளுக்கும், அடியார்களுக்கும் அன்னதானம் அளிக்கும் பணியிலும், குடும்பம் நலம் பெற நெய் விளக்கேற்றும் பணியிலும் நாமும் பங்குகொண்டோம் என்ற ஆத்ம திருப்தியை அடைய இது ஒரு சிறந்த வாய்ப்பாகும்.

★ தங்கள் சார்பாக நெய் தீபமேற்றி அன்னதானம் செய்ய தங்களால் இயன்ற நன்கொடையை அனுப்பலாம்.
★ ரூ.500/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் ஒரு ஆண்டிற்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ.1000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ.5000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் பத்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

அன்னதானத்திற்கும், நெய் தீபம் ஏற்றுவதற்கும் நன்கொடையை அனுப்புவோர், திருமண நாள், பிறந்த நாள் மற்றும் திதி நாள் மேலும் தாங்கள் எதை நினைத்து அன்னதானம் செய்ய விரும்புகிறீர்கள் என்பதைத் தெரிவித்தால் அதன்படி தாங்கள் விரும்பும் மாதத்தில் அமாவாசை அன்று இராமேஸ்வரத்தில் நெய் தீபமேற்றி அன்னதானம் செய்கிறோம். அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ.1000, ரூ.5000 அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு இராமேஸ்வரத்தில் பூஜிக்கப்பட்ட 'கோடி தீர்த்த' சொம்பும், வலம்புரி சங்கும் ஸ்ரீ பர்வதவர்த்தினி சமேத ஸ்ரீ இராமநாதசுவாமி வண்ணப்படமும், சிறிய அளவில் சிவபுராண புத்தகமும் அனுப்பி வைக்கப்படும்.

★ ரூ.5000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்கள் சார்பாக, ஒவ்வொரு மாதமும் அமாவாசை அன்று இராமேஸ்வரத்தில் நெய் தீபம் ஏற்றி அன்னதானம் செய்து தொடர்ந்து பத்து வருடங்கள் பிரசாதமும், "ஆன்மீகம்" மாத இதழும் தங்களுக்கு அனுப்பி வைக்கப்படும். மேலும் தாங்கள் விரும்பும்போது சந்ததியினரின் முகவரிக்கும் மாற்றம் செய்து தருகிறோம். ஆன்மீக அன்பர்கள் ஒவ்வொருவரின் பூஜை அறையும் புனிதம் பெறவேண்டும் என்ற எண்ணத்துடன் ரூ.5000 செலுத்துபவர்களுக்கு 336 பக்கங்களுடன் கூடிய பெரிய அளவில் உள்ள "ஸ்ரீமத் இராமாயணம்" புத்தகத்தை (தமிழில்) அனுப்பி வைக்கிறோம்.

குடும்பத்தில் தாய் தந்தையர்கள், முதாதையர்களுக்கு இராமேஸ்வரத்தில் நேரில் சென்று 'தர்ப்பணம்' செய்ய முடியாதவர்களுக்காக, சாஸ்திரிகளைக் கொண்டு "ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்" மூலம் தர்ப்பணம் செய்யப்படுகிறது. பித்ருக்களைக் குறித்து இராமேஸ்வரத்தில் செய்யப்படும் தர்ப்பணம் செல்வம், கீர்த்தி, ஆயுள், ஸ்வர்க்கம் முதலிய நன்மைகளை அளிக்கும். எதிரிகளை விலக்கும். தன் வம்சம் தழைத்தோங்கச் செய்யும். மறைந்த முன்னோர்களுக்கு தர்ப்பணம் செய்ய ரூ.750/- அனுப்பும்போது யாருக்கு தர்ப்பணம் செய்ய விரும்புகிறீர்களோ அவரின் பெயர், திதி மற்றும் கோத்ரம் போன்ற விபரங்களையும் அவசியம் தெரிவிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம். மூர்த்தி, ஸ்தலம், தீர்த்தம் ஆகிய மூவகையாலும் சிறப்பு வாய்ந்த இராமேஸ்வரத்தில் தர்ப்பணம் செய்து கிடைத்தற்கரிய பேற்றைப் பெற்று க்ஷேமமாக வாழ அழைக்கிறோம்.

இராமேஸ்வரத்தில் அமாவாசையன்று அன்னதானம் செய்ய விரும்பும் ஆன்மீக அன்பர்கள் சார்பாக நெய் தீபம் ஏற்றுகிறோம். தாங்கள் என்ன வேண்டுதலுக்காக தீபம் ஏற்ற வேண்டும் என்பதையும், உங்கள் பெயர், நட்சத்திரத்தையும் குறிப்பிட்டு எங்களுக்கு எழுதி அனுப்பினால் அதன்படி அமாவாசையன்று தீபம் ஏற்றி தங்களுக்கு பிரசாதம் அனுப்பி வைக்கப்படும். தீபமேற்றும் பணியிலும், அன்னதானப் பணியிலும் ஈடுபட விரும்பும் ஆன்மீக அன்பர்கள் தங்கள் நன்கொடையை Cheque/D.D/M.O மூலம் (Sri Annapoorani Annadhana Seva Trust, Chennai - 4) என்ற பெயருக்கு எடுத்து கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். பெருவாழ்வும், பேரின்பமும் அளிக்கும் புண்ணிய க்ஷேத்ரமான இராமேஸ்வரத்தில் அன்னதானப் பணியும், தீப வழிபாட்டுப் பணியும் தெய்வீகப்பணியாக தழைத்திட உதவுமாறு அன்புகூர்ந்து வேண்டுகிறோம்.



ஸ்ரீ பர்வதவர்த்தினி

*Cheque/D.D./M.O* அனுப்ப வேண்டிய முகவரி:


## ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்

**SRI ANNAPOORANI ANNADHANA SEVA TRUST (Regd.)**

68, Nadu Street, (Opp: Sri Kapaleeswarar Temple), Mylapore, Chennai - 600 004.

Tel: 4959302 Fax: (044) 4616311 E-mail: sivasiva@vsnl.net




ஸ்ரீ இராமநாதசுவாமி

இராமேஸ்வரத்தில் (தீபாவளி அமாவாசையன்று) அன்னதானமிடுவது வாழ்வில் பெரும் புண்ணியத்தைக் கொடுக்கும்!





கலைப்பொருள் சிறப்பிதழ்

## அனுராதா சேகர்

பன்னீர் சொம்பு
போன்ற அழகு,
பாரிஜாதம் போன்ற
மென்மை!
அடேயப்பா!
எவ்வளவு பரிசு,
எத்தனை
பாராட்டு...

# சகலகலா சுந்தரி

கலைநயத்தோடு அலங்கரிக்கப்பட்டிருந்த அந்த பங்களாவை, அங்குலம் அங்குலமாக ரசித்துக் கொண்டிருந்தாள் 'தமிழ்க்குரல்' பத்திரிகையின் நிருபர் சுமா.

" 'கண்ணாடி பார்க்கும் அப்சரஸ் சிலை ஹொய்சாளா ஆர்ட். நளனுக்கு, தாமரை இலையில் காதல் கடிதம் எழுதுறா தமயந்தி... ஒரிஜினல் ராஜா ரவிவர்மா பெயிண்டிங்... எவ்வளவு தத்ரூபம் பாருங்க. இந்தக் கம்பளம் வாங்கி ஐம்பது வருஷம் ஆகுது. இன்னும் புதுசா இருக்கு இல்லியா? இது சீனாவிலிருந்து வரவழைச்சது! இது இத்தாலியன் க்யூபிட் சிலை. எங்க தாத்தா, பாட்டிக்குப் பரிசளித்த காதல் சின்னம். இதெல்லாம் சைபீரியன் மதுக்கோப்பைகள். எவ்வளவு ஆர்டிஸ்டிக்!'' தொழிலதிபர் முருகானந்தம் பெருமையாக விளக்கிக் கொண்டிருக்க, உன்னிப்பாகக் குறிப்பெடுத்துக் கொண்டிருந்தாள் சுமா.

"தாத்தா, அப்பா, பெரியப்பா, சித்தப்பா, நான்... இப்படி நாங்க எல்லாருமே ஆர்ட் லவ்வர்ஸ்தான்'' என்று முருகானந்தம் உற்சாகமாகப் பேட்டி தர ஆரம்பித்தும், வேலையாள் தேநீர் தட்டுடன் வந்தான். சுடச்சுட ஏலக்காய் கமழ்ந்த தேநீர். அவள் எடுத்துப் பருகியபடி, தலைநிமிர்ந்தபோது, ஓர் அழகிய பெண் எதிர்ப்பட்டாள்.

"மை வைஃப்" என்று அவர் அறிமுகப் படுத்தியதும், மெல்லிய சிரிப்போடு 'வணக்கம்' தெரிவித்தபடி உள்ளே சென்று விட்டாள் அந்தப் பெண்.

சுமாவுக்கு 'திக்' என்றது.

முருகானந்தத்தின் கிரவுண்ட் வாங்கிய தலையையும், குடம் மறைத்த தொப்பையையும் வைத்து எடை போட்டால்... இந்தப் பெண் மகள் போல அல்லவா இருக்கிறாள்?

பேட்டி தொடரும் முன், செல்ஃபோன் ஒலிக்கவே, "எக்ஸ்க்யூஸ் மீ" என்று அந்த இடத்தை விட்டு அகன்றார் முருகானந்தம்.

மெல்லிய கொலுசொலி கேட்கவே, திரும்பினாள் சுமா. ஏதோ சாவி எடுக்க வந்த அந்தப் பெண், சுமாவைப் பார்த்து செயற்கையாகச் சிரித்தாள்.

இந்த முகம்... இந்தப் பல்வரிசை...!

அட, இது கனிஹா!

ஆமாம். அவளேதான்.

கனிஹா, சுமா படித்த அதே கல்லூரியில், எம்.ஏ. ஃபைன் ஆர்ட்ஸ் மாணவி! சுமாவுக்குப் பல வருட சீனியர். பாட்டு, டான்ஸ், வீணை, கரகம், ஓவியம், நாடகம் என்று எல்லாவற்றிலும் கனிஹாதான் நம்பர் ஒன். பன்னீர் சொம்பு போன்ற அழகு, பாரிஜாதம் போன்ற மென்மை! அடேயப்பா! எவ்வளவு பரிசு, எத்தனை பாராட்டு...

"மேடம், நீங்க கனிஹா தானே?" என்று ஆவலாகக் கேட்டாள் சுமா.

'ஆமா' என்று கண்களிலேயே அதிசயம் காண்பித்தாள் அவள்.

"நானும் உங்க காலேஜ்தான். நீங்கன்னா எங்களுக்கெல்லாம் ஒரு கிரேஸ்! சகலகலா சுந்தரினு கூப்பிடுவோம்."

அதுவரை அவள் முகத்தில் இருந்த இறுக்கம் மறைந்து, சின்ன முறுவல் மலர்ந்தது.

"நீங்க மேடையிலே வீணை வாசிக்கும்போது, திடீர்னு 'கூ'னு குயில் மாதிரி ஒலி வரவழைப்பீங்களே. ரொம்ப த்ரில்லிங்கா இருக்கும். அப்புறம் மோகினி ஆட்டத்திலே, 'பூப்பந்தாட்டம்' ஆடிக்கிட்டே, மேஜிக் மாதிரி மல்லிச்செண்டு கொண்டு வருவீங்களே, அந்தக் காட்சி கண்ணிலியே இருக்கு..."

சுமா சொல்லச் சொல்ல, கனிஹா கண்ணை மூடி ரசித்தாள்.

"யா... லவ்லி டேஸ்!" என்று முணுமுணுத்தாள்.

"ஏன் மேடம், அதுக்கப்புறம் நீங்க கன்டின்யூ பண்ணலை?"

"அவருக்கு அதெல்லாம் பிடிக்கலைம்மா..." என்றாள். ○




**கை**யில் ஒரு ஊசி, சின்ன நூல் கண்டு. பொட்டு அளவே இருந்த சிறு கண்ணாடித் துண்டைப் பதித்து. மளமளவென்று டிஸைன் போட்டு, தேவிபாய் காண்பிக்க, வெள்ளிச் சலங்கை, வெள்ளிக்காசு இணைத்து, லக்ஷ்மிபாய் எம்பிராய்டரி செய்து காண்பிக்க, மெத்த படித்த தாய்க்குலம் ஆர்வத்தோடு கவனித்து கற்றுக் கொண்டது.

தேவிபாயும், லட்சுமிபாயும் லம்பானிப் பெண்கள். கர்நாடகத்தின் மார்வார் மலைஜாதி இனத்தைச்





# கலையே கலையாதே!



சேர்ந்தவர்கள். மங்கி வரும் இவர்களுடைய பாரம்பர்ய கலையான 'பெத்துன்ஸ்' கைவேலைப்பாட்டை, ஊக்குவிப்பதற்காகவே, சந்தூர் ஷோலா கலா கேந்த்ரா என்னும் அமைப்பு போராடி வருகிறது.

**ச**மீபத்தில் சென்னை மனஸ்தலா கேலரிக்கு வந்திருந்த இந்த லம்பானிப் பெண்கள், தங்கள் அமைப்பின் கலைப் பொருட்களைப் பார்வைக்கு வைத்திருந்ததோடு லம்பானி ஆடைகளைத் தயாரிக்கும் முறையையும் சொல்லிக் கொடுத்தார்கள்.

“இவ்வளவு கனமான லம்பானி ஆடையை நாகரிகப் பெண்கள் விரும்பி அணிவதில்லை என்றாலும், அந்த கைவேலைப்பாடு கொண்ட, சுரிதார், பாவாடை, புடைவை, குஷன் உறை, டி.வி. உறை, தொங்குசீலை, கைவினைப் பொருட்களுக்கு நல்ல மவுசு இருக்கிறது. எனவே, 'பெத்தூன்ஸ் கலையை, புதிய பாணியில் புகுத்தி விற்பனை செய்கிறோம்'' என்றார் 'மனஸ்தலா' உரிமையாளர் கல்யாணி ப்ரமோத்.

— டாலி



சோ எழுதிய

# வால்மீகி ராமாயணம்

வால்மீகி முனிவரால் இயற்றப்பட்ட ஸ்ரீ ராம காவியம் – வாழ்வதற்கு அவசியமான வழிகளைக் காட்டுகிறது. அப்படிப்பட்ட அரிய பொக்கிஷத்தை எளிய தமிழில் 1232 பக்கங்களில் எழுதியுள்ளார் சோ. எளிதில் புரிந்து கொள்ளக் கூடிய வகையில் – பொருத்தமான இடங்களில் உத்தர காண்டப் பகுதிகளையும் எழுதி, மேலும் கம்ப ராமாயணம் மற்றும் துளஸிதாஸர் ராமாயணங்கள் வால்மீகி ராமாயணத்தோடு மாறுபடும் இடங்களையும் சுட்டிக் காட்டியுள்ளார். வால்மீகி ராமாயணத்தையொட்டியும், அதுபற்றி பெரியவர்கள் கூறியுள்ளதை மனத்தில் வைத்தும், ஆசிரியர் ஆங்காங்கு இவை பற்றிய அவரது கருத்துக்களையும் எழுதியுள்ளார்.

உயர்தர மேப்லித்தோ காகிதம் – கண்கவர் ஓவியங்கள் – நேர்த்தியான பைண்டிங் – நெடுநாள் பாதுகாக்கக் கூடிய ஒரு அட்டைப் பெட்டியுடன் – இரண்டு பாகங்கள் –

விலை ரூ.500/-

# மஹாபாரதம் பேசுகிறது

பாரதக் கதை பழமை வாய்ந்தது. ஆனால் அதை எழுதியிருக்கும் விதம் புதுமையானது. வியாச பகவானால் இயற்றப்பட்டு, விநாயகப் பெருமானால் எழுதப்பட்ட மஹாபாரதத்தை 1308 பக்கங்களில் எளிய தமிழில் எழுதியுள்ளார் சோ. பாரதக் கதை நடந்திருக்கக் கூடும் என்பதற்கான வழக்கறிஞர் 'சோ'வின் ஆணித்தரமான வாதம்; பாரதப் போரின் போது ஒவ்வொருவருடைய வயது; போரில் ஈடுபட்ட படைபலங்களின் துல்லியமான எண்ணிக்கை – போன்ற பலரும் கேட்டிராத நுணுக்கமான அரிய தகவல்களுடன், முக்கிய இடங்களில் பாரத நிகழ்ச்சிகளையும், கதாபாத்திரங் களையும் விமரிசித்து, இன்றைய நிகழ்வுகளோடு ஒப்பிட்டுக் கூறியுள்ளார் சோ.

உயர்தர மேப்லித்தோ காகிதம் – கண்கவர் ஓவியங்கள் – நேர்த்தியான பைண்டிங் – நெடுநாள் பாதுகாக்க ஒரு அட்டைப் பெட்டியுடன்.

விலை ரூ.500/-

'வாகீச கலாநிதி' கி.வா. ஜகந்நாதன் தொகுத்த

# தமிழ்ப் பழமொழிகள்

*(25,000க்கும் மேற்பட்ட தமிழ்ப் பழமொழிகள் அடங்கியது)*

50 வருடங்களாகத் தன் ஆசிரியப் பிரானோடு ஓலைச் சுவடிகளுக்காகத் தேடி அலைந்த போது – ஆங்காங்கேயுள்ள மக்களின் பழக்கத்தில் உள்ள தமிழ்ப் பழமொழிகளைத் தொகுத்துள்ளார். இவ்வளவு தமிழ்ப் பழமொழிகள் அடங்கிய நூல் இது ஒன்றேதான்.

கண்கவர் பெட்டியில் – நான்கு தொகுதிகள்

விலை ரூ.300/-

அல்லயன்ஸ் கம்பெனி

(நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்)
244, ராமகிருஷ்ணா மடம் சாலை,
தபால் பெட்டி எண் 617,
மயிலாப்பூர், சென்னை–600 004 போன் : 494 13 14

**கலைப்பொருள் சிறப்பிதழ்**



சுவாமிமலை உலோகச் சிற்பங்களின் சிறப்பம்சத்துக்கு, பச்சைத் தென்னை ஓலையும் ஒரு காரணம் என்றால் புருவம் உயர்த்தமாட்டீர்களா என்ன? ஒரு சிற்பத்தின் உயரம் இத்தனை அடி என முடிவானதும், அவர்கள் அடுத்ததாகத் தேடுவது பச்சைத் தென்னை ஓலையைத் தான். சிலையின் உயரத்துக்கு தென்னை ஓலையை நறுக்கி, நூற்று இருபத்து நான்கு பாகங்களாக மடித்து வைத்துக் கொள்கிறார்கள். இந்த மடிப்புகளின்



• எஸ்.கருணாநிதி ஸ்தபதி



# விரல்களில் விளையும் விக்கிரகங்கள்!

அளவுகளை வைத்தே சிற்பத்தின் அங்கங்களின் அளவுகளும் நிர்ணயம் செய்யப்படுகின்றன. அதுதான் ஓலைக்கும் சிலைக்கும் உள்ள விசேஷ சம்பந்தம்.

சிற்ப சாஸ்திரப்படி அதனை 'உத்தம தச தாளப் பிரிவுகள்' எனச் சொல்கிறார்கள். அதில் கேசம் - லலாடம் என்கிற நெற்றிப்பட்டை நான்கு பாகம். முகம் பதின் மூன்றரை பாகம். கழுத்து மூன்றரை பாகம் என உச்சி முதல் பாதம் வரைக்கும் 123 பாகங்கள் அடங்கும். கொசுறு ஒரு பாகத்தை, விக்கிரக ஆளுமைக்கேற்ப சிற்பி தன் மனோபாவப்படி முகத்திலோ, கழுத்திலோ அல்லது எங்கு வேண்டுமானாலும் கூட்டிக் கொள்ளலாம். தென்னை ஓலையில் பாகம் பிரித்துச் சிற்பம் செய்கிற



• பூம்புகார் விருது பெற்ற காளிங்க கிருஷ்ணர்

முறை சுவாமிமலைக்கு மட்டுமே உரித்தானது.

அதிலும் ஆகம விதிகளின்படி ஸ்வாமிகளின் விக்கிரங்களைத் தயாரித்துத் தருவதில் முன்னோடியாக விளங்கி வருவது குபேரன் சிற்பக் கலைக்கூடம். சிற்ப வேலைகளை ஐந்தாவது தலைமுறையாகச் செவ்வனே செய்து வரும் எஸ். கருணாநிதி ஸ்தபதிக்கு வயது அறுபத்து ஏழு. அவரது



• அமெரிக்காவுக்கு அனுப்பப்பட்ட பெருமாள் விக்கிரகம்



• சுந்தரவிநாயகர் தங்க அங்கி

இரண்டு புதல்வர்கள் க. குபேரன் ஸ்தபதி க. மோகன்ராஜ் ஸ்தபதி.

சுமார் நானூறு ஆண்டுகளாக சுவாமிமலையில் உலோகச் சிற்ப வேலைகள் முக்கியத்துவம் பெற்று சிறந்து விளங்குவதாகக் கூறுகிறார் எஸ்.கருணாநிதி ஸ்தபதி. ஸ்வாமி விக்கிரங்கள் தவிர கோயில் கதவுகள், த்வஜஸ்தம்பங்கள் (கொடி மரம்), படி அலங்காரங்கள், பல்லக்குகள், வாகனங்கள் இவற்றுக்கான அலங்காரத் தகட்டு வேலைகளும் இங்கு பிரபலம். கல் பதித்த கிரீடங்கள், மார்புக் கவசங்கள் செய்வது இங்கு முத்திரை வேலை. சுவாமிமலையில் மட்டும் சுமார் ஐம்பது குடும்பங்கள் தமது வாழ்வியல் தொழிலாக இதைச் செய்து பாரம்பரியக் கலைப் பெருமையைக் காப்பாற்றி வருகின்றன.

சுவாமிமலை சிற்ப வேலைகளுக்குத் தேவைப்படும் உலோகப் பொருட்களான செம்பு, பித்தளை, காரீயம் போன்றவை கும்பகோணம் பகுதிகளில் கிடைத்து வருகிறது. சுவாமிமலை அருகே சுழித்தோடும் இரு நதிகளான காவிரி மற்றும் அரசலாற்றங் கரைகளில் மட்டுமே சிற்ப வேலைக்கு உகந்த ஆற்று வண்டல் மண் கிடைத்து வருகிறது. இது போன்ற நயமான ஆற்று வண்டல் மண் வேறெங்கும் கிடைப்பதில்லையாம். சுவாமிமலை தவிர சென்னை, கோவை, ஈரோடு, சேலம் போன்ற பகுதிகளில் உலோகச் சிற்பத் தொழில் செய்து வருபவர்கள் கூட, சுவாமிமலைப் பகுதிக்கு வந்து தங்கள் வேலைகளுக்குத் தேவையான ஆற்று வண்டல் மண்ணைக் கொண்டு செல்கிறார்களாம்.

உலோகச் சிற்பங்கள் வார்த்தெடுப்பதில் முழுக்க முழுக்கக் கை வேலைப்பாடுகளே பயன்படுத்தப்படுகின்றன. வியக்க வைக்கும் விக்கிரக அழகுக்கு கை விரல்களே அணி சேர்க்கின்றன. நவீன தொழில் நுட்பங்களுக்கோ, மின்சாரத்துக்கோ இன்று வரை இக்கலையில் இடமில்லை. பழைய செய்முறைகளே பாரம்பரியமாக, பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

உலோகங்களை நீல நிற ஆவிப்பதமாக உருக்குவதற்கு லீக்கோ, கோக், மரக்கரி ஆகிய மூன்றுமே எரி பொருளாகப் பயன்படுகின்றன. மண்ணில் செவ்வகம், சதுரமென வடிவங்களில் பள்ளம் வெட்டி அதனுள்ளே எரிபொருட்களைப் பரப்பி, மேலே வரிசையாக இரும்புக் கம்பிகளை பரவலாகி அடுக்கி அவற்றின்மீது மூசைக் குவளைகள் வைக்கப்படும். மூசைக் குவளைகளின் உள்ளே விகிதப்படி செம்பு, பித்தளை, காரீயம் ஆகியன போட்டு உஷ்ணப்படுத்தப்படும். 1400 டிகிரி சென்டி



"'ஒரு மெத்தையப் பிரிச்சா பத்துத் தலையணை பண்ணலாம். ஆனா ஒரு தலையணையைப் பிரிச்சா ஒரு மெத்தை கூட பண்ண முடியாது.' - என்னய்யா வசனம் இது?"

"பஞ்ச் டயலாக் சார்!"

— எம். ஏ. சந்திரசேகர்



"ஏம்பா கொஞ்ச நாளா பிச்சை எடுக்க வரலை?"

"வருமானத்துக்கு அதிகமா சொத்து சேர்த்த வழக்குல கைது பண்ணிட்டாங்க தாயி!"

— எஸ். தமிழ்மணி

---

"என்னது! தமிழ் தவிர இன்னும் மூன்று மொழிகள் உன் மாமியாருக்குத் தெரியுமா?"

ஆமா! வள்வள் மொழி... வசவு மொழி... பிடுங்கல் மொழி!"

- உ. ராஜாஜி



கிரேட் வெப்பத்தில் உலோகக் கலவை தயாராகிவிடும். மூசைக் குவளைகள் இராஜ மகேந்திரி, சேலம் போன்ற இடங்களிலிருந்து தயாராகி வருகின்றன. 'மூசை' என்பது ஒரு வகை மண் குவளைதான். இந்த மூசைக் குவளைகள்தான் உலோகக் கலவை உருக்குவதற்கு எங்கும் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. இரண்டாயிரம் டிகிரி சென்டி கிரேட் வெப்பம் வரைக்கும் தாங்குமாம்.

'**வி**க்கிரகங்கள் வேண்டுவோர், விரும்பு கின்ற அகல - நீள உயரத்துக்கு விலை கொடுத்து பெற்றுக் கொள்ளலாமா?' "அதுதான் எங்களிடம் இல்லை" என்கிறார் க. குபேரன் ஸ்தபதி. ஆகம விதிப்படிதான் இங்கு விக்கிரகங்களை உருவாக்கித் தரு கிறோம் என்கிறார் அவர்.

பொதுவாக கோயில் என்றால் ஊர்ப் பெயருக்கும், ஸ்வாமி பெயருக்கும் உரிய நட்சத்திரப்படி ஜாதகம் கணித்து அதி லிருந்தே விக்கிரகத்தின் உயரம் முடிவு செய்யப்படும். முன்னூற்றுப் பதினைந்து பக்கங்கள் கொண்ட 'சிற்ப சிந்தாமணி' எனப்படும் சிற்பங்களுக்கென வகுக்கப்பட்ட ஜோதிடப் புத்தகத்தில் அவை விளக்கமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

எழிலார்ந்த ஓர் அடி உயரமுள்ள காளிங்கநர்த்தன கிருஷ்ணர் சிற்பம் வடித் தமைக்காக, தமிழக அரசின் பூம்புகார் விருது பெற்றிருக்கிறார் எஸ்.கருணாநிதி ஸ்தபதி. அச்சிற்பத்தில் தனிச் சிறப்பு உண்டு.

வலங்கைமான் அருகில் ஊத்துக்காடு கிராமத்தில் பெருமாள் கோயிலில் ஒன்றரை அடி உயர காளிங்க நர்த்தன கிருஷ்ணரின் உற்சவ விக்கிரகம் உள்ளது. பாம்பின் தலைக்கு மேலே கால் வைத்து நின்ற திருக் கோலத்தில், உயரமாய்ச் சுழன்றடிக்கும் பாம்பின் வால் நுனியைக் கையில் பிடித்த படி காட்சி தரும் கிருஷ்ணரின் கால் பாதத் துக்கும் பாம்பின் தலைக்கும் இடைப்பட்ட இடைவெளியில் ஒரு காகிதத்தாளை மட்டும் உள்ளே செருகி வெளியே எடுத்து விட லாமாம். அதே போல் இவர் வடித்த ஓர் அடி உயர காளிங்க நர்த்தன கிருஷ்ணர் சிற்பத்திலும், ஒரு காகிதத் தாளை மட் டும் உள்ளே செருகி வெளியே எடுத்து விடலாம்.

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு






ॐ

*"To evoke the divine in you there is no other method than Namasmarana", - Bhagavan Sri Satya Sai.*

With the Grace and Blessings of Bhagavan Sri Satya Sai
We are bringing out a Diary for 2003
named **"Sri Satya Sai Namasmarana Diary 2003."**

**(The Publication of diary was blessed with vibhuthi by Sri Satya Sai in a devotee's place.)**

Like last year, the diary in English is designed in such a way that the user can read daily before using the diary, charitra of Shirdi Baba and Sri Satya Sai Baba as revealed by Swami in His speeches; recite the Sri Satya Sai Ashtothram given in the Diary; write the nama of ishta deity 108 times in the space provided; use the diary for the day; write again the nama of ishta deity 18 times before going to bed; have beautiful pictures of Shirdi andPuttaparthi Bhagavan andSwami's padukas;

*Translation of Swami's speeches given in Tamil/Telugu/Kannada/Malayalam/Hindi given on request as a supplement.*

***At the request of the users, the side of the diary is enlarged to 21cmX16cm (app.) 384 pages (app.)***

**50% of Net Proceeds of our diary sales will be donated to Sri Satya Sai Trust or its nominees.**

**Price : Rs. 105/- per copy**

**By Courier : Rs. 125/- per copy (South India)**
**Rs. 155/- per copy (Rest of India)**

* For orders outside Chennai, only DD payable at Chennai or MO accepted
* For details on concession for bulk orders, please contact us.

**AN IDEAL AND INSPIRING "NEW YEAR GIFT" TO YOUR FRIENDS & RELATIVES.**

**Last date for receipt of orders : within India 30.11.2002.**

**Visit us in : www..saidiary.com**

**PP PUBLICATIONS**

6, (Old #9), Balamuthukrishna Street, II Floor, T. Nagar, Chennai - 600 017
(044) 834-1183 - Fax : (044) 466-1748 - Email : pp_publications@yahoo.com

# MATA VAISHNO DEVI YATRA PILGRIMAGE & PICNIC TOURS

*** Badrinath - Kedarnath - Haridwar - Rishikesh * Shimla - Kulu - Manali - Jaipur - Agra - Mathura Delhi. * Kashi (Varnasi) - Allahabad - Gaya - Buddha Gaya - Ayodhya - Naimisaranya with Train, 2 x 2 Luxury Couach, Homely Food & Accommodation.**

*Dep. Every Wednesday & Friday From Chennai By T.N. Express (2621) & Varanasi Express (6039)*

**KERALA PACKAGE :**
Sabarimala, Guruvayoor, Chottanikkara, Erumeli, Munnar, Thekkady, Trivandrum, Kovalam, Ponmudi Alapuzha Back Water, Kumarakom & Kochi.

**SABARIMALA YATRA TOUR :**
Offers all Ayyappa Devotees a pleasant Sabarimala yatra by Toyota Qualis Car / Tata Sumo / Tempo Traveller / Swaraj Mazda / 35 & 50 Seater Deluxe & Luxury Coaches from Thrissur / Cochin / Kottayam / Chengannur / Alapuzha.

**Panicker's Travel** (Regd.)

*Recognised By Govt. of India, Ministry of Tourism*
*Special arrangement done in association with Indian Railway Catering and Tourism corporation Ltd. (Govt. of India undertaking)*

No.22, 2nd Floor, Prince Plaza 46, Pantheon Road, Egmore, **Chennai** - 8
Ph : 8553010 / 4921/2028 Fax : 8551123 E-mail : panickerschennai@vsnl.net
**H.O. :** Karol Bagh, **New Delhi** - 05, Ph : 011-5723395, 5727749 Fax : 011-5710147

J6, Communications, II Avenue, D-102, Annanagar East, Near Chintamani Signal, Chennai - 102. Ph : 6630099.

***Special tours for snowfalls at Shimla, Kulu, Manali by December***

போலி டிராவல் ஏஜெண்ட் நம்பி ஏமாறாதீர்கள்! எங்களுக்கு சென்னையில் வேறு கிளைகளோ, அலுவலகமோ கிடையாது. மேற்கண்ட முகவரியில் மட்டுமே எங்களை தொடர்பு கொள்ளவும்.

# 18

பாலகுமாரன்

சங்கரய்யர் அவன் தோளில் தட்டி நிமிர்த்தி உட்கார வைத்தார். அவனை உற்றுப் பார்த்தார்.

''உலகத்துல ஒரு மனுஷா நல்ல பெற்றோர் இல்லாமக்கூட இருந்துடலாம். நல்ல பொண்டாட்டி கிடைக்கலைன்னா ரொம்பக் கஷ்டம். நல்ல மனைவி கிடைக்கறதுக்கு ரொம்பக் கொடுத்து வைச்சருக்கணும். தனக்குக் கிடைச்சது நல்ல மனைவின்னு புரிஞ்சுக்கறதுக்கு இன்னும் அதிகமா கொடுத்து வைச்சருக்கணும். அப்படிக் கிடைச்ச மனைவியைப் புரிஞ்சு



# மனம் உருகுதே...

அவளைக் கொண்டாடறதுக்கு ரொம்பக் குறைச்சலான ஆட்களால்தான் முடியும்.

''பொண்டாட்டியைக் கொண்டாடறதா? நோ, நோ, ஐயம் நாட் அ ஹென்பெக்'' அப்படிம்பா. இங்கிலீஷ்ல ஹென்பெக்குன்னா தமிழ்ல பொண்டாட்டிதாசன்னு அர்த்தம். நாம யாருக்கும் தாசனா இருக்கறதுக்கு ஆசைப்படலை. எல்லாருக்கும் எல்லா நேரமும் தலைவனா இருக்கணும்னுதான் ஆசை. ரூல் பண்ணணும்னுதான் வெறி. ஆனால் ரூல் பண்றதுக்கு உண்டான யோக்கியதை இருக்கா அப்படின்னு யாரும் ஆராய்ஞ்சு பார்த்ததில்லை. குறிப்பா பொண்டாட்டி விஷயத்துல, இவளை அடக்கி ஆளணும்னா அதுக்குண்டான யோக்கியதை இருக்கா, அப்படின்னு எந்தப் புருஷனும் நினைக்கல. ஏதோ ஒரு விளக்குமாறு ஆபீஸுக்குப் போய் இரண்டாயிரம், மூவாயிரம் சம்பாதிச்சுட்டா, தான் பெரிய ஆம்பளைன்னு நினைக்கறான். அங்க வெட்டி முறிக்கிறதா கற்பனை பண்றான். அங்க என்ன செருப்படி வாங்கறான் அப்படின்னு வெளியே சொல்றதேயில்லை. ஆனா, வீட்டுக்கு வந்தா பொண்டாட்டிக்கிட்டே, ''நான் யார்

> “என் எல்லையைத் தாண்டி உள்ளுக்குள்ளே நுழையாதேன்னு நான் மெலிசா ஒரு கயிறு கட்டி வச்சேன்.”

தெரியுமா? தொலைச்சுடுவேன். தொலைச்சு'' அப்படின்னு விரலைக் காட்டி மிரட்டறான். பொண்டாட்டி, 'உன்னைத் தொலைக்கணும்னு' ஆரம் பிச்சா சொடுக்கு நேரம் போறும்.

நீ ஏன் ராதாகிருஷ்ணன்கிட்டே வன் முறைக்குப் போனே? ஏன் நாடார்கிட்ட வன்முறைக்குப் போகலை? நாடார் திருப்பி அடிப்பார். முழியை நோண்டிரு

ஆனால் ராதாகிருஷ்ணன் அடிக்கலை. கடவுள் அடிச்சுருக்காரு. ராதாகிருஷ்ண னைத் தொட்டா முட்டியைப் பேத் துருவேன், அப்படின்னு கைக்கோலால விரல்ல குத்தியிருக்காரு. இது யாரோ கூலியாளோட கட்டை, ரௌடி யினுடைய தடி, உன்னை மாதிரி பல பேரைக் குத்தியிருக்கற தடி. பாவம் பண்ண மரம். தவில் வாசிக்கற குச்சிதான்



வாருன்னு தெரியும். ராதாகிருஷ்ணன் பயந்தவர். 'ஒரு ஐயரு இப்படி ஆடறதா' அப்படின்னு ஒரு வீராவேசம். ஏன் இந்த வீராவேசம்? ஐயருக்கு அடிக்கத் தெரி யாது. ராதாகிருஷ்ண ஐயர் கை ஓங்கினா கத்தியைக் காண்பிப்போம். கத்தியைக் காண்பிச்சா ராதாகிருஷ்ண ஐயர் பயப் படுவாரு, கைகூப்பி அழுவாரு, அப் படின்னு ஒரு நினைப்பு. இப்படித்தான் நாம பொண்டாட்டி பத்தியும். கை ஓங்கி அடிச்சா அவ என்ன பண்ணுவா? வாங் கிண்டு சும்மாதானே இருக்கணும்? எங்க வாங்கிண்டு சும்மா இருப்பாங்களோ அங்கதான் நாம கை ஓங்கி அடிப்போம். எங்க திருப்பி அடிப்பாங்களோன்னு ஒரு சின்ன நினைப்பு இருக்கோ, அங்க மரி யாதையா சமாதானம் பேச ஆரம் பிச்சுடுவோம். கீழ் வீட்டுக்காரர்கிட்டே சமா தானம். மேல் வீட்டுக்காரர்கூட அடிதடி-ஹா-. என்ன நியாயம்ப்பா இது. 'ஊரு மிரட்ட ஆரம்பிச்சா ஒரு நல்ல பொண்டாட்டி சீறி எழுந்து தொலைச்சுடுவேன் படவா' அப்படின்னு பொங்கற மாதிரி உன்னைச் சீற ஆரம்பிச்சா என்ன பண்ணுவ?

நல்லபடியா தவில் வாசிக்கப் போகக் கூடாதோ? ஆளைக் குத்தறதுக்குக் காசு கொடுத்து வந்திருக்கான். ஒழிஞ்சு போறது. அதை நெருப்புல போட்டுடறா.

ஆனால், உன்னை அடிச்சது ராதா கிருஷ்ணன் இல்லை. சந்தடி சாக்குல வேறு யாரோ புகுந்திருக்காங்க. உங்க சகோதரர்களாக இருக்கலாம். வேற ஏதா வது உறவுக்காரங்களாக இருக்கலாம். யார் கிட்டயாவது பிஸினஸ் பண்றேன்னு காசு வாங்கிக் கொடுக்காம 'என்ன பண்ணப் போற?' அப்படின்னு கேட் டவங்களா இருக்கலாம். அப்படி யார் கிட்டயாவது கேட்டியோ'' சங்கரன் கேட்க அவன் திடுக்கிட்டு விழித்தான்.

''யோசனை பண்ணிச் சொல்லு. ஒண்ணும் அவசரமில்லை. அம்மா, எல் லாருக்கும் காபி கொடு'' என்று ருக்மணி யைப் பார்த்துக் கேட்க, ருக்மணி வேகமாக உள்ளே போனாள்.

சங்கரய்யர் எந்தவிதச் சிந்தனையும் இல்லாமல் அவனையே பார்த்துக் கொண் டிருக்க, சங்கரய்யர் மனைவி வெறுமே

விரல்களை மெல்ல தேய்த்துக்கொண்டு உள்ளுக்குள் இடையறாது மந்திரஜெபம் செய்து கொண்டிருந்தாள். சிறு வயதிலேயே சங்கரய்யர் அவளை நல்ல திசைக்குத் திருப்பியிருப்பார் போல, மந்திர ஜபம் சொல்லிக் கொடுத்திருப்பார் போல, இப்பொழுது அவள் வெறுமே உட்கார்ந்துகொண்டிருப்பதே இல்லை. அரைக்கண் மூடிய நிலையில் இடையறாது மெல்லிய சிரிப்பை உதட்டில் ஏந்திக் கொண்டு முகம் முழுவதும் பிரகாசமாக ஏதோ மந்திரம் சொல்லிக் கொண்டிருந்தாள். ரேவதிக்கு அந்த மாமியை மறுபடியும் நமஸ்காரம் பண்ண வேண்டுமென்று தோன்றியது. மெல்ல ராதாகிருஷ்ணனின் புறங்கையைத் தொட்டு அங்கே பாருங்கள் என்று சங்கரன் மனைவியைக் காண்பித்தாள். சங்கரன் மனைவியை நோக்கி ராதாகிருஷ்ணன் கை கூப்பினார்.

**சா**தாரண மர நாற்காலியில் உட்கார்ந்து கொண்டிருந்த பெண்மணிதான். ஆனால், அந்த மர நாற்காலியை சிம்மாசனம் போல பாவித்து அவள் உட்கார்ந்து கொண்டிருந்தவிதம் ஓர் அரசி போலத் தோற்றமளித்தது. நாற்காலி சிம்மாசனம் போல் காட்சியளித்தது.

அவள் காதுகளில் வைரத்தோடுகள் மின்னின. மூக்குத்தியும் பளபளப்பாய் இருந்தது. கையில் நிறையத் தங்க வளையல்கள் இருந்தன. ஆனால், அவையெல்லாம் அவளுக்கு லட்சியமானதாகத் தோன்றவில்லை. துடைத்துத் துடைத்துத் தன்னைக் கண்ணாடியில் பார்த்துக் கொள்கிற பெண்ணாக இல்லாமல் அரைக்கண் மூடி தனக்குள்ளே தன்னைத் தேடுகிற பெண்மணியாக அந்த அம்மாள் உட்கார்ந்திருந்தாள்.

ரேவதியும், ராதாகிருஷ்ணனும் கவனிப்பதை சங்கரய்யர் பார்த்துவிட்டு மெல்ல மனைவி பக்கம் திரும்பினார்.

"மந்திரஜபம் நடக்கிறதாக்கும்" என்று பொதுவாகச் சொன்னார்.

ஆனால், அந்த விசாரிப்பு அவருடைய மனைவியை நோக்கித்தான் போயிற்று. அந்த விசாரிப்புப் போய் சில நொடிகள் கழித்தே அவள் கண் திறந்தாள். எதிரே உள்ளவர்களைச் சாதாரணமாகப் பார்த்தாள். பிறகு மெல்ல தலையை இடப் பக்கம் திருப்பி அவரைப் பார்த்தாள். "ஆமாம்" என்றாள். இதற்கு அவள் வேண்டுமென்ற அவகாசம் எடுத்துக் கொண்டது போல் தோன்றியது.

ஒரு கேள்வி கேட்டால், பதில் சொல்ல உடனே பாயாது, அந்தக் கேள்வியை உள்வாங்கி பதில் சொல்வதுபோல் இருந்தது.

"என்ன?"

புருவம் உயர்த்தி சங்கரய்யர் கேட்டார்.

"வாராஹி."

"வாராஹியா. என்ன திடீர்னு இன்னிக்கு வாராஹி."

"சரி, உள்ளே நுழைஞ்சதெல்லாம் சண்டை சச்சரவா இருக்கே. ஓரே ரகளையா ஒருத்தரை ஒருத்தர் வெட்டுவேன், குத்துவேன்னு கடினமான வார்த்தையா இருக்கே. யாரோ இந்தப் பிள்ளையை அடிச்சுட்டு வேற போயிருக்கான். அதனாலதான் என்னமோ வாராஹி சொல்லணும்னு தோணித்து. கார்த்தாலேர்ந்து வாராஹிதான் ஓடிண்டிருக்கு. இப்போ இன்னும் இழுத்துப் பிடிச்சு கூர்மையா சொல்லிண்டிருக்கேன்."

அவர் மனைவி சொல்ல, "ஆமாம். வாராஹி ஒரு நல்ல மந்திரம். எதிரிகளைத் தள்ளிப்போன்னு விரட்டறதுக்கு, அவர்கள் நம்மைத் தாக்காம இருக்கறதுக்கு வாராஹி ரொம்ப உசத்தியான மந்திரம்."

ருக்மணி காபி டம்ளருடன் நுழைய அவர் ருக்மணியைப் பார்த்து "ருக்மணி உனக்கு வாராஹி தெரியுமோ" என்று



**தலைவர் ஏன் சிறை வளாகத்துல போய் நின்னுக்கிட்டு முகர்ந்து முகர்ந்து பார்க்கிறார்?"**

**"சிறை'வாசம்' அனுபவிக்காதவர்னு யாரும் சொல்லிடக் கூடாதாம்."**

**— சீர்காழி வி. ரேவதி**

கேட்டார்.

"எனக்கு தெரியாது மாமா."

ருக்மணி சாதாரணமாக பதில் சொன்னாள்.

"முப்பத்தாறு அட்சரம், கொஞ்சம் பெரிய மந்திரம். ரொம்ப ஜாக்கிரதையா சொல்லணும். வாராஹி ஜபம் பண்றவனோட வாக்குவாதம் வச்சுக்காதேன்னு சொல்லுவா. மாமி வாராஹி சொல்றானாம் ஜாக்கிரதையா இருந்துக்கோ என்று சொன்னான்.

"என்னையோ இங்க இருக்கறவாளையோ மாமி ஒண்ணும் பண்ண மாட்டா."

"அப்புறம் என்னத்துக்கு வாராஹி சொல்றா?"

"யார் கெட்டவாளோ அவாள இலேசா மிரட்டறதுக்குத்தான் மாமி மந்திரம் சொல்லுவாளே தவிர யாரையும் அடிக்கறதுக்கோ, அழிக்கறதுக்கோ மாமி மந்திரம் சொல்லிப் பார்த்ததேயில்லை."

"இலேசா மிரட்டறதுன்னா என்ன?"

"தான் பண்ணது தப்புன்னு அவனுக்கே தெரியணும்."

"அது எப்படித் தெரியும்? தப்புன்னு தெரிஞ்சா பண்ணாதயே இருக்க மாட்டானா. பண்ணிட்டு தப்புன்னு தெரிஞ்சா என்ன பிரயோஜனம்?"

"இல்லை. பண்றதைப் பண்ணிட்டான். ஆனா, தப்புன்னு தெரிஞ்சதுன்னா அவனா மன்னிப்புக் கேட்க வருவான்."

"நீ அப்படி நினைக்கிறியா ருக்மணி?"

- ருக்மணியின் பதிலுக்குக் கேள்வி கேட்க, ருக்மணி நம்புகிறேன் என்று தலையசைத்தே பதில் சொன்னாள்.

மாமி, ருக்மணியும் சங்கரனும் பேசுவதைக் கேட்டுக்கொண்டே இடையறாது மந்திரம் சொல்லிக் கொண்டிருந்தாள்.

ராதாகிருஷ்ணனும், ரேவதியும் ஆவலாக கவனித்துக் கொண்டிருந்தார்கள். எதிரே உட்கார்ந்த இளைஞன் எதற்கு இந்தப் பேச்சு என்று புரியாது தனக்கு நிகழ்ந்தவற்றையே மறுபடியும் உள்ளுக்குள் அசை போட்டுக் கொண்டிருந்தான்.

"உங்களை யாரோ தப்பா புரிஞ்சுண்டு அடிப்பேன்னு வந்தாளே நீங்க வாராஹி தானே சொன்னேள். ஆறு ஏழு பேர் வந்தா அந்த ஏழு பேரும் உருப்பட



"இன்னிக்கு என் ராசிபலன்லே 'பெரிய மனிதர்கள் மூலம் பண வரவு'ன்னு போட்டிருக்கு..."

"அப்ப கபாலியும் பக்கிரியும் மாமூலோட வருவாங்கன்னு சொல்லு!"

- தஞ்சை தாமு

லையே."

"அடாடா... என்னது இது. கெட்ட பேர் வாங்கிக் கொடுத்துடுவ போலிருக்கே. யாரும் உருப்படக்கூடாதுன்னு நான் மந்திரம் சொல்றவனா மாத்திடுவ போலிருக்கே?"

"இல்லை. இப்படி வந்து தேவையில்லாம கால் அகட்டி, விரல் உயர்த்திப் பேசறாளே இவாளுக்குப் புத்தி கொடுன்னு தான் வாராஹியைச் சொல்லிண்டிருக்கேன். அந்த ஏழு பேரும் இதே ஏரியாவுல இருக்கறவாதான். பெரிய பெரிய பிஸ்தாவாக இருந்தவாதான். இன்னிக்கு அந்த ஏழு பேருக்கும் விலாசமில்லை', காரணம் உங்களைப் பகைச்சுண்டது. இதை வாய்விட்டுச் சொல்லி அழுது ஒருத்தர் வந்திருக்கார். அதனாலத்தான் எல்லோருக்குமே இது தெரிஞ்சது.

ராதாகிருஷ்ணனும், ரேவதியும் கை கட்டி, ருக்மணியையே பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

"அவனவன் கர்மா அவன் அவனை வீழ்த்தறது. நாம என்ன பண்றது. இங்க காப்பா எங்கிட்ட வராதப்பா. என் எல்லையைத் தாண்டி உள்ளுக்குள்ளே நுழையாதேன்னு நான் மெலிசா ஒரு கயிறு கட்டி வச்சேன். அதுக்கப்புறம் அவா யாரும் வரலையே. அவா அழியணுங்கறது என் விருப்பமில்லை."

சங்கரன் மெல்லிய குரலில் சொல்ல, "ஆனா, அவா அழிஞ்சா' என்று ருக்மணி



## பக்தி சித்ரா

சமஸ்கிருதத்தில் 'படா' என்றால் கான்வாஸ்; 'சித்ரா' என்றால் சித்திரம். ஒரிஸாவின் புகழ் பெற்ற ஓவியக் கலையான 'பட்ட சித்ரா'வுக்குப் பொருள் புரிந்தது அல்லவா?

பூரி ஜகன்னாதரை வழிபடும் ஒரு சாதனமாகவே 'பட்ட சித்ரா' கருதப்படுவதால், ராமாயணம், மகாபாரதம் போன்ற புராணக் கதைகளை அடிப்படையாகக் கொண்டே ஓவியங்கள் அமைந்துள்ளன.

ஜகன்னாத், பல பத்திரர் மற்றும் சுபத்திரையுடன் சேர்ந்து அருள்புரியும் குடும்ப ஓவியமே, பட்ட சித்ரா ஓவியங்களில் மிகப் பிரபலம். பூரியில் இருக்கும் 'ரகுராஜ்பூர்' என்ற கிராம மக்களில் பெரும்பாலோர் இக்கலையில் ஈடுபட்டுள்ளனர்.

''இது கலை மட்டுமல்ல, ஸ்ரீ கிருஷ்ண கைங்கரியம்'' என்கிறார்கள் பக்தியோடு!

- ல.சே

---

சங்கரனுக்குப் பதில் சொன்னாள்.

எல்லோருக்கும் காபி கொடுக்கப்பட்டது. மறுபடியும் ஒரு மௌனம் நிலவியது.

சங்கரன் கர்ச்சீப்பால் காபி டம்ளரைத் தூக்கியபடி சூடாக உறிஞ்சிக் குடித்தார். அனுபவித்து ரசித்து உள் வாங்கினார். மெல்ல அந்த இளைஞனைப் பார்த்தார்.

''உனக்கு என்ன வேணும் சொல்லு.''

இன்னொரு மடக்குக் காபி குடித்தார்.

''ராதாகிருஷ்ணய்யர் காலி பண்ணிட்டாருன்னா நல்லாயிருக்கும்.''

''பண்ண மாட்டேன்னு எப்போ சொன்னாரு சொல்லு.''

''இல்லை, முரட்டுத்தனமா பேசினாரு.''

''வேறு எதுக்காகவாவது பேசியிருக்கலாம். வேற ஏதாவது எதிர்பார்த்திருக்கலாம். அல்லது பண்றதா வேண்டாமான்னு குழம்பியிருக்கலாம். ஒரு மனுஷனுக்குக் குழம்பறதுக்கு ரைட் உண்டு. குழம்பினதுதான் தெளியும். நீ உடனே காலி பண்ணணும்னு சரின்னு சொல்லி வேட்டி சட்டைய எவனும் அவுக்க மாட்டான். தனக்கு என்னென்ன சாதகபாதகம்னு யோசிக்க நேரம் இருக்க வேண்டாமா? வெறும் மிரட்டல் உபயோகப்படுமா. இப்படி இந்த விஷயத்தை அணுகியிருக்கக்கூடாது.

ஐயா, எனக்கு இருக்கறது இந்த ஒரேயொரு சொத்து. இந்தச் சொத்தை வித்து நான் வேற தொழில் பண்ணலாம்னு இருக்கேன். உடனே காலி பண்ண வேணாம்ப்பா. மெல்ல காலி பண்ணீங்கன்னா நல்லாயிருக்கும். ஆனா ஒருநாள் காலி பண்ணணும்யா, அதை ஞாபகம் வச்சுக்கோங்க. நான் இப்போதைக்கு ஆறு மாசம் டைம் தரவா, அப்படின்னு கேளுங்க. இல்லை ஒரு வருடம் தரவா. அப்படியில்லைன்னா கூட ஒரு மாசம் டைம் எடுத்துக்கோங்க. ஏழு மாசத்துக்குள்ள காலி பண்ணிடுங்கய்யா. அம்மா ஐயாவுக்கு ஞாபகப் படுத்துங்கம்மான்னு சொல்லி ஒரு கிலோ ஸ்வீட் கொடுத்துட்டு வரணும். ஒரு மாசம் பொறுத்து பண்டிகைன்னு வந்தேன். அப்படின்னு வேட்டி சட்டை கொடுத்துட்டு வரணும்; ரெண்டு மூணு மாசம் கழிச்சு மறுபடியும் போய் நல்லாயிருக்கீங்களா, சௌக்கியமா, வீடு கிடைச்சுதா அப்படின்னு பார்த்திருக்கணும். இதெல்லாம் பண்ணாத என்ன மிரட்டல்? மிரட்டி என்ன சாதிக்க முடியும்? நிஜமாவே தொந்திரவு பண்ணணும்னு ஆரம்பிச்சா நீ ஒண்ணுமே பண்ண முடியாது. நாடார் ரெடியா இருக்கறதுனால ராதாகிருஷ்ணனும் காலி பண்ற முடிவுக்கு வந்தாச்சு. அது உன் இடம். உனக்குக் கிடைக்கும். கவலைப் படாதே.''

''ரொம்ப சந்தோஷங்க'' என்று சங்கரரை நோக்கி அந்த இளைஞன் கை கூப்பினான்.

சங்கரன் கண்களை மூடிக் கொண்டார். அடுத்து என்ன செய்யலாம் என்று யோசனை செய்ய ஆரம்பித்தார்.

(தொடரும்)

# யாட்ரோ கணேஷ்!



பார்க்கப் பார்க்க ஆசை பொங்கும்: விலையைக் கேட்டால் மூச்சடைக்கும். கலை மதிப்பைக் கேட்டால் மயக்கம் வரும்...

இப்படியொரு அனுபவம், சென்னை நுங்கம்பாக்கம் இஸ்பஹானி சென்டரில் 'யாட்ரோ' கலையகத்தில் சாமானியர்களுக்கு, சர்வ நிச்சயமாக ஏற்படும். முழுக்க முழுக்க ஏற்றுமதி கலை நயம்!

'யாட்ரோ' என்பது கடையின் பெயர் மட்டுமல்ல; பீங்கான் கலையின் பெயரும் அதுவே!

ஐம்பது வருஷத்துக்கு முன், ஸ்பெயின் நாட்டின், வாலன்ஸியா கிராமத்தில், யுவான், யோஸே, வின்சென்ட் என்ற மூன்று சகோதரர்கள், சின்னஞ்சிறு சூளையில், மினுமினுப்பான பீங்கான் பொம்மைகள் தயாரித்தார்கள். நாளடைவில், சர்வதேச புகழ் பெற்று, வியாபாரம் கொடி கட்டிப் பறந்ததில் இன்று, லட்சம் சதுர அடியில் 'போர்ஸலைன் க்ரியேடிவ் சிடி'யே உருவாகிவிட்டது.





''விலை கொஞ்சம் அதிகம்தான். ஆனால் ஆயுள் முழுக்க நீங்கள் பெருமை கொள்ளும் கலைப்பொருளாக இருக்கும்'' என்கிறார் 'யாட்ரோ'வின் சென்னை உரிமையாளர் ரிஷி அகர்வால்.

இந்தப் பிள்ளையார்கூட 'யாட்ரோ கணேஷ்'தான். விலை முக்கால் லட்சத்துக்கு ஒரு பைசா குறையாது!

— அனு



கலைப்பொருள் சிறப்பிதழ்

சுவடுகள்:37

திருப்பூர் கிருஷ்ணன்

ராமாயி அம்மாள், செல்லப்பா போன்றோரை நான் 'கண்ட' பேட்டிகள், ஆர்யாவை நான் 'காணாத' பேட்டி இவையெல்லாம் இருக்க, டீ.வி.யில் நான் 'கொடுத்த' பேட்டிகளும் பல. அந்த அனுபவங்கள் வித்தியாசமானவை.

ஒருமுறை தோட்டத்தில் பேட்டி எடுக்கலாம் என நிலைய அறையை விட்டு வெளியே அழைத்துச் சென்றார்கள். அங்கே ஓயாமல் காகம் கரைந்தது. அதன் குரலும் பதிவாகுமே! படப்பிடிப்பை *உட்புறத்திலேயே வைத்துக்





# நான் கொடுத்த டீ.வி. பேட்டிகள்...

கொள்ளலாம் என அறைக்கே திரும்பினோம். 'மாரிசாமி, கோபாலு!' எனத் தொ.கா அதிகாரி ஏதேதோ பெயர்களைச் சொல்லிக் கூப்பிட, ஊழியர்கள் ஓடி வந்தார்கள். அவர் சொன்னபடி எல்லோரும் செம்பருத்திப் பூக் கிளைகளையும் போகன்வில்லாக் கிளைகளையும் ஒடித்துக்கொண்டு வந்து, என்னைச் சுற்றி நின்றார்கள். ஒருபுறம் போகன்வில்லா இடிக்க, இன்னொருபுறம் செம்பருத்திப் பூ கன்னத்தை வருட, இதனிடையே, கேள்விகளுக்கு பதில் சொன்னேன். பதிவு செய்த பேட்டி ஒளிபரப்பானபோது, அறையில் எடுத்த பேட்டியாகத் தென்படவில்லை. பூக்கள் மலர்ந்த பிருந்தாவனத்தில் நான் காட்சி தந்த அதிசயத்தை என்னென்பது! பேட்டியில் என்னைச் சீண்டும் வினாக்களுக்குக்கூட நான் உணர்ச்சிவசப்படாமல் பதிலளித்ததாகச் சிலர் சொன்னபோது என்னுள் ஒரு முறுவல் பிறந்தது. அந்தப் பெருமை முழுவதும் என்னை வருடிக் கொண்டிருந்த மலர்களுக்கல்லவா உரியது? பூக்கள் கன்னத்தைத் தடவும் இதமான சூழலில் ஒருவன் எப்படித்தான் கோபப்பட முடியும்?

இன்னொருமுறை தள்ளாத வயோதிகர் ஒருவர், கையில் காகிதத்தோடு எழுத்துக் கூட்டி வாசித்துக் கேள்விகளைக் கேட்டார். இப்படியும் ஒருவர் பேட்டி காண்கிறாரே என தயக்கத்தோடு பதிலளித்தேன். ஒளிபரப்பானபோது அந்தப் பரிதாபத் தோற்றமுடைய கிழவரைக் காணோம். நான்

**பூக்கள் கன்னத்தைத் தடவும் இதமான சூழலில் ஒருவன் எப்படித்தான் கோபப்பட முடியும்?**

எப்போதுமே சந்தித்திராத ஓர் இளம்பெண் என்னிடம் கணீர் கணீர் என்று கேள்வி கேட்டுக் கொண்டிருந்தார்! தொலைக்காட்சி செய்யும் மாயங்கள் விந்தையானவை.

சன் டீ.வியில் 'வணக்கம் தமிழகம்' நிகழ்ச்சிக்கு அழைக்கப்பட்டேன். சுஜாதாவை ஒருங்கிணைப்பாளராகக் கொண்ட 'அம்பலம்' இணைய இதழில் நான் ஆசிரியராய் இருந்த





தருணம். என்னை எழுத்தாளர் ரமேஷ் பிரபாவும் ஒரு சகோதரியும் கேள்வி கேட்டார்கள். ரமேஷ்பிரபா என்னைப் பற்றி நன்கு அறிந்தவராக இருந்தது எனக்கு நிறைவு தந்தது. இடையே ஆழ்ந்த இலக்கியம் குறித்து நல்ல ஞானமுள்ள சன் டீ.வி மாலன் வந்து, நான் ஜானகிராமன் உள்படப் பல முன்னோடி இலக்கியவாதிகளோடு நெருங்கிப் பழகியவன் என்பதை ரமேஷ்பிரபாவுக்கு நினைவுபடுத்திச் சென்றதும் நிகழ்ச்சி சிறப்படைய உதவியது.

பேட்டியின் வெற்றி, பேட்டி கொடுப்பவரைப் பொறுத்தது மட்டுமல்ல. நல்ல பதிலைத் தூண்டும் வகையில் கேள்வி கேட்டால்தான் பேட்டி வெற்றி பெறும். பேட்டி காண்பவர், பேட்டி கொடுப்பவர் பற்றி ஓரளவாவது முன்கூட்டியே அறிந்து வைத்திருப்பது அவசியம். (ஒரு பேட்டியில் பதிவு செய்யும்முன் என்னிடம் கேள்வியாளர் தயக்கத்தோடு கேட்ட கேள்வி "நீங்கள் எத்தனை ஆண்டுகளாக மிருதங்கம் வாசிக்கிறீர்கள்?" என்பது! வெற்றிகரமான மணவாழ்க்கைக்குத் தாள ஞானம் அவசியம்தான் என்றாலும், நான் மேடைகளில் தாளம் போடுவதில்லை என்பதை அவருக்கு நாசூக்காய் அறிவுறுத்தினேன்!)

சன் டீ.வி பேட்டி ஒளிபரப்பான சிறிது காலத்திலேயே ஜெயா டீ.வியிலிருந்து பேட்டிக்கான அழைப்பு வந்தது. என்னைப் பற்றியே திரும்பத் திரும்பக் கேட்க வேண்டாம் என்றும் நான் அப்போது தான் முன்னோடி எழுத்தாளர் கோதைநாயகியின் வரலாற்றை எழுதியிருந்ததால் கோதைநாயகியின் இலக்கியம் குறித்துக் கேள்வி கேட்குமாறும் கேட்டுக் கொண்டேன். அந்தப் பேட்டியின் பெரும்பகுதி கோதைநாயகி பற்றியதாக அமைந்து மகிழ்ச்சி தந்தது.

தற்போது பொதிகையில் 'தெரியுமா உங்களுக்கு?' நிகழ்ச்சியில் உடன் உரையாடும் நபராக இயங்கும் வாய்ப்பு அவ்வப்போது கிடைக்கிறது. பல துறை சார்ந்த பிரமுகர்களுக்கும் நேயர்களுக்கும் இடையே தொலைபேசி மூலம் பாலமாக இயங்குகிறேன். 'தெரியுமா உங்களுக்கு?' நிகழ்ச்சியில் நேயர்களுடன் பேசும் போது நான் தெரிந்துகொள்ளும் உண்மை என்னவென்று தெரியுமா உங்களுக்கு? இன்னமும் பொதுமக்களிடையே சுதந்திர கால அறச்சீற்றம் மங்காமல் கணகணவென அப்படியே கனன்று கொண்டிருக்கிறது என்பது தான். இந்த அறச்சீற்றம்தான் இந்தியாவின் பலம்.

பேட்டிகளில் கேள்வி கேட்பவர்கள் எப்படிக் கேட்கக்கூடாது என்பதற்கு அண்மையில் ஒரு தொலைக்காட்சியில் ஒரு பிரமுகரிடம் கேட்கப்பட்ட பின்வரும் கேள்வி உதாரணம். கேள்வி: 'தொடக்க காலத்தில் கையெழுத்துப் பத்திரிகை நடத்தியதாய்ச் சொன்னீர்களே! கையெழுத்துப் பத்திரிகையை எத்தனை பிரதி அச்சிட்டீர்கள்?!'

(தொடரும்)





இன்னும் நாலைந்து தீற்றல்கள்தான் பாக்கி. ஓவியம் முழுமை பெற்று விடும். படம் போடும் ஸ்டாண்டிலிருந்து விலகி, ஓவியத்தின் முழுப் பரிமாணத்தையும் ஆராய்ந்த போதுதான் முதன் முதலாக அவனைப் பார்த்தேன்.

நான் பயிலும் ஓவியப் பள்ளியின் தோட்டத்தை ஒட்டிய வேலியோரம் நின்றிருந்தான். அவன் வெகு நேரமாகவே என்னைக் கவனித்துக் கொண்டிருந்திருக்க வேண்டும். என் பார்வை பட்டதும் நேசமாகப் புன்னகைத்தான். வேலிக் கம்பிகளின் இடைவெளியில் தெரிந்த அந்த முகம், முதல் பார்வையிலேயே என்னுள் பதிந்தது.

"தம்பி... உனக்கு என்ன வேணும்...?"

அவன் பதில் பேசாமல் நெளிந்தான்.

"படம் போடறதைப் பார்க்கணுமா? உள்ளே வா..."– என்றேன்.

தயக்கத்துடன் வேலிக் கதவைத் திறந்து கொண்டு வந்தான்.

அவனது கரங்களைப் பற்றிக் கொண்டு, "உன் பேர் என்னப்பா...?" என்றேன்.

"வேலுமணி."

"இங்கே என்ன செய்யறே...?"

"ம்... வந்து... நான் பட்டம் விட்டுக்கிட்டிருந்தேன். அது நூல் அறுந்து போயிடுச்சு..."

"பரவாயில்லே... நான் வேறே வாங்கித் தரேன்..."



# அவன் பெயர் வேலுமணி...

மானஸா

"வேண்டாம்... அந்தக் கொடியிலே சிக்கிக்கிட்டு இருக்கு பாருங்க. அதை எடுக்கத்தான் வந்தேன்."

காற்றில் ஆடிக் கொண்டிருந்த பட்டத்தை, சேதமில்லாமல் எடுத்துக் கொடுத்தேன். அவன் முகம் மலர்ந்தது.

"இப்ப விளையாடற நேரம். மணியடிக்கறதுக்குள்ளே நான் போகணும்..." என்றான்.

"நீ எங்கே இருக்கே...?"

"காந்தி இல்லத்துல..."

"அடிக்கடி வர்றியா...?"

"சரி" எனத் தலையாட்டியவன், 'உர்...உர்' எனக் கற்பனை வாகனத்தைச் செலுத்தியபடியே விரைந்தான். அவன் போனதும் தான் கவனத்துக்கு வந்தது.

"காந்தி இல்லம்...!"

அருகிலிருக்கும் ஆதரவற்ற குழந்தைகள் விடுதி. அடப்பாவமே! வேலு பெற்றோர்களை இழந்தவனா?!

அதன் பிறகு வேலு பலமுறை வந்து போய் என்னுடன் நெருக்கமானான். சமயங்களில் அவனிடம் தூரிகை கொடுத்து படம் போடச் சொல்வேன். சூரியன்... எலி.. யானை... பூ என விதவிதமாக வரைவான். ஒரு நாள் பெண்ணின் முகம் வரைந்து "இது என் அம்மா" என்றான்.

"வேலு... உனக்கு அப்பா, அம்மா இருக்காங்களா?" என்றேன். சற்றே தயங்கியவன், "அப்பா யாருன்னு தெரியாது. அம்மா மட்டும் என்னைப் பார்க்க எப்பவாவது வருவாங்க... போன தடவை அவங்க வந்தப்ப லைட் எரிஞ்சுகிட்டே ஓடற கார் பொம்மை வாங்கிக்கிட்டு வந்தாங்க. இப்ப அது ஓடலை..."



பெற்ற மகனை இப்படி விடும் அளவுக்கு அவனது அன்னைக்கு என்ன பிரச்னையோ?

மனத்தில் முள் தைத்த வலி.. வேலுவை அருகில் இழுத்து அணைத்துக் கொண்டேன்.

என் படிப்பு முடிய சில நாட்களே இருந்தன. "இன்னைக்கு இங்கே என்ன விசேஷம்... அங்கிள்? லைட்டெல்லாம் போட்டு, பந்தல் கட்டியிருக்கு..."

"அதுவா... எங்க படிப்பு முடியப்போகுது. அதான் விழா கொண்டாடறோம்."

"அப்ப நீங்க போயிடுவீங்களா...?"

அவனது குரலில் இருந்த ஏக்கம் என்னை ஏதோ செய்தது. சமாளித்து, "அதனால் என்ன... உன்னைப் பார்க்க நான் அடிக்கடி வருவேன்..." என்றேன். அடுத்து வந்த நாட்களில் அவன் வரவில்லை.

ஒரு நாள் அவனைத் தேடி 'காந்தி இல்லம்' போனேன். அலுவலகத்தில் இருந்த கன்யாஸ்த்ரீ என்னை விசாரித்தார். விவரம் சொன்னேன்.

"வேலுமணியைப் பார்க்கணும்..."

"இப்ப அவன் வகுப்பிலே இருப்பான். கூப்பிட முடியாது..."

"இதை அவனிடம் கொடுத்துடுங்க. இது அவனுக்கு ரொம்பப் பிடிக்கும். அவனோட அம்மா வாங்கிக் கொடுத்தது உடைஞ்சு போச்சுன்னு சொன்னான். அதனாலதான் புதுசா வாங்கிக்கிட்டு வந்தேன்..."

நான் நீட்டிய கார் பொம்மையை வியப்பாகப் பார்த்தார் அந்தப் பெண்மணி!

"தனிப்பட்ட முறையில் எந்தக் குழந்தைக்கும், எதையும் நாங்க வாங்கறது இல்லை. தவிர, நீங்க சொன்னது போல் வேலுமணியைத் தேடி அம்மான்னு யாரும் இதுவரை வந்ததில்லை. பஸ் ஸ்டாண்டில் அனாதையா நாங்க அவனைக் கண்டெடுத்த போது அவன் நான்கு மாதக் குழந்தை."

நான் வெளிறிப் போனேன்.

பொம்மையின் மீதான ஆசையா? அம்மாவைக் காணாத ஏக்கமா? எது அவனை அப்படிச் சொல்ல வைத்தது? அந்தச் சின்ன இதயத்தில் இன்னும் என்னவெல்லாம் புதைந்திருக்கும்?

என் குழப்பத்தைக் காட்டாமல், "நான் கட்டாயப்படுத்தறதா நினைக்காதீங்க... தயவு செய்து இதை வேலுக்கிட்டே கொடுத்துடுங்க. வரும் ஞாயிற்றுக்கிழமை நான் பார்க்க வருவேன்னு சொல்லிடுங்க..."

சற்றே சிந்தனையுடன் அதை வாங்கிக் கொண்டார் அந்தக் கன்யாஸ்த்ரீ.

ஞாயிற்றுக் கிழமை. என் வருகைக்காகவே காத்திருந்தான் வேலு. என்னை நோக்கி ஓடி வந்தவனை வாரி எடுத்து முத்தமிட்டேன். அவன் கையில் கார் பொம்மை.

"நான் ஊருக்குப் போறேன் வேலு."

"சரி அங்கிள். இங்கப் பாருங்க. எங்க அம்மா புதுசா கார் வாங்கிக் கொடுத்திருக்காங்க... சூப்பரா இருக்குல்லே?" என பெருமையாகக் காட்டினான். ஒன்றும் புரியாதவனாய் அந்தப் பெண்மணியைப் பார்த்தேன்.

"பொம்மைக்கோ, அம்மாவுக்கோ ஏங்காத குழந்தை ஏது? அவன் தன்னோட கற்பனை அன்னையை இழப்பதில் எனக்கும் விருப்பமில்லை.." என்றார் எனக்கு மட்டும் கேட்கும் குரலில் புன்னகையுடன்.

நான் வாசலை நெருங்கும் வரை டாடா காட்டிக் கொண்டிருந்தான் வேலு.

எங்கேயாவது – 'விற்பனைக்கு அல்ல' என்ற குறிப்புடன் தாய் அன்புடன் உணவை ஊட்ட, ஆசையுடன் சாப்பிடும் சிறுவனின் ஓவியத்தைப் பார்த்தால் அதுதான் வேலுமணி என்று நீங்கள் தெரிந்து கொள்ளலாம். ○




"என்னய்யா இது அக்கிரமம்? அயல் நாட்டுக் கதையை அப்படியே காப்பி அடிச்சு எழுதியிருக்கே...!"

"பத்திரிகைத் துறையில்தான் அந்நிய முதலீட்டை வரவேற்கிறதா அமைச்சரவை முடிவு செய்துடுச்சே, அப்புறம் என்ன தயக்கம்!"

– அம்பை தேவா

# பக்கவாதமா?

முறையான முழுமையான சிகிச்சை* பெற்றுக் குணமடையுங்கள்!

**அன்னை மருத்துவமனை**

(In-Patient facility available)

23, சரோஜினி தெரு, தி. நகர், சென்னை - 600 017. ☎ : 4344926

(உஸ்மான் ரோடு கீதாஞ்சலி ஹோட்டல் அருகில், வர்த்தமானன் பதிப்பகம் எதிரில்)

* **சிகிச்சை முறைகள் :** ★ சித்த மருந்துகள் ★ அக்குபஞ்சர் ★ தைலம், ஒற்றடம் ★ பிஸியோதெரபி ★ யோகாசனம்

மருத்துவ ஆலோசனைக்கு தொலைபேசி மூலம் முன்பதிவு அவசியம்!

அரசால் அங்கீகரிக்கப்பட்டு அனைத்து நூலகங்களுக்கும் செல்லும் ஒரே கட்டுமான இதழ்

**பில்டர்ஸ் வேர்ல்டு**



செப்டம்பர் -2002 விலை ரு.10/-

• உங்கள் வீடு கொள்ளை போகாமல் இருக்க...!

• வாஸ்து... வாஸ்தவமாக...!

• முக்கிய நகரங்களில் சொத்துக்கள் விலை நிலவரம்

**ஹெல்த் டுடே**

அரசால் அங்கீகரிக்கப்பட்டு அனைத்து நூலகங்களுக்கும் செல்லும் மருத்துவ மாத இதழ்

செப்டம்பர் -2002 விலை ரு.10/-

**DENTAL *Special* A to Z**

**பற்களைப்பற்றி A to Z தெரிந்து கொள்ள...**

அரசால் அங்கீகரிக்கப்பட்டு அனைத்து நூலகங்களுக்கும் செல்லும் ஒரே தொழில் வணிக இதழ்

**தொழில் முன்னேற்றம்**

செப்டம்பர் -2002 விலை ரு.10/-

• மருந்து விற்பனையகம் அமைக்க சில யோசனைகள்

• தினமும் ரு.1000/- சம்பாதிக்க அருமையான தொழில் வாய்ப்பு

• எண்ணற்ற தொழில் வாய்ப்புகள்

விவேக் பப்ளிகேஷன்ஸ், 6/84, மல்லன் பொன்னப்பன் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5.

போன் : 8487533, 8483163, 8480610. தொலை நகல் : 91-44-8480610



**கலைப்பொருள் சிறப்பிதழ்**



# அடக்கம் செய்யலாமா அருங்காட்சியகத்தை?

> பணம் பிடுங்கும் ஊழியர்கள், ஆங்காங்கே பான்பராக் கறைகள், காதலர்களின் களியாட்டம்

வெளிநாடுகளிலிருந்து வரும் சுற்றுலாப் பயணிகளுக்கு இந்தியாவில் எல்லா வசதிகளையும் செய்து தரும் தனியார் சுற்றுலா நிறுவன அதிகாரி ஒருவர் சமீபத்தில் கூறிய தகவல் அதிர்ச்சியளிப்பதாக இருந்தது.

"ஒவ்வோர் ஆண்டும் நாங்கள் ஒரு பட்ஜெட் தயார் செய்வோம். அதன்படி ஒரு வெளிநாட்டுப் பயணி இந்தியாவில் எவ்வளவு செலவழிக்க வேண்டி வரும் என்பதைக் கணக்குப் போடுவோம். இதில் ஹோட்டல் கட்டணம், சுற்றுலாத் தலங்களில் நுழைவுக் கட்டணம் ஆகியவற்றையும் கணக்கிடுவோம். சமீப காலங்களில் அப்படிக் கணக்கிடும்போது, சென்னை அருங்காட்சியகத்தின் நுழைவுக் கட்டணத்தை நாங்கள் பட்ஜெட்டில் போடுவதில்லை. காரணம் வெளிநாட்டுப் பயணிகள் சென்னை மியூஸியத்தைப் பார்க்க விரும்பவில்லை. அவர்களுக்கு நுழைவுக் கட்டணம் 250 ரூபாய். ஆனால் 50 சதவீத பகுதிகள் எப்போதும் மூடப்பட்டிருக்கின்றன. திறந்திருக்கும் சில பகுதிகளும் போதிய வெளிச்சமும் காற்றோட்டமுமில்லாமல் இருக்கின்றன. இதன் காரணமாக வெளிநாட்டுச் சுற்றுலாப் பயணிகள் வியர்த்து, விறுவிறுத்து, எதையும் சரிவரப் பார்க்காமல் வந்து விடுகிறார்கள். எனவே எங்கள் பயணத் திட்டத்தில் மியூஸியம் இல்லை. அரிய பஞ்சலோக கலைப் பொருட்களைப் பார்க்க வேண்டுமென்று விரும்பும் பயணிகளை தஞ்சாவூர் மற்றும்,

மதுரை கோயில்களில் உள்ள அருங்காட்சியகத்துக்கு அழைத்துச் சென்று விடுகிறோம்" என்று சொன்னார் அந்த அதிகாரி.

வெளிநாட்டிலிருந்து வரும் வி.வி.ஐ.பி. பயணிகளுக்குச் சுற்றுலா கைடாகச் செல்லும் நண்பர் ஒருவர் "இலவச அனுமதி இருந்த போது நன்றாக நிர்வகிக்கப்பட்டு வந்த அருங்காட்சியகம் இப்போது நாறிப் போய் கிடக்கிறது. பணம் பிடுங்கும் ஊழியர்கள்,




ஆங்காங்கே பான்பராக் கறைகள், காதலர்களின் களியாட்டம் என்று முற்றிலும் பயணிகளுக்கு ஒவ்வாத சூழல்தான் அங்கு இருக்கிறது. சின்சியராக ஆராய்ச்சிப் பணிகளுக்காக, விசிட் செய்பவர்களும் அங்குள்ள நிலைமையைப் பார்த்து வெறுத்துப் போய் விடுகிறார்கள்" என்றார்.

**கா**லம், காலமாக, சென்னையின் வரலாற்றுச் சின்னங்களில் ஒன்றாக இருந்த மியூஸியத்துக்கு, இந்தக் கதியா என்று அசைபோட்டவாறு, பாந்தியன் சாலையில் நுழைந்தோம். ஆங்கிலேயப் பிரபுக்களும், சீமான்களும், பொழுது போக்குவதற்காக பாந்தியன் சாலைக்குத்தான் வருவார்களாம். இப்போது மியூஸியம், கன்னிமரா நூலகம் உள்ள சில கட்டடங்கள் விருந்து நடத்துவதற்காகவும், கேளிக்கைக்காகவும் தான் 18ம் நூற்றாண்டில் கட்டப்பட்டன. 'பாந்தியன் என்பது லண்டனில் இருக்கும் பொழுது போக்குவதற்காக கட்டப்பட்ட ஒரு கட்டடத்தின் பெயர். அந்தப் பெயரையே இந்தச் சாலைக்கும் வைத்துவிட்டார்கள். கவர்னர் கன்னிமரா, முயற்சியின் விளைவாக நூலகம் துவங்கப்பட்ட அதே சமயத்தில் (1851) புவியியல் தொடர்பான சில காட்சிப் பொருட்களை வைத்து சென்னை மியூஸியத்துக்கும் பிள்ளையார் சுழி போடப்பட்டது. இன்று ஆறு பகுதிகளாகப் பிரிந்து இருக்கும் மியூஸியத்தின் பிரதான கூடத்தில் நுழைவோமா? (பத்து ரூபாய் டிக்கெட் வாங்கிய பிறகுதான்)

பல்லவ சோழ, விஜயநகர் சாம்ராஜ்யங்களின் கலை, நாகரிகம், பொது மொழி ஆகியவற்றைப் பிரதிபலிக்கும் கற்சிலைகள், சான்றுகள் இருக்கும்போது, செங்கல்பட்டு பக்கம் அகழ்வாராய்ச்சி நடந்தபோது கிடைத்த சண்முகர் (முருகர்) கற்சிலையை நுழைவிலேயே வைத்திருக்கிறார்கள். முண்டமாக உள்ள சிலை தான் நம்மை உறுத்துகிறது. தமிழ் மொழியின் மூலமான பிராம்மி மொழி பற்றிய கல்வெட்டும் உண்டு. "இந்திய எழுத்துக்களில் பழைமையானதும் சிந்து நதிக்கரையில் மொகஞ்சோதாரோ என்னுமிடத்தில் கிடைக்கப் பெற்ற முத்திரைகளும் உள்ளன. இதன் பின்னர் 5000 ஆண்டுகளுக்குப் பிறகு, கரோஷ்டி, பிராம்மி ஆகிய எழுத்து வடிவங்கள் உருவாயின. கரோஷ்டி என்றால் கழுதை மூக்கு என்று பொருள். இந்தியாவின் வடமேற்குப் பகுதியில் புழக்கத்தில் இருந்த கரோஷ்டி எழுத்து வடிவம் பின்னர் அழிந்து போனது. பிராம்மி எழுத்திலிருந்து பரிணாம வளர்ச்சி பெற்றவைதான் தெலுங்கு, தமிழ் மற்றும் கன்னடம்" இந்த அரிய தகவலைக் கொண்ட பழங்கால கற்பலகையில் சென்னையைச் சேர்ந்த சரவணன் தன் பெயரையும் பொறித்திருக்கிறார்.

பிராதான கட்டிடத்தில் முக்கியமான பகுதி 'அமராவதி காலரி'. ஆனால் புதுப்பிப்பதற்காக இப்போது மூடி வைத்திருக்கிறார்கள். பயணிகளுக்கு இது ஒரு பெருத்த ஏமாற்றம். இந்தப் பகுதி மூடப்பட்டிருப்பதால், விலங்கியல், பறவைகள் காலரி, தாவரவியல் பகுதிகளைப் பார்க்க, கட்டிடத்தை விட்டு வெளியே வந்து மறுபடி வேறுவழியாக உள்ளே போக வேண்டும். அந்த வழி தெரியாமல் பயணிகள் அவதிப்படுவது சகஜம். பலர் தடுமாறி மியூஸியம் அவ்வளவுதான் என்று போய் விடவும் கூடும். 1874ம் ஆண்டு மங்களூர் பகுதியில் கடலில் ஒதுங்கிய 60 அடி திமிங்கிலத்தின் எலும்புக் கூட்டை அந்தரத்தில் நன்றாக முட்டுக் கொடுத்து தொங்க (பல வருடங்களாக) விட்டிருக்கிறார்கள். அது கண்டிப்பாக கீழே விழுந்து விடாது என்ற தைரியத்தில் ஊழியர் ஒருவர் அதன் கீழே, மின் விசிறி காற்றுடன் கண்ணயர்ந்து போயிருக்கிறார். ஊர்வன, பறப்பன, நடப்பன என்று எல்லா ஜீவராசிகளையும் கண்ணாடிக் குடுவையில் போட்டு ஆண்டுக் கணக்கில் அடைத்து வைத்திருக்கிறார்கள். முதன் முதலாகத் துவங்கிய புவியியல் பிரிவு மூடப்பட்டிருக்கிறது. அந்தப் பகுதியில் உயிரோடு புறாக்களும், ஆந்தைகளும் ஓடியாடி விளையாடிக் கொண்டிருக்கின்றன. ("உள்ளே ஒரே நாற்றம்" என்றார் ஓர் ஊழியர்). அயல்நாட்டு மிருகங்கள் பிரிவும் மூடப்பட்டுள்ளது. பாலூட்டி கூடம் அதிர்ஷ்டமிருந்தால் பார்க்க முடியும் "நாங்க 60 ஊழியர்கள் இருந்தோம். இப்போது 40 பேர் தான் இருக்கிறோம். எல்லாப் பிரிவுகளையும் பார்த்துக் கொள்ள ஆள் பஞ்சம்" என்கிறார் ஊழியர் ஒருவர். பாலூட்டி கூடம் திறந்திருந்தால் ஜோடிகளுக்குக் கொண்டாட்டம்தான். ஊழியருக்கு 'வெட்டி விட்டு' ஜாலியாக பொழுதைப் போக்கலாம். இந்தப் பகுதியில் உள்ள தீர்த்தங்கரர் மற்றும் சப்த மாதா கற்சிலைகளைப் பார்க்கும்போது அதன் வழ, வழப்பான பகுதிகள் நமது மக்களின் ரசனையை நன்றாகவே சொல்லுகின்றன.

ஆதி மனிதர்கள் பயன்படுத்திய பாத்திரங்கள், உடைகள், ஆயுதங்கள், போர்க் கருவிகள், மர வேலைப்பாடுகள், பஞ்சமுக வாத்யம், முதுமக்கள் தாழி, பொம்மலாட்டம், கலைஞர் ஒழித்த கைரிக்ஷா, கொடுங்கோலன் நீலன் சிலை ஆகியவை முகப்புக் கட்டிடத்தில் உள்ளன. ஆனால் மிகவும் சுவாரஸ்யமான இந்தக் காட்சிப் பொருட்கள் எதையும் நாம் இப்போது பார்க்க முடியாது. "மூன்று வருடங்களாக கட்டடத்தைப் பழுது பார்த்து வருகிறார்கள். மேலும், கடற்கரை கண்ணகி சிலையை இந்த கட்டடத்தில்தான் பாதுகாப்பாக வைத்திருக்கிறார்கள். எனவே பழுது பார்க்கும் பணியும் நிறுத்தப்பட்டு கட்டடம் பூட்டு போடப்பட்டுவிட்டது" என்றார்கள் ஊழியர்கள். மேலும் எதாவது கேட்டால் "ஆளை விடுங்கள்" என்று ஓடுகிறார்கள்.

## நூலோவியம்!

எம்பிராய்டரி என்றாலே, பெரும்பாலும் பூ வேலைப்பாடுகளாகத்தான் இருக்கும். ஆனால் திருச்சி எஸ்.சரோஜா, அச்சு அசலாக மனித (தெய்வ) முகங்களை, எம்ப்ராய்டரியில் இழைத்துள்ளார்.



ஏசுநாதர், தெரஸா, டயானா, பெரியார், கலைஞர் என பல உருவங்களை வண்ண நூல்களில் மிக தத்ரூபமாக உருவாக்கியிருப்பது இவரது தனிச் சிறப்பு.

''என் கணவர் இறந்து முப்பத்தைந்து வருஷமாச்சு. என் தங்கைதான் எனக்கு ஒரே ஆதரவு.. இந்த எம்பிராய்டரி கலைதான் சோகப்பட்ட மனசுக்கு ஓர் ஆறுதலாக இருக்கிறது. ஓவியத்துக்கான துணி, எம்பிராய்டரி நூல், வாங்க மட்டுமே ஒவ்வொரு படத்துக்கும் குறைந்தது ஐந்நூறு ரூபாய் செலவாகிறது. நான் உருவாக்கிய நூல் ஓவியங்களை எல்லாம் வைச்சு, ஒரு கண்காட்சிகூட

வெளிநாட்டுப் பயணிகள் விரும்பிப் பார்க்கும் பகுதி படிமப் பகுதி. இங்குதான் நடராஜரின் வித, விதமான போஸ்களுடன் வெண்கல பஞ்சலோக சிலைகள் உள்ளன. ஆனால் மாடிப்பகுதி மூடப்பட்டிருக்கிறது. அந்த மேல் பகுதியில்தான், நாகப்பட்டினத்தில் அகழ்வாராய்ச்சியில் (பொன்னியின் செல்வனில் வரும் சூடாமணி விஹாரம் நினைவிருக்கிறதா) கண்டெடுக்கப்பட்ட தங்க போதி சத்துவர் (புத்தர்) சிலை இருந்தது. எம்.ஜி.ஆர். ஆட்சியில் காணாமல் போனதை இன்னமும் தேடுகிறார்கள். போன வருடம் ஜெ. அரசு ஆட்சிப் பொறுப்

பேற்கும் சமயத்தில் அமராவதி காலரி கல் புத்தர் காணாமல் போய் விட்டார். அதன் பின் உடைந்த நிலையில் மியூசியத்துக்கு வெளியே கண்டு பிடிக்கப்பட்டார். நாணயவியல் பகுதியில் 1215ம் ஆண்டு இங்கிலாந்து அரசர் ஜான் மக்களுக்குக் கொடுத்த அரசியல் உரிமைகளைச் சட்டம் போட்டு மாட்டியிருக்கிறார்கள். படிமக் கூடத்தைப் பார்த்த பின் (?) எந்தப் பக்கம்போவது என்று 'பே' என பலர் விழித்துக் கொண்டிருப்பதைப் பார்க்கலாம். சாலையை ஒட்டியுள்ள

நடத்தினேன். ''அடடா! எவ்வளவு அழகு?''னு பாராட்டறாங்களே தவிர, யாரும் விலை கொடுத்து வாங்க முன் வருவதில்லை" என்கிறார் சரோஜா.

— திருநா






சிறுவர் மியூஸியம் தேசிய கலைக் கூடம், வளர்கலை கூடம் ஆகியவையும் மியூஸியத்துடன் இணைந்தவைதான். ஆனால் அவற்றைப் பார்க்க சரியான வழிகாட்டி கள் கிடையாது. இதில் வளர்கலைக் கூடம் மூடப்பட்டிருக்கிறது. சிறுவர்கள் மியூஸியத்தில் போக்குவரத்து - புதுமை வளர்ச்சி பிரிவு மூடப்பட்டிருக்கிறது. தஞ்சாவூர், ராஜபுதன, மொகலாய ஓவியங்கள் வைக்கப்பட்டிருக்கும் தேசிய கலைக்கூடம் என்றைக்கு விழுமோ என்று பயமுறுத்திக் கொண்டிருக்கிறது. உச்சத்தில் இருக்கும் தூண்களைக் கம்பியால் கட்டி பாதுகாத்து வைத்திருக்கிறார்கள். மழை பெய்தால் உள்ளே இருக்கும் விக்டோரியா சாரட் வண்டி நனைந்து விடுகிறது. ராஜா ரவிவர்மா ஓவியங்கள் வைக்கப்பட்டிருக்கும் பகுதி, ஊழியர் தயவிருந்தால் ஒளி வசதி செய்யப்பட்டிருக்கும். இப்படி ஆறு பகுதிகளையும் சுற்றிப் பார்த்து மீண்டும் முகப்புக் கட்டத்துக்கு வந்தால் அங்கே டிக்கெட் கவுண்டரில் வெளிநாட்டுச் சுற்றுலாப் பயணிகள் இருவர். "250 ரூபாய் வாங்கிவிட்டு பாதி இடங்களை மூடி வைத்திருக்கிறீர்களே. இது சரியா?" என்று புழுங்கிக் கொண்டிருந்தார்கள். "போய் ஆபீசில் சொல்லுங்கள்" என்றார்கள் ஊழியர்கள்.

"பயணிகளுக்கு இங்கு குடி தண்ணீர் வசதிகூட கிடையாது" என்று ஊழியர்களே புகார் சொல்கிறார்கள். சாதாரண சமயங்களில் தினசரி 500 சுற்றுலாப் பயணிகள் வருகிறார்களாம். சென்னையில் மாநாடு, ஊர்வலம் போன்ற சமயங்களிலும், பண்டிகை, விடுமுறைகள், கோடை விடுமுறையின் போதும் நாள் ஒன்றுக்கு 5000 பேர் கூட வருவதுண்டாம். ''கடந்த நாற்பது ஆண்டுகளாகவே பராமரிப்பு சரியில்லை. அரசு நிதி ஒதுக்குவது கிடையாது. மேலும் பல அதிகாரிகள் ஒரு தண்டனை போஸ்டிங்காக இதன் பொறுப்புக்கு வருவதால் ஆர்வம் காட்டுவது கிடையாது" என்கிறார்கள் ஊழியர்கள். பல கற்சிலைகள் மியூஸியத்துக்கு வெளியேயும் வானமே கூரையாக இருக்கின்றன. அரசு இப்போது 90 லட்ச ரூபாய் ஒதுக்கியிருக்கிறதாம். வரும் ஜனவரியில் அப்துல் கலாம் இங்கு வருகிறார். "பழுது பார்க்கும் பணிகள் நடக்கட்டும். ஆனால் ஒவ்வொரு பகுதியாகச் செய்தால் பயணிகளுக்குப் பார்ப்பதற்கு நிறையக் காட்சிகள் இருக்கும். அதை விட்டுவிட்டு ஒரேயடியாக பாதிக்கு மேற்பட்ட பகுதிகளில் பழுது பார்க்கிறோம் என்று மூடினால் வருபவர்கள் வயிறெரிந்து திட்டி விட்டுத்தான் போவார்கள்" என்று சொன்னார் ஊழியர்.

மியூஸியத்தை 'செத்த காலேஜ்' என்றும் சொல்வார்கள். பல பகுதிகளை மூடி வைத்துள்ள நிலையில் அது 'செத்த காலேஜ்' ஆகத்தான் இருக்கிறது. அதைத் தற்காலிகமாக அடக்கம் செய்துவிட்டு எல்லாப் பகுதிகளையும் பழுது பார்த்தபின் திறந்தால் பயனுள்ளதாக இருக்கும்.

— ஸ்ரீநிவாசன்

படங்கள் : ராஜன்

# GURUBARAN
**Tanjore Art Gallery**



*Specialist in :*

- *Tanjore Painting*
- *First Quality Jaipur Colour Stones*
- *White Stones*
- *Gold Foil & Materials*

**No.7, R.K. Mutt Road, (Basement)**
**Mylapore, Chennai - 4. Ph. : 4941017**





# "கல்கி ஷாப்பிங்"

பக்கங்களில்
விளம்பரம் செய்ய
ரூ. 1250/- மட்டுமே.
செய்து பயனடைவீர்!

47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடு தாங்கல், சென்னை - 97.
போன்: 2345622, 2345623



# தேவேந்திரா சாரீஸ்

**தயாரிப்பு நிறுத்தப்படுகிறது.**

எங்களுக்குத் தேவையான உயர்ந்த ரக பட்டும் நூலும், சாயங்களும் கிடைக்கவில்லை. ஆகையால் தயாரிப்பு நிறுத்தப்படுகிறது. ஆகையால்,

## "மகத்தான தள்ளுபடி விற்பனை"

*ஸ்டாக் உள்ளவரை 10% தள்ளுபடி கிடைக்கும் இடங்கள்.*

**H.O. :** 21/27, ஏலா கந்தப்பன் தெரு, (Walltax Road),
பார்க் டவுன், சென்னை - 600 003. போன் : 5350213
(ஞாயிற்றுக் கிழமைகளில் மாலை 4.00 மணி வரை)

**B.O. :** கடை எண்.7, 3, பிரகாசம் ரோடு, ராம்ஸ் பஜார், பனகல் பார்க்,
தி.நகர், சென்னை - 600 017. போன் : 8157367

இதுவரை எங்களுக்கு ஆதரவு கொடுத்து வந்த வாடிக்கையாளர்களுக்கும் எங்களுடைய விற்பனை ஏஜெண்ட்டுகளுக்கும் எங்களோடு இதுவரை ஒத்துழைத்து எங்கள் தறியை நல்லமுறையில் நெசவு செய்து கொடுத்த தறிகாரர்களுக்கும் எங்களது மனமார்ந்த நன்றியையும் அன்பான வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறோம். நமஸ்காரம்.

கே.ஆர். தேவேந்திரன், Proprietor



# சிவகாமியின் சபதம்

ஏழாம் அத்தியாயம்

## மகேந்திர ஜாலங்கள்

காஞ்சி மாநகரில், பிரதான மந்திராலோசனை மண்டபத்தில் சபை கூடியிருந்தது. மந்திரி மண்டலத்தாரும் அமைச்சர் குழுவினரும் பிரசன்னமாகியிருந்தார்கள். சக்கரவர்த்தியும், குமார சக்கரவர்த்தியும் சிம்மாசனங்களில் நடுநாயகமாக வீற்றிருக்க, அருகே ஒரு தனிப்பீடத்தில் சேனாதிபதி கலிப்பகையும் அமர்ந்திருந்தார்.

தளபதி பரஞ்சோதியை மட்டும் அவ்விடத்திலே காணவில்லை. கோட்டைப் பாதுகாப்பு முயற்சியில் ஈடுபட்டிருந்தபடியால் அவரால் மந்திராலோசனைக்கு வர முடியவில்லை போலும்.

சபையில் கூடியிருந்தவர்களின் முகத்திலெல்லாம் இலேசாகக் கவலைக் குறி தோன்றியது. எல்லோரையும் காட்டிலும் அதிகமான கவலை, சபையில் எழுந்து நின்ற பண்டக சாலை அமைச்சர் பராந்தக உடையார் முகத்தில் காணப்பட்டது.

"உடையாரே! முற்றுகை ஆரம்பிக்கும் சமயத்தில் நீர் உறுதியாகச் சொன்னீரல்லவா? குறைந்தது பதினைந்து மாதத்துக்கு வேண்டிய தானியங்களை நம் பண்டகசாலைகளில் பத்திரப்படுத்தியிருப்பதாக! - முற்றுகை ஆரம்பித்து ஏழு மாதந்தானே ஆகிறது? இன்னும் எட்டு மாதத்துக்கு இருக்க வேண்டுமே? மூன்று மாதத்துக்குத்தான் தானியம் இருக்கும் என்று சொல்கிறீரே? அது எப்படி?'' என்று சக்கரவர்த்தி கேட்டார். மகேந்திர பல்லவரின் குரல் மிகக் கடுமை பெற்றிருந்தது. அவருடைய முகத்தில் சுருக்கங்கள் அதிகமாயிருந்தன.

**அமரர் கல்கி**

பராந்தக உடையார் குரலில் கலக்கத்துடனும், சொல்லில் தடுமாற்றத்துடனும் கூறினார்: "பல்லவேந்திரா! நான் எதிர்பார்த்தபடி சில காரியங்கள் நடக்கவில்லை! எதிர்பாராத காரியங்கள் சில நடந்து விட்டன. நகரை விட்டு வெளியேறிய ஜனங்கள் பலர், புள்ளலூர்ச் சண்டைக்குப் பிறகு நகருக்குத் திரும்பி வந்துவிட்டார்கள். தொண்டை மண்டலத்திலுள்ள சிற்பிகள் அனைவரையும் தலைநகருக்குள்ளே கொண்டு வந்து சேர்க்க வேண்டுமென்று தங்களுடைய ஆக்ஞை பிறந்தது. இதனால் ஐயாயிரம் பேர் அதிகமானார்கள். நமது கடிகைகள் - கல்லூரிகள் எல்லாவற்றையும் மூடி ஆசிரியர்களையும் மாணாக்கர்களையும் வெளியே அனுப்பி விடலாமென்று முதலில் யோசனை செய்திருந்தோம். கடைசி நேரத்தில் தாங்கள் அவ்விதம் செய்ய வேண்டாம் என்று கட்டளையிட்டு விட்டீர்கள்."

"இவ்வளவுதானா? இதனாலேயே ஐந்து மாதங்களுக்குரிய உணவு குறைந்து போய்விட்டதா?" என்று சக்கரவர்த்தி கேட்டார்.

"அடியேனும் ஒரு பெரிய தவறு செய்து விட்டேன். நகரில் உள்ள புருஷர்கள், ஸ்திரீகள், குழந்தைகளை மட்டும் கணக்கெடுத்துக் கொண்டு, பதினைந்து மாதத்துக்கு உணவு இருப்பதாகச் சொன்னேன். கறவைப் பசுக்கள், கோயில் மாடுகள், குதிரைகள் இவற்றைக் கணக்கில் சேர்க்கவில்லை. மாடுகளுக்கும் குதிரைகளுக்கும் வைக்கோலும் புல்லும் கிடைக்காதபடியால் தானியத்தையே தீனியாகக் கொடுக்க வேண்டியதாகி விட்டது" என்றார் அமைச்சர்.

"நல்லது, பராந்தகரே! தொண்டைமான் இளந்திரையன் வம்சத்தில் பிறந்த காஞ்சி மகேந்திர பல்லவன், வாதாபிப் புலிகேசியிடம் சரணாகதியடைய நேர்ந்தால் அந்தப் பழியைக் கோவில் மாடுகள் மீதும், தேர்க் குதிரைகள் மேலும் போட்டு விடலாமல்லவா?" என்று கூறிவிட்டுச் சக்கரவர்த்தி சிரித்தார். அந்தச் சிரிப்பில் கோபம் அதிகமாய்த் தொனித்ததா, ஏளனம் அதிகமாய்த் தொனித்ததா என்று சொல்வதற்கு முடியாமல் இருந்தது.

அப்போது நரசிம்மவர்மர் துள்ளி எழுந்து, "அப்பா! என்ன வார்த்தை சொன்னீர்கள்? வாதாபிப் புலிகேசியிடம் மகேந்திர பல்லவர் சரணாகதி யடைவதா? ஒரு இலட்சம் பல்லவ வீரர்கள் ஏழு மாதமாக மூன்று வேளை உண்டும், உறங்கியும் இந்தக் கோட்டைக்குள்ளே எதற்காக அடைபட்டுக் கிடக்கிறார்கள்? தந்தையே! நமது பண்டகசாலை அமைச்சரின் கணக்குப் பிழையும் ஒரு விதத்தில் நல்லதாகவே போயிற்று. இப்போதாவது கட்டளையிடுங்கள். கோட்டைக்குள்ளே ஏழு மாதம் ஒளிந்து கொண்டிருந்தது போதும். உலகமெல்லாம் நம்மைப் பார்த்துச் சிரித்தது போதும். அப்பா! இப்போதாவது வாதாபிப் படைகளைத் தாக்கி நிர்மூலம் செய்யும்படி அடியேனுக்குக் கட்டளையிடுங்கள்!" என்று ஆத்திரமும் அழுகையுமாய்க் கூறிவிட்டு, மகேந்திர பல்லவரின் முன்னால் தரையில் விழுந்து அவருடைய பாதங்களைப் பற்றிக் கொண்டார்.

மகேந்திர பல்லவர் தமது கண்களில் துளித்த நீர்த்துளியை மறைப்பதற்காக முகத்தைப் பின்புறமாகத் திருப்பினார்.

ஒரு நொடி நேரத்தில் சக்கரவர்த்தி மீண்டும் சபையின் பக்கம் திரும்பிபோது, அவர் முகத்தில் பழையபடி கடுமையும், ஏளனப் புன்னகையும் குடிகொண்டிருந்தன. தம் பாதங்களைப் பற்றிக் கொண்டு தரையில் கிடந்த மாமல்லரை அவர் தூக்கி நிறுத்தி, "மாமல்லா! உன்னை வெகு காலம் நான் அந்தப்புரத்திலேயே விட்டு வைத்திருந்தது பிசகாய்ப் போயிற்று. மூன்று தாய்மார்களுக்கு மத்தியில் நீ ஒரே மகனாக அகப்பட்டுக் கொண்டிருந்தாயல்லவா? அதனாலேதான் பெண்

களுக்குரிய குணங்களான ஆத்திரமும் படபடப்பும் உன்னிடம் அதிகமாய்க் காணப்படுகின்றன. உலகில் வீரச் செயல்கள் புரிய விரும்பும் ஆண் மகனிடம் இத்தகைய படபடப்பும் ஆத்திரமும் இருக்கக்கூடாது. நரசிம்மா! மல் யுத்தத்தில் மகா நிபுணனான உனக்கு இதை நான் சொல்ல வேண்டுமா?'' என்றார்.

மாமல்லருடைய உதடுகள் துடித்தன. தந்தையின் வார்த்தைகளுக்கு மறுமொழி சொல்ல அவருடைய உள்ளத்திலிருந்து வார்த்தைகள் பொங்கி வந்தன. ஆனால், அதிக ஆத்திரத்தினாலேயே அவரால் பேச முடியாமற் போய்விட்டது.

மகனுடைய நிலையைக் கண்ட மகேந்திர பல்லவர், "குழந்தாய்! நீண்ட காலமாகப் பொறுத்து வந்திருக்கிறாய். இன்னும் சில நாள் பொறு. நீயும் நமது பல்லவ வீரர்களும் உங்களுடைய வீர தீரத்தை எல்லாம் காட்டுவதற்குரிய சந்தர்ப்பம் சீக்கிரத்தில் வரப் போகிறது. வாதாபிப்படை, இன்னும் சில தினங்களுக்குள் கோட்டையைத் தாக்குமென்று எதிர்பார்க்கிறேன். அந்தத் தாக்குதல் வெகு கடுமையாயிருக்கும் என்றும் எண்ணுகிறேன். அதைச் சமாளிப்பதற்கு நாமும் நமது பூரண பலத்தையும் பிரயோகிக்க வேண்டியதாயிருக்கும். பல்லவர் வீரத்துக்கு மகத்தான சோதனை வரப் போகிறது. அதற்கு நாம் எல்லோரும் ஆயத்தமாக வேண்டும்!'' என்றார்.

இவ்விதம் மாமல்லனைப் பார்த்துக் கூறிய பிறகு, பண்டகசாலை அமைச்சரைப் பார்த்து மகேந்திர பல்லவர், ''பராந்தகரே! இன்று முதல் காஞ்சி நகரில் உள்ளவர் அனைவரும், மாடுகளும் குதிரைகளும் உள்பட சமண நெறியை மேற்கொள்வோமாக!'' என்றதும், சபையில் இருந்த அனைவருக்குமே தூக்கி வாரிப்போட்டது.

"ஒரே ஒரு காரியத்தில் மட்டும்தான் சொல்கிறேன்: அதாவது, இரவில் உணவு உட்கொள்வதில்லையென்ற சமண முனிவர்களின் விரதத்தை எல்லாரும் கடைப்பிடிக்க வேண்டும். இதுவரை நீங்கள் கொடுத்து வந்த உணவுப் படியில் மூன்றில் ஒரு பங்கைக் குறைத்து விடுங்கள். அரண்மனைக்கும் ஆலயங்களுக்கும் உள்படச் சொல்லுகிறேன். இனிமேல் காஞ்சி நகரில் உள்ளவர்களுக்கெல்லாம் தினம் இரண்டுவேளைதான் உணவு. இதன்மூலம் கைவசமுள்ள தானியத்தை நாலரை மாதம் நீடிக்குமாறு செய்யலாமல்லவா? மந்திரிமார்களே! நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' என்று சக்கரவர்த்தி கேட்கவும், முதன்மந்திரி சாரங்க தேவர், ''பிரபு கோட்டை முற்றுகை நாலரை மாதத்துக்கு மேல் நீடிக்காதென்று தாங்கள் அபிப்பிராயப்படுவதாகத் தெரிகிறது'' என்றார்.

''இல்லை! நாலரை மாதங்கூட நீடிக்குமென்று நான் நினைக்கவில்லை. முன் ஜாக்கிரதையாக உணவை மூன்றில் ஒரு பங்கு குறைக்கலாமென்று சொன்னேன். புலிகேசி இன்னும் ஒரு வாரத்தில் கோட்டையைத் தாக்கத் தொடங்குவான் என்று எதிர்பார்க்கிறேன்...''

"பிரபு! அப்படித் தாங்கள் எதிர்பார்ப்பதற்குத் தக்க காரணங்கள் இருக்கத்தான் வேண்டும்'' என்றார் சாரங்க தேவர்.

''ஆம்; அவற்றை உங்களுக்கும் சொல்ல விரும்புகிறேன்; சபையோர்களே! உணவு நெருக்கடியைப் பொறுத்த வரையில் நம்மைக் காட்டிலும் புலிகேசியின் நிலைமை ஆபத்தானது. வாதாபிப் படையினர் மூன்று மாத காலமாக அரை வயிறு உணவு உண்டுதான் ஜீவித்து வருகிறார்கள். புலிகேசி வாதாபியிலிருந்து புறப்பட்ட போது ஐந்து இலட்சம் வீரர்களுடனும், பதினையாயிரம் யானைகளுடனும் புறப்பட்டான். இப்போது வாதாபிப் படையில் மூன்றரை இலட்சம் வீரர்கள்தான் இருக்கிறார்கள். பதினாயிரம் யானைகள் மட்டுமே இருக்கின்றன. சபையோர்களே! இன்னும் ஒரு மாதம் போனால் இவர்களிலும் பாதிப் பேர் பஞ்சத்திலும் நோயிலும் மடிந்து

போவார்கள். யானைகளின் கதி என்ன ஆகுமோ தெரியாது. ஆகையால், புலிகேசி சீக்கிரத்தில் கோட்டையைத் தாக்கித்தான் ஆக வேண்டும். இந்தத் தாக்குதல் வெகு மூர்க்கமாய் இருக்கு மென்பதிலும் சந்தேகமில்லை."

முதல் அமைச்சர் ரணதீர பல்லவ ராயர், "பல்லவேந்திரா! இந்த மாதிரி அதிசயத்தை இவ்வுலகம் எப்போதும் கேள்விப்பட்டதில்லை. முற்றுகைக்கு உள்ளானவர்கள் பசி, பட்டினிக்கு ஆளாகி மடிவதுண்டு. எதிரியிடம் சரண் அடைந்ததும் உண்டு. ஆனால் முற்றுகை இடுகிறவர்கள் பட்டினிக்கு ஆளானார் கள் என்று கதைகளிலே கூடக் கேட்டதில்லை!" என்றார்.

"ஆம் பல்லவராயரே! திரிபுரம் எரித்த பெருமானின் அருளினால் அம்மாதிரி அதிசயம் நடக்கிறது. தொண்டை மண்டலத்துக் கிராமங்களில் உள்ள ஜனங்கள் எதிரிகளுக்கு ஓர் ஆழாக்கு அரிசியோ, ஒரு பிடி கம்போ கொடுக் கவும் மறுத்திருக்கிறார்கள். கையிலுள்ள தானியத்தையெல்லாம் வெகு பத் திரமாகப் புதைத்து வைத்திருக்கிறார்கள். சபையோர்களே! தொண்டை மண் டலத்து ஏரிகள் கூட நமக்குப் பெரிய உதவி செய்திருக்கின்றன. சென்ற தை மாதத்தில் எக் காரணத்தினாலோ நம் நாட்டு ஏரிகள் எல்லாம் திடீர் திடீ ரென்று உடைத்துக் கொண்டு விட்டன. அப்படி ஏற்பட்ட உடைப்பு வெள்ளத் தினால் வாழைத் தோட்டங்கள், தென்னந் தோப்புகள் எல்லாம் பாழா யின. கோடைக் காலத்துச் சாகுபடியும் நடக்கவில்லை. இதனாலெல்லாம் புலிகேசியின் போர் வீரர்களுக்கும் போர் யானைகளுக்கும் உணவு கிடைக்க வில்லை."

சேனாபதி கலிப்பகை எழுந்து, "சபையோர்களே! தொண்டை மண் டலத்து ஏரிகள் நமது கட்சியில் சேர்ந்து உடைத்துக்கொண்டு பகைவர்களைப் பட்டினிக்குள்ளாக்கியது உண்மை தான். ஆனால், அவை தாமாக உடைத்துக் கொள்ளவில்லை; விசித் திர சித்தரான நமது மன்னரின் மகேந்திர ஜால வித்தையிலேதான் ஏரிகள் எல் லாம் உடைத்துக்கொண்டன" என் றார்.

"நான் செய்தது ஒன்றுமில்லை. சத்ருக்னனுடைய தலைமையில் நமது ஒற்றர் படை வெகு நன்றாய் வேலை செய்திருக்கிறது. தொண்டை மண்டலத் திலுள்ள கோட்டத் தலைவர்களும் வெகு திறமையுடன் காரியம் செய்திருக்கிறார் கள். நாட்டில் பஞ்சம் வந்தாலும் வரட்டும் என்று ஏரிகள், அணைக் கட்டுகள் எல்லாவற்றையும் அவர்கள் வெட்டி விட்டிருக்கிறார்கள். சபையோர் களே! தொண்டை மண்டலத்துப் பிரஜைகள் இந்த யுத்தத்தில் செய் திருக்கும் உதவிக்கு நூறு ஜன்மம் எடுத்து நான் அவர்களுக்குத் தொண்டு செய் தாலும் ஈடாகாது" என்று சக்கரவர்த்தி கூறியபோது அவருடைய குரல் உணர்ச்சியினால் தழுதழுத்தது.

சற்று நேரம் சபையில் மௌனம் குடி கொண்டிருந்தது. பிறகு முதல் மந்திரி சாரங்கதேவர், "பல்லவேந்திரா! புலிகேசி, பாண்டி யனைச் சந்திக்கக் கொள்ளிடக் கரைக் குச் சென்றிருப்பதாகத் தெரிகிறதே! பாண்டியன் ஒருவேளை வாதாபிப் படைக்கு வேண்டிய உணவுப் பொருள் கொடுக்கலாம் அல்லவா?" என்றார்.

"ஆம் மந்திரி! பாண்டியனிடம் உணவுப் பொருள் உதவி கோருவதற் காகத்தான் புலிகேசி தெற்கே போயிருக் கிறான். ஆனால் அந்த உதவி அவனுக் குக் கிடைக்கும் என்று நான் கருத வில்லை. தவிரவும், புலிகேசி சீக் கிரத்தில் வாதாபிக்குத் திரும்ப வேண் டிய காரணங்களும் ஏற்பட்டிருக் கின்றன. சபையோர்களே! ஒவ்வொரு நிமிஷமும் தெற்கேயிருந்து முக்கியமான செய்தியை எதிர்பார்த்துக் கொண் டிருக்கிறேன்!" என்று சொல்லிக் கொண்டே மகேந்திர பல்லவர் மண் டபத்தின் வாசற்பக்கம் பார்த்தார். பார்த்த உடனே "ஆ! இதோ செய்தி

## அருள்வாக்கு



சமூகசேவை உண்மையாக இருக்க வேண்டுமாகில் சேவை செய்கிறவர்களுக்கு தர்மத்திலும் சத்தியத்திலும் தளராத பிடிப்பு இருக்க வேண்டும். அவர்களுக்குப் பயம் என்பதே கூடாது. பயமற்ற நிலை வேறு; ஹிம்சை வழியில் நடப்பது வேறு. இரண்டையும் குழப்பிக் கொள்ளக் கூடாது. யுவர்களுக்கெல்லாம் உதாரணமாக இருப்பவர் ஆஞ்சநேய ஸ்வாமி. அவருக்கு இருந்த பலம் மிகப் பெரியது; சுபாவத்திலோ சாந்தராக இருந்தார். கோபித்து எழ வேண்டிய சமயத்தில் மஹாவீரராக எழும்பி ஹதாஹதம் செய்தார். அவருடைய புத்தி பலம் பெரிது. ஆயினும் பக்தியில் தோய்ந்து அடக்கத்துடன் விநயமே ஸ்வரூபமாகச் சேவை செய்து கொண்டிருந்தார். பயமென்பதே அவருக்கு இல்லை. ஆனாலும் தாமாக ஹிம்சை வழியில் அவர் சென்றதில்லை. பிறருடைய ஹிம்சைக்கு எதிர் மருந்தாகவே தாமும் எதிர்த்தார். அவர் சொந்த நலனுக்காகப் பலத்தைப் பிரயோஜனப் படுத்தவில்லை. துர்பலருக்குக் கொடியவரால் கஷ்டம் ஏற்பட்டால், தம் நலனையும் பொருட்படுத்தாமல் பலவீனரை ரட்சிப்பதில் அஞ்சா நெஞ்சராகச் சேவை செய்தார். சிவாஜியும் இப்படிப்பட்ட ஓர் உதாரண புருஷர். ஆஞ்சநேயரின் அவதாரமாக மதிக்கப்படும் ஸமர்த்த ராம தாஸரின் அத்யந்த சிஷ்யராக இருந்ததாலே சிவாஜிக்கு இப்படிப்பட்ட குண சம்பத்து இருந்தது. தேகபலம், அஹிம்ஸை, பயமற்ற நிலை இவற்றோடு சொந்தக் கஷ்டங்களைப் பாராட்டாமல் பிறரைக் காக்கும் பான்மையும் சேர்ந்தால், அது மிகப் பெரிய சீலமாகும். இதற்கே 'க்ஷத்ர தர்மம்' என்று முன்னாளில் பெயர் சொல்லப்பட்டது. 'க்ஷதாத் கில த்ராயதே; இதி க்ஷத்ரம்' - 'பிறரைத் தீமையிலிருந்து காப்பதே க்ஷத்ரம் என்பது இதன் பொருள். 'க்ஷத்திரியர்' என்ற பெயர் இதிலிருந்துதான் பிறந்தது. இப்போது நம் நாட்டு யுவர்கள் இந்த க்ஷத்ர தர்மத்தை மேற்கொள்ள நிரம்ப அவசியமிருக்கிறது. பலிஷ்டர்களைக் கண்டு பயப்படக்கூடாது. பலவீனர்களை பயமுறுத்தவும் கூடாது. பலவீனர்களை வெறும் மிருக பலம் படைத்தவர்கள் கொடுமைப்படுத்தாதபடி சர்வத்தியாகமும் செய்து காப்பாற்ற வேண்டும். மெஜாரிட்டி, மைனாரிடி என்ற பயம் இல்லாமல், தர்மத்துக்கு ஆபத்து வந்தால் உயிரைத் திருணமாக மதித்துப் போராடுகிற நெறி இளைஞர்களுக்கு இருக்க வேண்டும்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி**
**ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சார்ய சுவாமிகள்**

வருகிறது!'' என்றார்.

காவலன் ஒருவன் உள்ளே வந்து, சக்கரவர்த்திக்கு அடி வணங்கி, அவருடைய காதோடு ஏதோ இரகசியமாகச் சொன்னான். சாதாரணமாக எந்தச் சந்தர்ப்பத்திலும், ஆச்சரியமான அறிகுறியைக் காட்டாத மகேந்திர பல்லவரின் முகம், மேற்படி காவலன் கூறியதைக் கேட்டதும் எல்லையற்ற வியப்பைக் காட்டியது.

''சபையோர்களே! நீங்களாவது நானாவது சற்றும் எதிர்பாராத அதிசயமான செய்தி வந்திருக்கிறது. என்னாலேயே நம்ப முடியவில்லை. விசாரித்து உண்மை தெரிந்து கொள்ளப் போகிறேன். இப்போது சபை கலையட்டும். இன்றிரவு மறுபடியும் சபைகூட வேண்டும். அப்போது எல்லாம் விவரமாகச் சொல்கிறேன். மாமல்லா! நீயும் அரண்மனைக்குப் போய் உன் தாய்மாரைப் பார்த்துவிட்டு வா!'' என்று கூறிக் கொண்டே மகேந்திர பல்லவர் எழுந்து சபா மண்டபத்தின் வாசலை அடைந்து, அங்கு ஆயத்தமாய் நின்ற குதிரையின் மீது தாவி ஏறினார்.

(தொடரும்)

**ADMISSION NOTIFICATION**

# NATIONAL INSTITUTE OF LABOUR EDUCATION & MANAGEMENT [NILEM]

Offers 6 months / 1 year Diploma Courses by Correspondence :

- TOTAL QUALITY MANAGEMENT & ISO 9000
- HUMAN RESOURCES DEVELOPMENT
- PERSONNEL MGMT. & INDL. RELATIONS
- MANAGEMENT INFORMATION TECHNOLOGY
- ENVIRONMENT & POLLUTION CONTROL
- QUALITY CONTROL & ISO 9000
- ENVIRONMENTAL MGMT. ISO 14000/14001
- SALES & MARKETING MANAGEMENT
- INTERNATIONAL BUSINESS MANAGEMENT
- HOSPITAL ADMINISTRATION
- ADVERTISING AND PUBLIC RELATIONS
- INTERNATIONAL AIRLINES MANAGEMENT
- BANKING AND INSURANCE MANAGEMENT
- LABOUR LAWS, OFFICE ADMINISTRATION
- BUSINESS ADMINISTRATION
- FINANCIAL MANAGEMENT
- MATERIALS MANAGEMENT
- EXPORT & IMPORT MANAGEMENT
- QUALITY ASSURANCE & QS 9000
- INDUSTRIAL SAFETY
- BUSINESS MANAGEMENT
- PRODUCTION MANAGEMENT
- CONTRACTS MANAGEMENT
- FIRE & SAFETY MANAGEMENT
- HOTEL MANAGEMENT
- MASS COMMUNICATION
- NURSING MANAGEMENT
- QUALITY ASSURANCE & ISO 9000

**Eligibility :** No formal qualification. **Course Fee :** Rs.1,000/- (6 months), Rs.1,500/- (1 year). Course Fee includes Study Materials & Model Question Paper. For Prospectus & Application send Rs. 30/- by DD/MO/IPO in favour of **NATIONAL INSTITUTE OF LABOUR EDUCATION & MANAGEMENT** and apply to the **NILEM** No. 59, Second Street, Parameswari Nagar, Adyar, Chennai - 20. Phone : 7115296, 4911443 E-mail : nilem@rediffmail.com Website : www.nilem.com

# Tulips Beauty Parlour and Training Institute A/c (Regd.)

## (Basic & Advance Course)

**3 MONTHS COURSE**

- 20 Types of makeups
- 60 Types of Facials
- 200 Types of Hair styles
- 30 Types of Hair cuts
- 5 Types of Pedicure and Manicure
- 10 Types of Perming
- Hair colouring
- Streaking
- Ear Piercing
- Warts Removing
- Bindi Design
- Nail Art
- Mehendi (Basic & Advance)
- Weight Reduction, Yoga, Aerobics, Meditation
- Business Motivation
- Electrotherapy (About Beauty Machineries)
- Herbal Preparation
- High Frequency
- Eyebrow Implantation

**TULIPS ARTS AND CRAFTS CENTRE**

* Tailoring * Hand Embroidery * More than 25 Types of Paintings * Frame Work * Event Management & Modelling Agency * Doll Making * Flower Making * Cookery

***Accommodation will be provided for outstation students. For working women and students classes are being conducted on sundays also.***

*Please Contact :* Mrs. **SASIKALA VIJAY SAGAR**

**New No.210 (Old No.168), Peters Road, Royapettah, Chennai - 14. (Opp. to New College) Phone : 8524674**

**Hurry! Cookery Classes Starts on 10.10.2002**

"இதெல்லாம் சாதாரணமா கலெக்ஷன் பண்ணி வீட்டுல வச்சுக்குவாங்க. சிலதை உபயோகிக்கறதும் உண்டு!" என்கிறார் மீனாள் சரவணன்.

மரத்தால் ஆன சின்னச் சின்ன பெட்டிகள், மங்கு எனப்படும் எனாமலால் ஆன கலை நயம் மிகுந்த பெட்டிகள் இவர் கைவண்ணத்தில் உருவாகின்றன.

"சிலதை நகை வைக்கிறதுக்குப் பயன்படுத்துவாங்க.



# பூ பெட்டி!

இந்தப் பெரிய சைஸ் தட்டில், சின்னச் சின்ன அழகு சாதனங்களை வைத்து, டிரஸ்ஸிங் டேபிளில் வைத்துவிடுவார்கள்."

மரத்திலும், மங்கிலும் வெகு எளிமையான பூ வேலைப்பாடுகள் செய்திருக்கிறார் மீனாள்சரவணன். பெட்டியின் மூடிகளிலும் டிசைன் பண்ணியிருக்கிறார். இவை துருத்திக் கொண்டு இருப்பது போல, எம்பாஸிங் வகையைச் சேர்ந்தவை.

ஓடுகளிலும் இத்தகைய பூ வேலைப்பாடுகளைச் செய்திருக்கிறார். ஃபோட்டோ ஃப்ரேமின் இரண்டு ஓரங்களில் கூட இந்தப் பூ வேலை வெகு அழகாக இருக்கிறது.

"சின்னமரப்பெட்டிகளில் எப்படி இந்தப் பூ வேலை செய்கிறீர்கள்?"

"பாடம் செய்யப்பட்ட பூக்களை இழைத்து விடுவோம். அதுதான் செட்டிநாட்டுப் பாணி. கலர் போகாத பூக்களைத்தான் இதற்கு உபயோகிப்போம்!" என்கிறார்.

கண்ணாடி ஜார்களைக் கூட, கலைப் பொருளாக மாற்றும் கைவண்ணம் மீனாள் சரவணனிடம் இருக்கிறது!

**"பாடம் செய்யப்பட்ட பூக்களை இழைத்து விடுவோம். அதுதான் செட்டிநாட்டுப் பாணி."**

**ஹை**டென்ஸிடி பாலியெஸ்டர் ஃபைபர் வைத்துக் கொண்டு ஜன்னல் கண்ணாடியில் டிசைன், ஃபால்ஸ் ஸீலிங் எனப்படும் செயற்கைக் கூரை எல்லாம் செய்து வந்த என்.ஜி. ராதாகிருஷ்ணன், அவற்றைக் கலைப் பொருட்கள் தயாரிக்கப் பயன்படுத்தினால் என்ன என்று ஒரு நாள் யோசித்தார். பயன்?...

கஜலட்சுமி, மூகாம்பிகை என்று கடவுள் சிலைகள் உருவாயின. அச்சு அசல் ரோஸ்வுட் ஃபினிஷில் கஜ லட்சுமியைப் பார்த்தால், மரச் சிற்பி செதுக்கியது போல



# ஹைடெக் ஹேண்டி கிராஃப்ட்ஸ்!

அவ்வளவு நேர்த்தியாக இருக்கிறது. பூ ஜாடியும் சரி, மலர்களும் சரி புதுமையாகவும் இருக்கின்றன.

"இபோக்ஸி ரிஸின் என்கிற பொருள் இருக்கிறதே, அது இரும்புக்கு நிகரானது. அதில்தான் மோல்டு செய்கிறேன். அதனால்தான் சிலை தத்ரூபமாக இருக்கிறது. இதையே ஸ்டோன் ஃபினிஷ் கொடுத்தால், நூறு வருடங்களுக்கு மேல் அப்படியே இருக்கும். உடையவும் உடையாது!"

"ஐ.ஐ.டி.யில் கண்காட்சி வைத்தபோது, பல பேராசிரியர்கள் உற்சாகம் தந்தார்கள். அதுவே என்னை மேலும் மேலும் ஆராய்ச்சி செய்யவும், கைவினைப் பொருட்கள் தயாரிக்கவும் தூண்டின" என்கிறார்.

ஐந்தடிக்கு ஐந்தடி மலை மோல்டு, பார்த்தால் நிஜம் என்று தோற்றமளிக்கிறது. மலைப் பகுதியில் போய்ப் பார்த்து, அதே கிரானைட் வண்ணத்தில் செய்யப்பட்டதாம்.

கொலுவுக்கு வைக்கும் குளம் கூட எச்.பி.ஃபைபரில் தயாரித்து வருகிறார்!

"நூறு வருடங்களுக்கு மேல் அப்படியே இருக்கும். உடையவும் உடையாது!"



**கலைப்பொருள் சிறப்பிதழ்**

**கா**ந்தி மண்டபம் சாலையில் மூன்று வருடங்களாகப் பிரம்பு வகைக் கலைப் பொருட்களும், மோடாக்களும், சோபா செட்களும் விற்று வரும் ராமையா, நெல்லூர்க்காரர். "முப்பது வருசத்துக்கு முன்னால, சின்னக் கொழந்தயா இருந்தப்ப இங்க வந்தேன். அண்ணா முதலமைச்சரா பதவி ஏத்துக்கிட்டு ஊர்கோலம் நடந்துதே, அப்ப வந்தேன்" என்கிறார்.

ஸ்ரீநகர் காந்தர்பால் ஊரிலிருந்து வருகிறதாம்



# மூங்கில் அழகு...

பிரம்பு. (ஓமார் அப்துல்லா போட்டியிடுகிற தொகுதி!) இந்தப் பிரம்பிலிருந்து சிறு கூடைகள், வாத்து, கிளி என்று உருவாக்குகிறார்கள். இவை உடனடியாக விற்றுப் போய்விடுகின்றனவாம். அந்தமானிலிருந்து வரும் பிரம்பில்தான் நாற்காலி, ஊஞ்சல் செய்கிறார்களாம். மூங்கில் ஆந்திராவிலிருந்து வருகிறது. இதில் லாம்ப் ஷேடு, மலர்க் கொத்து வைக்கும் 'வாஸ்' என்று தயாரிக்கிறார் ராமையா. ஸ்ரீநகரிலிருந்து வரும் கலைப் பொருட்கள் 'மைகோ' பிரம்பு வகையைச் சேர்ந்தவை. "அதுவும் ஒருவகைக் கோரைதானுங்க!" என்கிறார்.

இவற்றை வாங்கக் காரில் வருபவர்கள், பேரம் பேசுகிறார்கள். பிறகு கட்டுப்படியாகிற விலைக்கு விற்கிறார் ராமையா. பாதையோர விற்பனையில் இவர் போலீசையும், கார்ப்பரேஷன் ஊழியர்களையும் சமாளித்தாக வேண்டியிருக்கிறது என்கிறார்.

**போலீசையும், கார்ப்பரேஷன் ஊழியர்களையும் சமாளித்தாக வேண்டியிருக்கிறது.**



கலைப்பொருள் சிறப்பிதழ்

**ரா**ஜஸ்தான் மாநிலம் பன்னா மாவட்டத்திலுள்ள சாதடிக் கிராமத்திலிருந்து அம்மா – அப்பா – நாலு தம்பிகளுடன் வந்தவர் க்ராந்தி. முன்பு ஆறு வருடங்களாக ப்ளாஸ்டர் அஃப் பாரிஸில் கலைப் பொருட்கள் செய்து, சென்னையில் செயின்ட் தாமஸ் மவுண்ட் அருகே பட்ரோடு நடை பாதையில், இராணுவக் குடியிருப்பு வளாகத்துக்கு எதிரே ஒரு டெண்ட் போட்டுக் கொண்டு வியாபாரம் செய்து கொண்டு வந்தவர். என்ன தோன்றிற்றோ, பழையபடி கிராமத்துக்கே போய்விட்டார். மறுபடி சென்னைக்கே



# “தர்ம நியாயப்படி ஒரே விலை!”

திரும்பி வந்து அதே பட்ரோடு நடைபாதையில் விற்பனை வாழ்க்கையைத் தொடங்கிவிட்டார் இந்த ஒரு வருடமாக.

பெற்றோரும், மூன்று தம்பிகளும் இப்போது கிராமத்துக்குப் போய்விடவே, ஒரே ஒரு தம்பி பரத்துடன் இருந்து வருகிறார்.

"என் வாடிக்கையாளர்கள் காரில், ஸ்கூட்டரில், சைக்கிளில் கூட வருவார்கள். நடந்து வருபவர்களும் உண்டு. நான் தர்ம நியாயப்படி ஒரே ஒரு விலைதான் சொல்லுவேன். விற்றால் சரி. நேற்று வெறும் ஐம்பது ரூபாய்க்கு மட்டுமே வியாபாரம் ஆச்சு" என்கிறார்.

"அதிகபட்சமாக ஆயிரம் ரூபாய்க்கு விற்றதுண்டா?"

"ஒரு நாள் தள்ளு வண்டியில் பொம்மைகளை வைத்து, கோல்டன் பீச்சுக்குப் போனேன். அன்றைக்கு விற்றது ஆயிரம் ரூபாய்க்கு என்றவர், "சில நாள் முப்பது, நாப்பது ரூபாய்க்குத்தான் விற்கும். நெற்றியில் என்ன எழுதியிருக்கிறதோ, அதுதான் நடக்கும்!" என்றார் தத்துவமாக.

பிளாஸ்டர் அஃப் பாரிஸ் பொடி ராஜபாளையத்திலிருந்து மூட்டையில் வருகிறதாம். அதை வாங்கி ஸ்டாக் செய்து கொண்டு விடுகிறார் க்ராந்தி.

– சாருகேசி

படங்கள் : யோகா

> “நெற்றியில் என்ன எழுதியிருக்கிறதோ, அதுதான் நடக்கும்!”

"வருங்காலத் தமிழகமே! வாலிபப் பெரியாரே" என்று கடந்த காலங்களை எல்லாம் விஞ்சும் வகையில் ஸ்டாலின் படத்துடன் தட்டிகள், வளைவுகள், கவரொட்டிகளால் கவரப் பட்டு கலங்கிப் போயிருந்தது காரைக்குடி. ஆரம்பமே இப் படியா? என்று மக்களை முகம் சுளிக்கவும் வைத்திருந்தது தி.மு.க.வினரின் ஆர்ப்பாட்டமான செலவுகள்.

சிவகங்கை மாவட்ட தி.மு.க. அலுவலகக் கட்டிடமான கலைஞர் பவள விழா மாளிகையை, காரைக்குடியில் மு.க. ஸ்டாலின் திறந்து வைத்தார். தி.மு.க.வின் அடுத்த தலைவர்






# எடுத்தார்...படித்தார்...மடித்தார்!

மு.க. ஸ்டாலின்தான் என்பதைப் போல இருந்தன வரவேற்பு களும், தி.மு.க. நிர்வாகிகளின் பேச்சுகளும்...

பத்தாயிரம் பேரை எட்டியிருந்த அந்தக் கூட்டத்தில் பாது காப்புப் பணிகளிலிருந்த போலீசாரின் எண்ணிக்கை இருபதுக் குள்தான்.

"மதுரைச் சம்பவத்தில் என்னைத் தாக்க ஆசிட்டுடன் இருந்தனர்" என்று கூறியபோது "அப்படியெல்லாம் நடக்க விடுவோமா? தலைவா...!" என்று கூட்டத்தினர் ஆவேசக் கூச்சலிட்டனர்.

மேடையில் பேசிய முன்னாள் அமைச்சர்கள் ரகுபதி, கே.கே. எஸ்.எஸ்.ஆர், தா.கி. ஆகியோர் "கட்டளையிடுங்கள் காத்திருக் கின்றோம்" என்றே பேசினார்கள். அதற்குப் பதிலளித்த ஸ்டாலின் "நான் கட்டளையிட வரவில்லை, நீங்கள் எனக்குக் கட்டளையிடுங்கள். உங்களில் ஒருவனாக நின்று பணியாற்று கிறேன்" என்றார். ஸ்டாலின் பேசி முடியும் வரை கூட்டம் அமைதி காத்ததும், கௌரவமான கட்டுப்பாடும் ஆச்சரியத்தை தந்தன.

நிறைவுரையில் பேசிய ஸ்டாலின், மதுரை கஞ்சித் தொட்டி தடியடி சம்பவத்தைப் பற்றிய 'கல்கி'யின் தலையங்கப் பக்கங்களை அப்படியே மேடைக்கு எடுத்து வந்து வாசித்துக் காட்டினார். ''கல்கி'யின் தலையங்கம் என்பது சாதாரண விஷயமல்ல..' என்று குறிப்பிட்டுவிட்டு அந்தப் பக்கங்களை மடித்து மீண்டும் சட்டைப் பைக்குள் வைத்துக் கொண்டார்.

— கி. சிங்காரவடிவேல்

# சினி பூ

'முந்தானை முடிச்சு' படத்திலே சின்ன வேஷம் செஞ்சிருந்தேன். முருங்கைக்காய் சமாசாரம் பிரபலம் ஆனதே அந்தக் காட்சியிலேதான்! படம் சூப்பர் டூப்பர் ஹிட் ஆனதும் எனக்கு ஒரே நினைப்பு... 'ஆஹா... பத்மினியம்மா... சாவித்ரியம்மா ரேஞ்சுக்கு, கோவை சரளாவும் புகழ் வானில், நட்சத்திரத் திலகமாக...' இப்படி என்னென்னவோ ஆசை. ஆனால் ''கொன்னுப்



# மதிப்புக்குரிய கணிப்பு!

புட்டீங்க(!)''னு பாராட்டு கிடைச்சதே தவிர, பெரிய அளவுலே வாய்ப்புகள் வரலை: எனக்கு ஏமாற்றமாப் போச்சு.

''சரி... நம்ம தலைவிதி அம்புட்டுதான்''னு இருந்தப்போ, திடீர்னு பாக்கியராஜ் சார் ஆபீசுலேருந்து ஓர் அழைப்பு. அதுவும் எத்தனை மணிக்குனு நினைக்கிறீங்க. இரவு ஒன்பது மணி.

எங்கப்பாவைத் துணைக்கு அழைச்சுக்கிட்டுப் போனேன். என்ன, ஏதுன்னு விவரம் எதுவும் சொல்லாமலேயே, மேக்கப் போட ஆரம்பிச்சாங்க.

ஏ ஸியிலே உட்கார்ந்திருந்ததாலே, அப்படியே தூங்கிட்டேன். எழுந்து, பார்த்தா, கண்ணாடில வேறு யாரோ தெரியறாங்க. மூக்குக் கண்ணாடி, நரைச்ச விக்கு, பெரிய பொட்டு வைச்சு எனக்கு அம்மா வேஷம் போட்டிருந்தாங்க... நான் அப்படியே அலறிட்டேன். டைரக்டர் ஸார்கிட்டே போய் நின்னு 'ஓ'ன்னு அழுதுட்டேன்.

''இது அம்மா வேஷம்தான். ஆனால் உனக்கு ரொம்ப நல்ல பேரு கிடைக்கும். ரொம்ப காமெடியான ரோல். நீ செஞ்சா பிரமாதமா இருக்கும்னு எனக்குப் படுது. அப்புறம் உன் இஷ்டம்''னு சொன்னார்.

பாக்யராஜே சொன்ன பிறகு அப்பீல் ஏது? மனசுக்குள்ளே அழுதுக்கிட்டே ஒத்துக்கிட்டேன். ஆனால், 'சின்ன வீடு' படம் வெளியே வந்ததும் தான் பாக்யராஜின் கணிப்பு எவ்வளவு துல்லியமானதுன்னு தெரிஞ்சது. அதற்குப் பிறகு, எனக்கு மளமளவென்று பட ஒப்பந்தங்களா வந்து, நகைச்சுவையில் பேர் எடுத்துவிட்டேன். இன்னிக்கு நான் ஃபீல்டுலே நிலைச்சு நிக்கிறதுக்குக் காரணமே பாக்யராஜின் பக்கா கணிப்புதான்!

சந்திப்பு: சினிமினி



கலைப்பொருள் சிறப்பிதழ்

# கலைப்பொருள் தேடி...

சினிமா கலை இயக்குனர்களின் அனுபவங்கள்...

## மனீஷாவின் சூட்கேஸ்!

• தோட்டா தரணி



ஏ.வி.எம். ஸ்டுடியோ வளாகத்தில்: பசுமையான சூழ்நிலையில், ஒரு குடில் போல இருக்கிறது ஆர்ட் டைரக்டர் தோட்டாதரணியின் அலுவலகம். தரையில் உட்கார்ந்து பேச, வேலை பார்க்க சௌகரியமாய் விரிப்புகள். எந்தப் பக்கம் திரும்பினாலும் ஓவியங்கள், கலைப் பொருட்கள்.



'மௌனராகம்' படத்தில் ஆர்ட் டைரக்டராகப் பணியாற்றியபோது, டெல்லியில் மோகன் - ரேவதி வீட்டில், கலைப் பொருட்கள் இருக்க வேண்டும் என்றார் டைரக்டர் மணிரத்னம். அதற்கு நான் கொண்டப்பள்ளியில் தயாரிக்கப்படும் வண்ண பொம்மைகளைப் பயன்படுத்தினேன். அதேபோல 'சின்னச் சின்ன' பாடலுக்கு ராஜஸ்தானிய மற்றும் குஜராத்தி வேலைப்பாடுகள் செய்யப்பட்ட மாட்டு வண்டி மற்றும் வண்ணத் துணிகளைப் பயன்படுத்தினேன்.

ஒருதடவை 'கிராப்ட் கௌன்சில்' ஆபீஸ் போயிருந்த போது, கோரைப்பாய் தட்டியிலேயே ஒரு சூட்கேஸ் செய்து வைத்திருந்ததைப் பார்த்து மிகவும் ரசித்தேன். சரியான இடத்தில் சினிமாவில் அதைப் பயன்படுத்த வேண்டும் என்று விரும்பினேன். 'பம்பாய்' படத்தில் நெல்லையை விட்டு, மும்பை வந்து இறங்குகிறபோது, மனீஷாவின் சூட்கேஸ், வேறு எதுவுமில்லை; கோரைப்பாய் ஐட்டம்தான்!

தெலுங்கில், டைரக்டர் கே.விஸ்வநாத் படங்களில் நிறைய

சந்தர்ப்பங்களில் கைவினைப் பொருட்களை, பல்வேறு காட்சிகளிலும் இடம் பெறச் செய் திருக்கிறேன். 'முதல்வன்' படக் காட்சிகளில் கலையின் பங்கு மிக அதிகம்.

ஒரு தெலுங்குப் படத்துக்காக, ஆந்திராவின் சிறு நகரம் ஒன்றில் படப்பிடிப்பு நடந்தது. காலையில் வாக்கிங் போனபோது, அந்த ஊரில், பல வீடுகளில் பளபளவென பித்தளைக் குடங்களைத் துலக்கி வைத்திருப் பதைப் பார்த்தேன்.



• 'அசோகா' படத்தில்



• 'சங்கமம்' படத்தில்

உடனே டைரக்டரிடம் சொல்லி, பல வீடுகளிலிருந்தும் குடங்களைச் சேகரித்து, அவற்றை ஒன்றின் மீது ஒன்றாக அடுக்கி, பளபளப்பான தூண்கள் போலச் செய்தேன். பிரமாதமான பாராட்டு பெற்ற காட்சியாக அமைந்துவிட்டது" என்றார் தோட்டாதரணி.

# அழகி இருக்கையில் அஜித்!

ஆர்ட் டைரக்டர் சாபு சிரிலின் வீடே கலைப் பொருட்கள் நிரம்பிய மினி மியூ சியம்போல உள்ளது. நுழைகிறபோதே, காலிங் பெல்லுடன்கூட, ஒரு மினி சைஸ் கோவில் மணி. உள்ளே சிறியதொரு பீப்பாய் சைஸ் பெட்டி, அதைத் திறந்து காட்டினார். மேஜிக் நிபுணரின் தொப்பிக்குள்ளே இருந்து கர்சிப் முதல் வண்ணக்குடை வரை ஏதேதோ வருவதுபோல, பழங்காலப் பாக்கு வெட்டியில் தொடங்கி, உலோக விசிறி, நகைப் பெட்டி, இன்ன பிற என்று நிறைய இருக்கின்றன. சுவர் முழுக்க அலமாரிகள். அலமாரி முழுக்க ஆர்ட் சம்பந்தப்பட்ட புத்தகங்கள்.

"கலைப் பொருட்கள் என்றால் எனக்கு உயிர். எந்த ஊருக்குப் போனாலும், அங்கே கிடைக்கும் கலைப் பொருட்கள், கைவினைப் பொருட்களை வாங்கிக் குவித்துவிடுவேன்.



• சாபுசிரில்



• கிருஷ்ண மூர்த்தி

அவற்றை வீட்டில், என் கண்ணில் அடிக்கடி படும்படியான இடத்தில் வைத்திருப்பேன். அப்போதுதான் எந்தக் காட்சிக்கு என்ன தேவையோ, உடனடியாக எனக்கு நினைவுக்கு வரும்.

சரித்திரகாலப் படங்களுக்குப் பணிபுரியும் போது, அந்தக் காலத்துக்குரிய கலைப் பொருட்களை ஒரிஜினலைப் போலவே நானே உருவாக்கிப் பயன்படுத்துவேன். 'ஹேராம்' படத்தில் ஹராப்பா - மொகஞ்சதாரோ அகழ் வாராய்ச்சி சம்பந்தப்பட்ட காட்சியில், அந்தக் காலத்தில் இருந்தது போலவே டெரகோட்டா வில் புதிதாக உருவாக்கிப் பயன்படுத்தினேன்.

பிரிட்டிஷ்காரர்களின் வீடுகளில் இருக்கும் பழங்கால ஐட்டங்களை, பாலக்காட்டில் இருக்கும் கலைப் பொருள் ஆர்வலர் மன்னாடியார் என்பவரிடமிருந்து வாடகைக்கு வாங்கி வந்து பயன்படுத்தினேன்.

'மிஸ் வேர்ல்டு' அழகிப் போட்டி இந்தியா வில் - பெங்களூரில் நடந்தபோது, நானே



''அந்தப் பையன் ஒரு திருடனோட மகன்னு சொல்றீங்களே... எப்படி?''

''பத்தாயிரம் பிரித்தெழுதுக'ன்னு சொன்னா கபாலி நாலாயிரம்; பக்கிரி நாலாயிரம்; மாமூல் இரண்டாயிரம்'னு பிரிச்சு எழுதுறானே!''

— தஞ்சை தாமு

● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ●

இரட்டை மயில்கள் கொண்ட பிரத்யேக இருக்கை ஒன்றை உருவாக்கினேன். அதில்தான் உலக அழகியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட வெனிஸ் அழகி அமர்ந்தார். அதே மயில் இருக்கையை பத்திரமாகப் பாதுகாத்து வைத்திருந்து 'அசோகா' படத்திலும் பயன்படுத்தினேன்.

'சிறைச்சாலை' படத்துக்கு, நிறைய பிரிட்டிஷ் கால கலைப் பொருட்களைப் பயன்படுத்தினேன். 'ஹேராம்'ல் சென்னப்பட்டினா மர பொம்மைகளைப் பயன்படுத்தியிருக்கிறேன். இப்படி ஏராளமாகச் சொல்லிக் கொண்டே போகலாம்!

# ஒரு பழைய புடைவை கிடைக்குமா?

தென்னிந்தியத் திரைப்பட உலகில், ஒரு குறிப்பிட்ட கால கட்டத்தை அடிப்படையாகக் கொண்ட பீரியட் ஃபிலிமாகட்டும், வாழ்க்கை வரலாற்றுப் படமாகட்டும் ஆர்ட் டைரக்டர் கிருஷ்ணமூர்த்தியைத்தான் கூப்பிடுவார்கள். இவர் சிறந்த ஓவியரும்கூட. ஆர்ட் டைரக்டர் என்ற முறையில் பலமுறை தேசிய விருது பெற்றவர்.

"ஜி.வி.ஐயரின் 'ஹம்ச கீதே' படம்தான் நான் ஆர்ட் டைரக்டராகப் பணிபுரிந்த முதல் படம். திப்பு சுல்தான் காலத்துக் கதை. அதற்காக, நான் சேகரித்துப் பயன்டுத்திய கலைப் பொருட்களைக் கொண்டு ஒரு மியூசியமே நடத்தலாம். குறிப்பிட்டுச் சொல்ல வேண்டுமானால், தஞ்சை ஓவியங்களின் தாக்கத்தால் உருவாக்கப்பட்டவை மைசூர் ஓவியங்கள். பாரம்பரியமான கலை ஆர்வம் கொண்ட கன்னடக் குடும்பங்களில், பொக்கிஷமாகப் போற்றிப் பாதுகாக்கப்படும் ஓவியங்கள் அவை. அந்த மைசூர் ஓவியங்கள் நூறு, 'ஹம்ச கீதே' படத்துக்குத் தேவைப்பட்டன. ஊர் ஊராக, வீடு வீடாகச் சென்று மைசூர் ஓவியங்களை வாங்கி வந்து படத்துக்குப் பயன்படுத்திக் கொண்டு சேதம் ஏதுமில்லாமல், பத்திரமாக உரியவர்களிடம் திருப்பிக் கொடுத்தேன். பழைய பட்டுப் புடைவைகள், நூல் புடைவைகளுக்காக அலைந்தது தனி கதை."

மைசூரில், பிரிட்டிஷ் குடும்பத்தினர் பயன்படுத்திய மேஜை, நாற்காலிகள், கண்ணாடிகள், பீரோக்கள் மற்றும் கலைப் பொருட்கள், அங்கே, ஒரு பூட்டிய பங்களாவில் கலெக்டர் பொறுப்பில் இருந்தன. ஆனால் கிருஷ்ணமூர்த்தி அவற்றைப் பயன்படுத்திக் கொள்ள அனுமதி கேட்டபோது முதலில் கலெக்டர் மறுத்துவிட்டாராம். ஆனால் கிருஷ்ணமூர்த்தி விடுவதாயில்லை.பல தடவை அவரைச் சந்தித்துப் பேசி, படத்தின் கதையைச் சொல்லி, அவற்றுக்கு அவரது பாதுகாப்பில் உள்ள பொருட்கள் எத்தனை அத்தியாவசியம் என்று எடுத்துச் சொல்லி, ஒரு வழியாய்ச் சம்மதிக்க வைத்தாராம். அந்தப் படம்தான் 'நாடோடித் தென்றல்'.

"'பாரதி' படத்தில், எட்டையபுரம் அரண்மனை ஒரு முக்கியமான லொகேஷன். ஆனால், பாரதி காலத்தில் இருந்ததுபோல, இன்று அந்த அரண்மனை இல்லை. பல வருடங்களுக்கு முன் நான் அந்த அரண்மனைக்கு நேரில் சென்றிருக்கிறேன். அந்த நினைவுடன் என் தேடுதல் வேட்டையைத் தொடங்கி, கடைசியில் கொத்தமங்கலத்தில் அதேபோன்ற பெரிய வீட்டைக் கண்டு பிடித்தோம். காரைக்குடியில் பழங்கால பாணியில் மரப் பொருட்கள் செய்பவரிடம் சொல்லி, நாற்காலிகள் மற்ற மர வேலைப்பாடு பொருட்களைச் செய்யச் சொல்லி, கொத்தமங்கலம் வீட்டில் வைத்து, படம் பிடித்தோம். படம் பார்த்துவிட்டு, ''எட்டையபுரம் அரண்மனையைப் பல வருடங்களுக்கு முன் நான் நேரில் பார்த்திருக்கிறேன். அதை மிகத் தத்ரூபமாக மறுபடி உருவாக்கியிருக்கிறீர்கள்" என்று என்னைப் பாராட்டினார் எழுத்தாளர் ராஜம் கிருஷ்ணன்'' என்றார் கிருஷ்ணமூர்த்தி.

ஒரு லேட்டஸ்ட் நியூஸ். ஞான ராஜசேகரனின் அடுத்த படமான நேதாஜிக்கு ஆர்ட் டைரக்டர் கிருஷ்ணமூர்த்திதான்.

— எஸ். சந்திரமௌலி

● அடுத்த முதல்வர் நந்தனம் நந்தகுமார்! என்ன முழிக்கிறீர்களா? ஜார்ஜ் பெர்னாண்டஸ் சார்ந்திருக்கும் சமதா கட்சியின் தமிழகத் தலைவர்தான் நந்தகுமார். 1989ல் அமைச்சர் பொன்முடியின் உதவியாளராக இருந்து, பின்னர் அ.தி.மு.க.வுக்குச் சென்றவர், இப்போது சமதாவின் தலைவர். சுதந்திர தினத்தன்று இவர் தேசிய கொடியைக் கட்சி அலுவலகத்தில் ஏற்றினார். அப்போது "வருங்கால முதல்வர் நந்தகுமார் வாழ்க" என்று கோஷம் போட்டார்கள் கூடியிருந்த சில தொண்டர்கள். அதிர்ச்சியடைந்த நந்தகுமார் சைகை

காதில் விழுந்தவை



படம் : சௌரா

# வாசன் மீது கோபம்!

மூலமே தொண்டர்களை அடக்கினார்.

● தி.மு.க.வில் உட்கட்சித் தேர்தல்கள் நடந்து கொண்டிருக்கின்றன. உச்சகட்ட பொறுப்புகளுக்குத் தேர்தல் வரும் சமயத்தில் பொதுச் செயலாளர் அன்பழகன், "தன்னை மீண்டும் தேர்ந்தெடுக்க வேண்டாம்" என்று அறிக்கை விட இருக்கிறாராம். இதைத் தொடர்ந்து கலைஞரும் விடைபெற, இளைய தலைமுறையின் கையில் பொறுப்புகள் ஒப்படைக்கப்படுமாம். யார் தலைவர் என்பது எல்லோருக்கும் தெரிந்ததுதானே? பொதுச் செயலாளர் பொன்முடியாம். து.பொ. செயலாளர் பரிதி இளம்வழுதியாம். பொருளாளருக்குத் தகுதியான நபரைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள்.

● தமிழ்நாடு முஸ்லீம் லீக்கின் தலைவர் ஷேக் டாவுட். 1999ல் "இனி பா.ஜ.க.வுடன் உறவு இல்லை" என்று அம்மா கடற்கரையில் முழங்கியதைக் கேட்டு, போயஸ் தோட்டத்துக்கு நெருக்கமானவர். வாணியம்பாடி இடைத்தேர்தலில் அ.தி.மு.க. முஸ்லீம் வேட்பாளரை நிறுத்தவில்லை என்று கோபப்பட்டு அறிக்கை விட்டவர். இதனால் அம்மாவின் கோபத்துக்கு ஆளாகிவிட்டார். இது தெரியாமல் இவரது இயக்கப் பத்திரிகை ஒன்றின் வெளியீட்டு விழாவுக்கு வர அமைச்சர் ராமசாமியும், கராத்தே தியாகராஜனும் ஒப்புக் கொண்டு விட்டனர். பின்னர் விஷயம் அறிந்து விழாவைப் புறக்கணித்து விட்டனர்.

● பழைய த.மா.கா. பிரமுகர்கள் வாசன் மீது மிகக் கோபமாக இருக்கிறார்கள். கோபத்துக்கு இரண்டு காரணங்கள். சோனியாவைச் சந்திக்கும் வாசன் அது பற்றிய விவரங்களைத் தமது பழைய நண்பர்களுக்கு எதுவும் சொல்லாமல் இருக்கிறாராம். அது தவிர சட்டமன்றத் தலைவர் பொறுப்பை எஸ்.ஆர். பாலசுப்பிரமணியத்துக்குப் பெற்றுத் தர முயற்சி செய்யாமல், அதைக் கைகழுவிவிட்டு மாநிலத் தலைவர் பொறுப்பை குறிவைத்துச் செயல்படுகிறாராம். இதனால் கோபமடைந்துள்ள எஸ்.ஆர்.பி., ஜெயந்தி நடராஜன், கே.எஸ். அழகிரி ஆகியோர் இளங்கோவன் தலைவராக நீடிக்கவும், எஸ்.ஆர்.பியைச் சட்டமன்ற காங்கிரஸ் கட்சித் தலைவராகப் போடவும் முயற்சிகளை மேற்கொண்டிருக்கிறார்கள்.

— சஞ்சயன்

# கிங்

இருக்கும் அறுபது நாட்களும் அவரைச் சந்தோஷமாக வைத்துக் கொள்ள வேண்டும் என்பதுதான் விக்ரமின் எண்ணம். ஆனால் வந்த இடத்தில்தான் தெரிகிறது, நோயின் பிடியில் சிக்கியிருப்பது நாசரல்ல, விக்ரம் என்று. இறுதியில் நாயகன் விக்ரமுக்கு வியாதிலிருந்து விடுதலை கிடைத்ததா என்பதை வேறு வழியில்லாமல், வழக்கமான க்ளைமாக்ஸ் மூலம் சொல்லி முடிக்கிறார்கள்.



கதைக் களனை கிராமத்திலுள்ள குடும்பப் பின்னணியாக அமைத்திருந்தாலும், கடைசிவரை குடும்பத்திலுள்ள யாருக்கும் (வடிவேலு தவிர) நோய் இருப்பது தெரியாதவாறு காட்சிகள் அமைத்திருப்பதைப் பாராட்டலாம்.

விக்ரம் தமது நடிப்புத் திறமையை நிரூபிக்க நிறைய வாய்ப்பிருந்தும் 'மிகச் சுமார்' என்பது போல் நடித்திருக்கிறார். ஒருகால் இதுதான் இயல்பான நடிப்பு என்று அவர் நினைத்துக் கொண்டிருக்கலாம்.

எத்தனை பழைய கதையென்றாலும் அதைப் புதிய கோணத்தில் சொன்னால், தமிழ் ரசிகர்கள் தட்ட மாட்டார்கள். இந்த நம்பிக்கையை மனத்தில் வைத்துக் கதை சொல்லியிருக்கிறார் அறிமுக இயக்குனர் ஏ.எக்ஸ். சாலமன்.

காதல் திருமணம் செய்துகொண்டு ஹாங்காங்கில் செட்டிலாகி விடுகிறார் காரைக்குடி நாசர். மனைவி இறந்த பிறகும் தமது சொந்த ஊர், சொந்தபந்தங்களை நினைத்துப் பார்க்காத இவரை, இருபத்தைந்து ஆண்டுகளுக்குப் பிறகு காரைக்குடிக்கு அழைத்துக்கொண்டு வருகிறார் இவரது ஒரே மகன் விக்ரம். காரணம், நாசருக்கு ஏதோ ஓர் உயிர்க் கொல்லி நோய். அவர் உயிரோடு

விக்ரமின் தனித்திறமையான மேஜிக், திரைக்கதைக்குப் பெரிதாக உதவவில்லை என்பது பெருங்குறை.

விக்ரம் - சினேகா காதலை கவித்துவமாகச் சொல்ல முயன்றிருக்கும் இயக்குனர், ஒரு பாடலுக்கு கத்தரி வைத்துவிட்டு பிற காட்சிகளுக்குக் கொஞ்சம் முக்கியத்துவம் கொடுத்திருக்கலாம்.

எதிர்மறையான பாத்திரங்களில் அதிகம் பார்த்துப் பழக்கப்பட்டு விட்டதால், நாசர் மீது பரிதாபம் நஹி.

இருபத்தைந்து வருட ஏக்கத்தோடு வாழ்ந்து கொண்டிருக்கும் பாசமான தாத்தாவாக ஜனகராஜ் கச்சிதம்.

முதல் பாதியில் காமெடிக்கு ஸ்கோப் இருந்தும் வடிவேலுவை அடக்கி வைத்து விட்டார்கள்.

சின்னத் திரையிலிருந்து புறப்பட்டு வந்திருக்கும் தினாவின் இசையில் மெட்டுகள் கேட்கும்படி இருந்தாலும், மேற்கத்திய மேக்அப் கொஞ்சம் தூக்கல்.

பேரரசனாக முடி சூட்ட முயற்சித்திருக்கிறார்கள். ஆனால் கிங், ஒரு குறுநில மன்னன்தான்.

**— விஷுவல்தாசன்**

• ஆவரேஜ்



கலைப்பொருள் சிறப்பிதழ்

பெங்களூரிலிருந்து சுமார் 46 கி.மீ. தொலைவில் இருக்கிறது சென்ன பட்னா கிராமம்! திப்பு கல்தான் ஸ்ரீரங்கப்பட்டினத்தை ஆட்சி செய்தபோது பாரசீகத்திலிருந்து ஒரு வழிப் போக்கன் வந்தான். இந்த மரபொம்மைக் கலையை அறிமுகப்படுத்தியதும் அவனே. முதலில் முஸ்லீம் சமுதாயத்தினரே பெரும்பாலும் இத்தொழிலில் ஈடுபட்டனர். பிறகு அந்தக் கிராமத்தினர் வயிற்றுப் பிழைப்புக்கு இதுவே



# திப்பு காலத்துச் சொப்பு!

வழியானது.

பழுப்பு நிற, மென்மையான மரத்தை லேத்தில் விதவிதமான வடிவங்களில் இழைத்து வடித்து கண்ணைக் கவரும் வண்ணங்கள் பூசுகின்றனர். உளுக்காத மரம், வெளுத்துப் போகாத சாயம், பளபளப்பான ஃபினிஷிங்... இதுதான் சென்ன பட்னா பொம்மைகளின் தனிச் சிறப்பு.

நாலாயிரம் குடும்பங்கள் இத்தொழிலில் ஈடுபட்டிருக்கின்றன. நடுவில் ஆட்டம் கண்ட இக்கலையைத் தூக்கி நிறுத்த பல அமைப்புகள் பாடுபடுகின்றன. ஏற்றுமதி சந்தையின் தேவைக்கேற்ப கலைப் பொருள்களின் அமைப்பும் நேர்த்தியும் மாறி வருகின்றன. நம் நாட்டுக் குழந்தைகள் விளையாடும் சொப்புகள் மரப்பொம்மைகளைத் தவிர, வளையல்கள், பெட்டிகள், திரைச்சீலை, ஜாடிகள், குழந்தைகளுக்கு எண்ணிக்கை சொல்லித்தர உபயோகமான மணிகள், குங்குமச் சிமிழ்... என இதில் ஏக வெரைட்டி.

— 'எல்லெஸ்'



# ஜெயலலிதா, மம்தா, குப்பம்மா!



"ஜெயலலிதாவும், மம்தா பானர்ஜியும், குப்பம்மாவும் அடுத்து என்ன செய்வார்கள்னு யாருக்கும் தெரியாது..."

"அது யாரு குப்பம்மா...?"

"என் மாமியார்!"

— நாமக்கல் பாலு

"நீங்க மருந்து சாப்பிடும்போது உங்க பார்வையிலே நான் படக் கூடாதா...ஏன்?"

"இது ரொம்பக் கசக்குமாம்! 'கஷ்டத்தைப் பார்க்காம முழுங்கணும்'னு டாக்டர்தான் சொன்னாரு!"

— தஞ்சை தாமு





"படத்தை கஷ்டப்பட்டு எடுத்து முடிச்சுட்டேன்..."

"அப்புறம்..?"

"நல்ல இங்கிலீஷ் பேரா சொல்லுங்க..."

— பிரசன்ன குமார்

"மேடைக்குத் துண்டுச் சீட்டு அனுப்பினதும் தலைவர் பேச்சை நிறுத்திட்டாரே... அப்படி என்ன எழுதி அனுப்பினாய்?"

"குறிப்பிட்ட நேரத்துக்குள் மீட்டிங்கை முடிக்காவிட்டால் வாடகைக்கு வந்திருப்பவர்கள் ஓவர் டைம் கேட்பார்கள்னு எழுதி அனுப்பினேன்."

— அம்பை தேவா



## நவராத்திரி கொலுப் படிகள்



எங்களிடம் உயர்ரக ஸ்டீல் கொலுப் படிகள் உங்களது தேவைக்கேற்ப, 7படிகள், 5படிகள், 3 படிகள் அளவுகளில் கிடைக்கும். சுலபமாக பிரித்து பொருத்தக்கூடியது

மொத்தமாகவும் & சில்லரையாகவும் கிடைக்கும் இடம்

# OM SAKKTHI METAL CRAFT

(Manufacturers)

49, Perambur High Road, Jamaliya,
Perambur, Chennai -12.
Ph: 6622837, 6624618 Tele Fax: 6623984
Email:sakkthi12@vsnl.net

பருக பருக ஆனந்தம்
அதிக ஆனந்தம்
சுத்தமான தஞ்சாவூர்
டிகிரி காப்பிக்கு

# ஜீவா காபி

திருமணங்களுக்கும் மற்றும்
அனைத்து விசேஷங்களுக்கும்
100% பியூர் பில்டர் காபி பவுடர்

தயாரிப்பாளர்கள்:

## ஜீவா காபி ஒர்க்ஸ்

28, பி.வி. நாயக்கன் தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை – 600 005.

இலவச டோர் டெலிவரிக்கு தொடர்பு
கொள்ளவும்:(சென்னை) : 8444725, 8442667

டெல்லி, மும்பை, கொல்கத்தா.

E-mail:coffeeps@md3.vsnl.net.in

# சுபவசந்தம் A/c திருமண மண்டபம்



70, வேலாயுதம் காலனி, சாலிக்கிராமம்,
சென்னை-93 Ph : 3762687 Cell : 98411-09476
Website :
www.hellochennai.com/marriage/subavasantham
www.indiayellowpagesnet.com/subavasantham

உங்களின் இல்லங்களில் இன்பம் பொங்கும் திருமணம், பிறந்த நாள், மஞ்சள் நீராட்டு விழா, வளைகாப்பு விழா, உபநயனம், சீமந்தம், வெள்ளி விழா, பொன் விழா, மணி விழா, பவள விழா, வைர விழா, நூற்றாண்டு விழா, வரவேற்பு போன்ற இனிய வைபவங்களுக்கும், வர்த்தக நிறுவனங்களில் வருடாந்திர கூட்டங்கள், கருத்தரங்குகள், பயிற்சியரங்குகள், கண்காட்சிகள், விளம்பர முகாம்கள், விருந்துகள், கலை நிகழ்ச்சிகள் போன்ற தேவைகளுக்கு பயன்படுத்தக் குளிர்சாதன வசதிகளுடன் அமைக்கப் பெற்ற ஒரு சிறப்பான மண்டபம்.

## சுபவசந்தம்

- சுமார் 300 சொகுசு இருக்கைகளுடன் கூடிய குளிர்சாதன மண்டபம்
- விசாலமான அனைத்து வசதிகளும் கொண்ட குளிர்சாதன மேடை
- 110 பேர் அமர்ந்து உணவருந்தக்கூடிய தூய்மையான சாப்பாட்டு மண்டபம்
- நவீன வசதிகளுடன் கூடிய சமையலறை, பாத்திரங்களுடன்
- 6 பெரிய தங்கும் அறைகள், குளியல் வசதியுடன் அவற்றில் 4 ஏ.சி.யுடன்
- பொதுக் குளியல், கழிவறைகள், நிறைந்த நீர் வசதி, சுகாதாரத்துடன்

உங்கள் தேவைக்கேற்ப அனைத்து
வசதிகளுடன் கூடிய அழகிய மண்டபம்
சுபவசந்தம் குறைந்த வாடகையில்
உங்கள் தேவைக்கு உடனே அணுகுங்கள்

சேவையே எங்கள் நோக்கம்! உங்கள்
மகிழ்ச்சியே எங்கள் இலக்கு!!
சுபவசந்தத்தில் துவங்கி உங்கள்
வாழ்க்கையில் வசந்தம் வீசட்டும்!!!

24

வாஸந்தி

**கா**லையில் கண் விழித்தபோது தலை கனத்தது. இரவு முழுவதும் தூக்கமும் விழிப்புமாகப் புரண்டதுதான் காரண மாயிருக்க வேண்டும். ஆனால் நன்றாகத் தூங்கி எத் தனையோ நாட்களாகிவிட்டன. சில நாட்கள் பரத் எதற் காவது சிணுங்கிக் கொண்டிருப்பான். சென்ற வாரம் திடீ ரென்று அவனுக்கு வயிற்றுப் போக்குக் கண்டது. விடியற் காலை அவன் அழுவதைக் கண்டு அவனது டயாப்பரை அவிழ்த்தபோது திட்டாக ரத்தக்கரை இருந்தது. அவள்





# பொய்யில் பூத்த நிஜம்

நடுங்கிப் போனாள். ஏழு மணி அடிக்கும்வரைக் காத் திருந்து டாக்டரின் வீட்டிற்கு போன் செய்து விஷயத்தைச் சொல்வதற்குள் அழுகை வெடித்துக் கொண்டு வந்தது. நல்ல வேளையாக டாக்டர் உடனடியாக வீட்டிற்கே வந் தான். 'குழந்தைன்னா ஏதாவது உடம்புக்கு வராதா என்ன? தைரியமாயிருங்கள்' என்று மருந்து எழுதிக் கொடுத்து விட்டுப் போனான். ''தனியாகத் திண்டாடுகிறேன்'' என்று டாக்டரிடம் புலம்ப முடியவில்லை. சமேலி வரும்வரைக் காத்திருந்து பதைப்புடனேயே காரை எடுத்து மருந்துக் கடைக்குச் சென்று வந்தாள். நான்கு நாட்கள் லீவு எடுத் தாள். ஐந்தாம் நாள் ஆபீசுக்குச் சென்றபோது மானேஜர் முகம் கொடுத்துப் பேசவில்லை. அவரைச் சமாதானப் படுத்துவதற்காக மூச்சைப் பிடித்துக் கொண்டு குவிந்து போன வேலையை முடித்துக் கொடுக்க வேண்டியிருந்தது.

**'ராஜாவுக்கு என்னைக் காதலித்ததே நினைவில்லை. அந்த உணர்வே என்னைப் பார்க்கும்போது ஏற்படாத போது நம்பிக்கை எங்கிருந்து வரும்?'**

பரத்துக்கு உடம்பு தேவலை என்றாலும் இரவில் சரியாகத் தூங்காமல் சிணுங்கினான். அம்மாவும் பாட்டியும் ஏதாவது ஒரு வகையில் கனவில் வந்து அலைக்கழித்தார்கள். அம்மா நெருப்புப் பந்தாய் ஹுங்கார மிட்டாள். 'சக்குவை என் உசிர் இருக்கிற வரைக்கும்' காப்பாத்துவேண்டி என்று பாட்டி வாக்குக் கொடுத்தாள். "தாத்தா செத்துப் போனதாலே நீங்க மாமா வீட்டுக்குப்



போக வேண்டியதில்லே. நா உங்களைக் காப்பாத்துவேன்" என்றாள் சக்கு, பாட்டியை அணைத்து. "உன்னை ஒருத்தன் கையிலே பிடிச்சுக் கொடுக்காமப் போறேனேடி" என்று பாட்டி கண்ணீர் விட்டாள். கையைப் பிடிச்சிண்டிருந்தவன் போயிட்டான் பாட்டி....

**வா**சல் மணி ஓசை கேட்டு அலறிப் புடைத்துக் கொண்டு சகுந்தலா எழுந்தாள். பரத் எழுந்து தன்னுடைய கட்டிலின் சட்டத்தைப் பிடித்தபடி நின்றிருந்தான். "ஹலோ!" என்றாள் அவள். 'லோ!' என்றான் அவன் பதிலுக்கு. அவள் சிரித்தபடி, "இதோ வரேன், ஸாரிடா, பசிக்கறதா?" என்று கன்னத்தை நிமிண்டிவிட்டு, வாசல் கதவைத் திறக்க ஓடினாள். 'என்ன தீதி இப்பத்தான் எழுந்தீங்களா?' என்று சமேலி உள்ளே நுழைந்தாள். சகுந்தலா பரத்தை வெளிக்கிருக்க 'பாட்டி'யில் உட்கார்த்தி வைத்துவிட்டு முகம் கழுவி வருவதற்குள் சமேலி தேநீரைத் தயாராக வைத்திருந்தாள். சமேலி மட்டும் இல்லாவிட்டால் திண்டாடி நாறிப் போயிருப்பேன் என்று சகுந்தலா தனக்குள் நூறாவது தடவையாக நினைத்துக் கொண்டாள். பரத்துக்குப் பாலைக் கொடுத்த பிறகு தன் வேலையைச் சற்று கவனிக்கச் சென்றால், சமேலி சமயங்களில் குழந்தையைக் குளிப்பாட்டி க்ரெஷ்ஷுக்குத் தயார் கூடச் செய்து விடுவாள். நன்றிப் பெருக்கினால் சகுந்தலா தானாக அவள் சம்பளத்தை உயர்த்தியபோது, "எதுக்கு தீதி?" என்று கேட்ட அதிசய வேலக்காரி. "உங்க சம்பளத்திலே தானே இப்ப வீடு நடக்குது?"

அவளுக்குத் தூக்கி வாரிப் போட்டது. "அதனாலே என்ன, நா சமாளிச்சுக்குவேன் கவலைப்படாதே."

"நன்றி தீதி."

அவள் அநாவசியமாக ராஜாவைப் பற்றிப் பேசாதது சௌகர்யமாக இருந்தது. மதிப்புக் குறையாமல் சிநேகிதத்துடன் வேலை செய்தது இதமாக இருந்தது.

"தீதி, இங்கே வாங்க, சீக்கிரம் வாங்க!" என்று சமேலி கத்த, பேப்பர் படித்துக் கொண்டிருந்த சகுந்தலா திகிலுடன் ஓடினாள். படுக்கையறையில் தரையில் சமேலி அமர்ந்து "ஆஜா ஆஜா" என்று கைநீட்டி அழைக்க, பரத் பல்லைக் காட்டிச் சிரித்தபடி நடந்து அவளிடம் வந்தான். "மேரா முன்னா!" என்று சமேலி அவனது உச்சி முகர்ந்தாள். சகுந்தலாவுக்குப் பரவசத்தில் கண்ணில் நீர் திரையிட்டது.

"முன்னா நடக்க ஆரம்பிச்சுட்டான் தீதி. இனிமே நம்மளை உக்காரவிட மாட்டான்!"

மிகப் பெரிய அதிசய ஜாலத்தை அவன் செய்வதுபோல இருவரும் பரத்தை மாறி மாறிக் கொஞ்சினார்கள். கம்ப்யூட்டர்

டேபிள் மேல் இருந்த ராஜாவின் படத்தை அவள் திருப்பி வைத்தாள்.

"நீ நடக்கறதை உங்க அப்பா பார்க்க வேண்டாம். அவர்தான் உன்னை விட்டுட்டுப் போயிட்டாரே - பனிஷ்மென்ட்" என்று அவள் சிரிக்க, பரத் கைகொட்டிச் சிரித்தபடி அவளிடம் தத்தித் தத்தி ஓடி வந்தான். "உனக்குத்தான் நஷ்டம்" என்று புகைப் படத்தின் பின்புறத்தைப் பார்த்து அவள் முணுமுணுத்தாள்.

இரண்டு மாதங்களுக்கு முன் குழந்தையின் பிறந்த நாள் வந்தபோது அதைக் கொண்டாடும் மனநிலையில் அவள் இருக்கவில்லை. விவேக்கும் கதிரும்தான் கட்டாயப் படுத்திக் கொண்டாட வைத்தார்கள். அவள் அழக்கூடாது என்ற நிபந்தனையுடன் பலூனும் கேக்கும் வாங்கிக் கொண்டு வந்து அமர்க்களப்படுத்தினார்கள். அவளையும் பரத்தையும் பல கோணங்களில் புகைப் படம் எடுத்தார்கள். "ராஜாவுக்கு ஒரு படம் அனுப்பட்டுமா?" என்றான் விவேக்.

"வேண்டாம்" என்றாள் அவள் உறுதியாக. "நா எழுதின ஒரு லெட்டர் கூட அவன் கைக்குப் போய்ச் சேரல்லே. விவேக், நா இப்ப அதைப் பத்தி யோசனையே செய்யறதில்லே. அவனுக்கு நினைவு திரும்பி, வரணும்னு தோணித்துன்னா வரட்டும் _ நா போய் நீதி கேட்கப் போறதில்லே."

"அதுதான் புத்திசாலித்தனம்" என்றான் கதிர்.

"நா எதுக்கு தப்பு செஞ்சவளாட்டம் மண்டியிடணும்? அவன் விலகியிருக்கறது சரிதான். அவன் இப்ப நா காதலிச்ச ராஜா இல்லே – இது வேற யாரோ! விவேக், நீ அன்னிக்கு அவனுக்கு ஆக்ஸிடென்ட் ஆயிட்டதுன்னு போன் பண்ணியே, அவன் செத்துப் போயிடுவான்னு பயந்தேன். என் வரையிலே இப்ப அது உண்மை."

கண்களில் நீர் நிறைவதை அவள் சிரமப்பட்டு உள்ளே இழுத்துக் கொண்டாள்.

"உங்க ரெண்டு பேருக்கும் ரெஜிஸ்டர் மேரேஜ் ஆகியிருந்தா அவன் போயிருக்க மாட்டான்னு எங்கம்மா சொல்றாங்க" என்றாள் கதிரின் சினேகிதி சினேகா.

"நான்சென்ஸ்!" என்றான் கதிர்.

சகுந்தலா சிரித்தாள். "எங்க பாட்டி என்ன சொல்வா தெரியுமா? இங்கே என்ன எழுதியிருக்கோ அதுதான் நடக்கும்பா" என்று நெற்றியைச் சுட்டிக் காண்பித்தாள். சினேகா குழப்பத்துடன் தலையாட்டினாள். "எனக்கு இது உரிமைப் பிரச்னையில்லே சினேகா" என்றாள் சகுந்தலா. உணர்வுப் பிரச்னை. அவனுக்கு அந்த உணர்வே செத்துப் போனப்புறம் நா எதையும் எதிர்பார்க்க முடியாது."

"நீ அப்ப எந்த முயற்சியையும் எடுக்க மாட்டியா?"

"மாட்டேன்" என்றாள் அவள் தீர்மானமாக.

ஞாயிற்றுக் கிழமை என்பதால் பரத்துக்கு சாவகாசமாகக் குளிப்பாட்டிவிட முடிந்தது. கட்டிலுக்குக் கொண்டுவந்து துவட்டிப் பவுடர் போடும்போது ராஜாவின் நினைவு வந்தது.

"இன்னிக்கு என்ன சமைக்கட்டும் தீதி?" என்றாள் சமேலி. "ஃப்ரிஜ்லே பனீர் இருக்கு.

> "உங்ககிட்டே வாங்கின விக்ல முடியெல்லாம் ஒரே கொட்டுது..."
>
> "நான்தான் சொன்னேனே! எங்க கம்பெனி விக் ரொம்ப இயற்கையா இருக்கும்னு..."
>
> – வி. சாரதி டேச்சு

பாலக் பனீரும், மட்டர் (பட்டாணி) புலாவும் செய்யட்டுமா?"

"ஜமாய்!" என்றாள் சகுந்தலா. "நீ இல்லேன்னா நா ஏன் என் சாப்பாட்டைக் குறைச்சுக்கணும்?" என்று முணுமுணுத்தாள். பாட்டி சொன்ன கதை நினைவுக்கு வந்தது. கணவன் ஊருக்குச் சென்றிருந்தபோது, நெய் உருக்க, தயிர் கடைய சோம்பல்பட்டு, "அவரில்லா சாப்பாட்டுக்கு இதுவானும் போராதா" என்று ஒருத்தி கட்டித்தயிரும் விழுது நெய்யுமாக உள்ளே தள்ளினாளாம். ராஜா சென்ற பிறகு கொஞ்ச நாட்களுக்குச் சாப்பிடப் பிடிக்கவில்லை. சமைத்து வைத்ததையெல்லாம் மறுநாள் சமேலி கொட்டுவாள். ஒரு நாள் கண்ணாடியில் உருவத்தைப் பார்த்தபோது ஞானோதயம் ஏற்பட்டது. கன்னம் ஒட்டி, கண்கள் புதையுண்டு போயிருந்தன. பரத்தைத் தூக்க முடியாமல், அலுவலகத்தில் வேலையில் கவனம் நிலைக்காமல் உடம்பில் பலவீனம் ஏற்பட்டிருந்தது. யாருக்காக, எதற்காக என்னையே மாய்த்துக் கொள்ள வேண்டும் என்று வைராக்யம் பிறந்தது. குழந்தையை வளர்க்கிற பொறுப்பு எனக்கிருக்கு, அது எனக்கு ஞாபகமிருக்

கணும், யாருக்கு மறந்தாலும். உடம்பில் தெம்பு வந்ததும் மனசுக்குள் தைரியம் வந்தது.

வாசல் அழைப்பு மணி அடித்தது.

"நான் பார்க்கறேன் சமேலி" என்றபடி அவள் பரத்தைத் தூக்கிக் கொண்டு வாசலுக்கு விரைந்தாள். கதவைத் திறந்தபோது வெளியில் சினேகாவும் கதிரும் நின்றிருந்தார்கள்.

"ஹாய்!" என்றாள் சகுந்தலா சந்தோஷத் துடன். "கமான் இன்! என்ன திடீர்னு? ஆனா நல்லதாப் போச்சு. இன்னிக்கு சமேலி நல்ல சமையல் செய்யறா. நீங்க இங்கே சாப்பிடலாம்."

"இல்லே. சாப்பிட உக்கார நேரமில்லே சக்கு, இன்னும் நிறையப் பேர் வீட்டுக்குப்



போகணும்."

"என்ன விஷயம்?" என்றாள் சகுந்தலா வியப்புடன்.

"நல்ல விஷயம்" என்று சினேகா சிரித்தாள். வெட்கம் கலந்த சிரிப்பாகத் தோன்றிற்று.

"எனக்கும் கதிருக்கும் கல்யாணம். அடுத்த ஞாயிற்றுக் கிழமை. நீ சனிக்கிழமையே வந்துடணும். மெஹந்தி சடங்குக்கு."

ஆச்சரியத்தில் சகுந்தலாவுக்குத் திணறிப் போயிற்று.

"அடி சக்கை. பராத் எல்லாம் கொண்ட சம்பிரதாயக் கல்யாணமா?"

"இல்லே, இல்லே, ரெஜிஸ்டர் கல்யாணம் காலையிலே. சாயங்காலம் ரிஸெப்ஷன்!"

கதிர் சங்கடத்துடன் அவளைப் பார்த்து அசட்டுச் சிரிப்புச் சிரித்தான்.

"கடைசியிலே சரின்னு ஒத்துக்கிட்டேன். இல்லேன்னா இவ உறவை முறிச்சுக்கறேன்னு பயமுறுத்தினா!"

"உண்மையைச் சொல்றேன் சக்கு. உனக்கு நேர்ந்த கதியைப் பார்த்து நா பயந்து போயிட்டேன்" என்றாள் சினேகா.

"கடவுளே எந்தக் காரணத்துக்காகவும் இவனை இழக்க நா தயாரில்லே!"

"நானும் ராஜாவை இழக்கத் தயாரா யிருக்கல்லே சினேகா!" என்றாள் சகுந்தலா மெல்லிய குரலில்.

"ஐ நோ, உனக்கு எவ்வளவு கஷ்டம் இருக்கும்னு எனக்குத் தெரியும். ஆனா உன்னால எதுவுமே செய்ய முடியாமப் போச்சா இல்லையா? எங்கம்மா வேற என் உயிரை வாங்கிட்டாங்க. ரிஜிஸ்டர் கல்யா ணமாவது பண்ணத்தான் வேணும்னு."

"ரிஸப்ஷனுக்கு ரொம்ப நெருங்கினவங் களைத்தான் கூப்பிட்டிருக்கோம்" என்றான் கதிர்.

அவர்கள் சென்றபிறகு வெகுநேரம் அவளுக்குப் பிரமை பிடித்தது போல இருந் தது. பரத்துக்கு விளையாட்டுக் காட்டும் போதும் ஆகாரம் கொடுக்கும்போதும் கூடவே இருந்தது. வேறு ஏதேதோ பிர தேசங்களுக்கு இட்டுச் சென்றது. எது சரி எது தப்பு என்ற விவாதத்தைக் கேள்வி போல கொக்கி போட்டு நிறுத்திற்று. ஒரு முறை அலுவலக விஷயமாக, ஸ்வீடனுக்குச் சென்றிருந்தபோது ஜேக்கப் என்ற நண்பர் வீட்டில் தங்கினாள். திருமணம் என்ற ஸ்தா பனமே அங்கு மறைந்து போய் பல வருஷங் கள் ஆகி விட்டன என்றார் ஜேக்கப். எங் களுக்கு அது தேவையில்லை என்று உணர் கிறோம் என்றார். அவரும் அவரது மனைவி ஜேனட்டும் இருபத்தி ஐந்து வருஷங்களாகச் சேர்ந்து வாழ்கிறார்கள். சமூகத்தில் யாரும் புருவத்தை உயர்த்துவதில்லை. அரசாங்கம் எல்லாருக்கும் பாதுகாப்பு அளிக்கும். பிறக் கும் எல்லா குழந்தைகளுக்கும் சலுகை உண்டு. அலவன்ஸ் உண்டு. தகப்பன் யார் என்ற கேள்வியே கேட்காது. "ஆனால் இன் றைய பெண்கள்!" என்று ஜேக்கப் ஆயாசத் துடன் சிரித்தார். "அவர்களுக்குப் பாரம்பர் யத்திற்குச் செல்ல ஆசை வந்துவிட்டது. வெட்டிங் கௌன் அணிந்து சர்ச்சில் திருமணம் செய்து கொள்ள மோகம் ஏற் பட்டுவிட்டது. ஸ்வீடனில் மறுபடி சர்ச் திருமணங்கள் நடக்க ஆரம்பித்திருக்கின் றன!"

அது முற்றிலும் வேறு உலகம் என்று அவளுக்குத் தோன்றிற்று. "எல்லாரும் சேர்ந்து வாழ நினைத்தது ஒரு நிஜப் பிரச்

ணைக்காக" என்றார் ஜேக்கப். "கத்தோலிக்க நாடுகளில் விவாகரத்து கிடைப்பது ரொம்பக் கஷ்டமான காரியம். கத்தோலிக்க நாடாக இல்லாவிட்டாலும் டைவர்ஸ் என்றால் ரொம்பப் பணம் செலவாகும். இந்தத் தொல்லையே வேண்டாம் என்றுதான் பலர் இப்படி வாழ ஆரம்பித்தார்கள். என்னைப் பொறுத்தவரையில் விவாகம் என்ற சடங்கு தேவையற்றது. நம்பிக்கை, அன்பு என்பது மட்டுமே இருவர் சேர்ந்து வாழத் தேவைப் படும் விஷயங்கள். நம்பிக்கை போய்விட்ட தென்றால் சேர்ந்து வாழ்வதில் அர்த்த மில்லை."

ராஜாவுக்கு என்னைக் காதலித்ததே நினைவில்லை. அந்த உணர்வே என்னைப் பார்க்கும்போது ஏற்படாத போது நம்பிக்கை எங்கிருந்து வரும்? எனக்கும் அவனுக்கும் திருமணம் நடந் திருந்தால், என்னுடன் அவன் தொடர்ந்து வாழ அது நிர் பந்தித்திருக்கலாம். ஆனால் அப்படித் திணிக்கப்பட்ட வாழ்வு எப்படி இருந்திருக் கும்?

**சு**தீர் சினேகா திருமண அழைப்பிதழை பரத் விசிறி போலப் பிரித்து பட்பட் டென்று தரையில் அடித் தான். அவள் அதை அவனி டமிருந்து லாகவமாக வாங்கிப் பார்த்தாள். தங்க நிறத்தில் வார்த் தைகள் பளிச்சிட்டன. சனிக்கிழமை பதி னோரு மணிக்கு மெஹந்தி சடங்கு என்று இருந்தது. வெட்டிங் கௌன் அணிய ஸ்வீடன் நாட்டுப் பெண்களுக்கு மோகம் ஏற்பட்டது போல ஜே.என்.யூவில் படித்த சினேகாவுக்கு மருதோன்றியில் சிவந்த கைகளுடன் மணப்பெண் கோலம் பூண ஆசை வந்திருக்கும் என்று சகுந்தலா சிரித்துக் கொண்டாள். பீரோவைத் திறந்து கல்யாணத்துக்கு அணிந்துகொள்ளும்படி யாக ஏதேனும் உருப்படியான உடை இருக் கிறதா என்று ஆராய்ந்தாள். முதல் நாளைக்கு சுடிதார் செட் ஒன்றை எடுத்து வைத்தாள். மைசூருக்கு அலுவலாகச் சென்றிருந்தபோது ராஜா வாங்கி வந்திருந்த மைசூர் க்ரேப் ஸில்க் புடைவை இருந்தது மறு நாள் கட்ட. அரக்கு நிறத்தில் சின்ன மாங்காய் ஜரிகை பார்டருடன். அதை அணிந்து அவன் எதிரில் நின்றபோது, "தேவதை போல இருக்கே" என்று அவன் பாராட்டி அணைத்து முத்தமிட்டது நினைவுக்கு வந்தது. புடைவையைத் தன் மேல் போர்த்திக் கொண்டு பரத்திடம் அபிப்பிரா யம் கேட்டாள். "அம்மா அழகாயிருக் கேனாடா?" அவன் அவள் கழுத்தை அணைத்து கன்னத்தில் முத்தமிட்டான்.

சமேலியின் சமையல் அன்று வழக்கத்தை விட ருசியாக இருந்தது. ரசித்து ஒரு பிடி பிடித்ததில் இரவு தூங்காத தூக்கம் வரும் போல் இருந்தது. படுப்பதற்கு முன் அவள் சமேலியிடம் சொன்னாள். "சமேலி, எனக்கு நினைவுபடுத்து, இன்னிக்கு அந்த ராபின்சன் வீட்டிற்குப் போகணும். நீ பரத்தைப் பார்த் துக்கோ, நா போயிட்டு வரேன். இப்பக்




கொஞ்சம் படுக்கணும் எனக்கு, நேத்து ராத்திரி சரியாத் தூங்கல்லே."

"அச்சா தீதீ!" என்றாள் சமேலி. டாரத்தி யைப் பார்க்க ஒரு ரோஜாக் கொத்து வாங்கிச் செல்ல வேண்டும். காலனி வாசலி லேயே கிடைக்கும் என்று நினைத்தபடி படுத்தாள். அதிசயமாகக் கனவற்ற நித்தி ரையில் ஆழ்ந்திருக்கையில் "தீதீ, தீதீ!" என்று சமேலியின் குரல் உலுக்கி எழுப்பிற்று. கண் ணைத் திறந்து இலேசான எரிச்சலுடன் "என்ன சமேலி நல்லத் தூக்கத்தைக் கெடுத்தே" என்றாள்.

"ஸாரி தீதீ" என்றாள் சமேலி தயங்கிய படி. "அந்த மேடம் இறந்துட்டாங்களாம்" சகுந்தலா விருட்டென்று எழுந்து உட்கார்ந் தாள். "என்னது? யார் சொன்னது உனக்கு? இப்பத்தானே பத்து நாள் முந்தி அவங் களைப் பார்த்தேன்?"

"சௌக்கிதார் சொன்னான் தீதி. இன்னிக்கு விடியற்காலத்திலே செத்துப் போச்சாம்."

"அடப் பாவமே!" சந்தேகம் நிழலாடும் டாரத்தியின் விழிகள் ஞாபகத்திற்கு வந்தன. நர்சுன்னா வயசான பொம்பளைங்க கிடைக்க மாட்டாங்களா என்று சற்று முன் கிசுகிசுத்தது போல் இருந்தது. மரணத்தின் வாசலில் நின்றிருந்தவளுக்குள் இருந்த பாமரத் தவிப்புப் பரிதாபமாக இருந்தது.

"வேலை முடிஞ்சதும் நா பால்கனியிலே போய் நின்னேன். ராபின்சன் வீட்டு பால்கனியிலே நிறையப் பேர் இருந்தது போல இருந்தது. சந்தேகம் வந்து சௌக்கிதாரைக் கூப்பிட்டுக் கேட்டேன்."

## மருத்துவப் பேருந்து...

**பா**ரீஸ் நகரில் வசிக்கும் மக்களுக்காக இலவச மருத்துவ சிகிச்சை பஸ் ஒன்றை பாரீஸ் நகராட்சி ஏற்பாடு செய்துள்ளது. நகரிலுள்ள இருபது தொகுதிகளையும் ஒரு வீதி விடாமல் மாதம் ஒருமுறை வலம் வரும் இதில், ஒரு மருத்துவக் குழுவே செயல்படுகிறது. இதில் சிகிச்சை யுடன் மருந்தும் உடனே தரப்படுகிறது!

— பாரீஸ் பார்த்தசாரதி

சகுந்தலா எழுந்தாள்.

"நா போய் ராபின்சனை துக்கம் விசாரிக்கப் போகணும் சமேலி."

"ஆமாம். கிளம்புங்க. அவங்க கிருஸ்துவங்க இல்லே? அடக்கம் பண்ணுவாங்களாம். அஞ்சு மணிக்குக் கிளம்பப் போறாங்களாம்."

முகத்தைக் கழுவி தலையைச் சீவிக் கொண்டு அவள் கிளம்பியபோது, "துக்கம் விசாரிக்கக் கலர் உடுப்போடவா போவாங்க?" என்றாள் சமேலி. தயாராக வெள்ளை குடிதார் செட் வைத்திருந்தாள். "அவங்க தமிழுங்க. கலர் உடுத்தினா பரவாயில்லே" என்று முணுமுணுத்தபடி சகுந்தலா வெள்ளை உடுப்பை அணிந்து கொண்டு புறப்பட்டாள். வெள்ளை நிறம் ராபின்சன் மனத்துக்கு இதத்தைத் தரலாம். டாரத்தி இத்தனை விரைவாக இறந்து போவாள் என்று சத்தியமாக அன்று அவளுக்குத் தோன்றவில்லை. பலவீனமாகத் தெரிந்தாளே தவிரத் தெளிவாகப் பேசினாள். அவளிடம் வாக்குக் கொடுத்திருந்தபடி இன்னொரு முறை அவளைப் போய்ப் பார்த்துவிட்டு வந்திருக்கலாம்.

**ரா**பின்சன் வீட்டில் தமிழர் வட இந்தியர் என்ற கலப்படமான கூட்டம், முக்காலும் இந்தக் காலனியைச் சேர்ந்தவர்கள் – இருந்தது. ராபின்சனின் அருகில் அவள் சென்று "ரொம்ப ஸாரி, அவங்க இவ்வளவு சீக்கிரம் இறந்தது அநியாயமாயிருக்கு" என்றபோது ராபின்சன் அவள் எதிர்பாராமல் அவள் கைகளைப் பற்றி குலுங்கக் குலுங்க அழுதார்.

"அநியாயம்மா. நாற்பது கூட ஆகல்லே. நேத்து ராத்திரி மாரடைப்பு வந்துடுச்சு. டாக்டரைக் கூப்பிடறதுக்குள்ளே போயிட்டா." அவருடைய உறவினர்கள் யாரோ வந்திருந்தது போலிருந்தது.

"குழந்தை கணக்கா அவளுக்கு எல்லாத்து மேலயும் ஆசை. வாழணும்னு ரொம்பத் தீவிர ஆசை இருந்துச்சு அவளுக்கு."

குளிர் பதனப் பெட்டிக்குள் உடலை வைத்திருந்தார்கள். கண்ணாடி வழியாகத் தெரிந்த அந்த அப்பாவிப் பிறவிக்கு அமைதி கிடைத்ததுபோல முகம் சாந்தமாக இருந்தது. சகுந்தலா கண்களைத் துழாவிப் பார்த்தாள். அந்த நர்ஸைக் காணோம்.

"உங்களுக்கு என்னாலே செலவு செலவுன்னு மாஞ்சு போவா. நர்ஸ் வேண்டாம் அனுப்பிடுங்கன்னு பிடிவாதமா சண்டை பிடிச்சா. சரின்னு இரண்டு நாள் முன்னால அனுப்பிட்டேன்."

அந்த முகத்தின் சாந்தத்திற்கு அதுதான் காரணம். இனி நீ எக்கேடு கெட்டுப் போகலாம் என்பதுபோல – சகுந்தலாவுக்குத் திடீரென்று அம்மாவின் ஞாபகம் வந்தது. அம்மாவின் மனக் கஷ்டம் டாரத்தி பட்டிருக்க மாட்டாள். ஆனால் அடிப்படையில் இருவரும் ஒரே உணர்வு நிலையைக் கொண்டவர்களாகத் தோன்றிற்று. பாதுகாப்பின்மையே அவர்களது பயத்தின் ஆதாரம். நிராகரிக்கப்பட்ட உணர்வே அவர்களது கோபத்தின் காரணம்.

அம்மா அப்படி செத்துப் போயிருக்காவிட்டால் தன்னுடைய வாழ்க்கையே வித்தியாசமாக இருந்திருக்கும் என்று சகுந்தலா நினைத்துக் கொண்டாள்.

(தொடரும்)




# பட்டுப் பூ மாலை!

அகில இந்திய அளவிலான கைவினைப் பொருட்களின் கண்காட்சி அண்மையில் ஹரியானாவில் நடந்தது. இதில் அனைவரையும் ஆச்சரியப்படுத்தியது ஒரு வண்ணமிகு மாலை. கண்காட்சியில் அந்த மாலையைப் பாராட்டாதவர் யாருமில்லை. அது சாதாரண பூமாலை அல்ல. குப்பைக்குப் போயிருக்க வேண்டிய பட்டுப் பூச்சி கூடுகளிலிருந்து உருவான மாலை அது!

'பெவிசோ' என்ற தொண்டு நிறுவனத்தின் ஸ்டாலில் இருந்த இம் மாலையைப் பெண்கள் சுய உதவிக் குழுக்



களுக்குப் பயிற்சியளித்து, உருவாக்கினார்களாம். இப்படிப்பட்ட மாலைகள் மட்டுமில்லாமல் மலர் கொத்து, பொக்கே வாழ்த்து அட்டைகள், சுவர் அலங்காரங்கள் என்று பலவிதமான பொருட்கள் இங்கு உருவாக்கப் படுகின்றன. (விலை மூன்று ரூபாயில் தொடங்கி ஐந்நூறு ரூபாய் வரை)

பெவிசோ அமைப்பைச் சேர்ந்த மதிவாணன் சொல்கிறார் : "தர்மபுரி, கிருஷ்ணகிரி, சேலம் பகுதிகளில் பட்டு வளர்ப்பு மிகப் பிரபலம். பட்டு வளர்ப்பில் ஈடுபடுகிறவர்கள், பட்டுப் பூச்சிகள், கூடு நிலையில் இருகிறபோது விற்பனைக்குக் கொண்டு வருகிறார்கள். அந்த மூட்டைகளிலிருந்து சாக்கை தரம் பார்த்து, விலை நிர்ணயம் செய்வதற்காக, ஒரு கையளவு பட்டுப் பூச்சிக் கூடுகள் எடுக்கப்படும். அவற்றின் முனைவெட்டப்பட்டு, தரம் பரிசோதிக்கப்படும். இவற்றிலிருந்து பட்டு எடுக்க முடியாது என்பதால், குப்பைக்குத்தான் போகும்.

ஆனால், நாங்கள், பட்டு வளர்ப்புத் துறையிலிருந்து அத்தகைய வீணான கூடுகளை வாங்கி வந்து சுத்தப் படுத்தி, கைவினைப் பொருட்கள் செய்யப் பயன்படுத்துகிறோம். இதற்காகப் பெண்கள் சுய உதவிக் குழுக்களுக்குப் பிரத்யேகமாகப் பயிற்சி அளித்திருக்கிறோம். அதன் பயனாக இன்று சுமார் நூறு பெண்கள், மாதம் இரண்டாயிரம் ரூபாய் வரை சம்பாதிக்கிறார்கள்'' என்கிறார்.

— பாரதி



திருஅண்ணாமலைக்கு வாருங்கள்! வாழ்வில் ஆனந்தம் பெறுவீர்கள்!

"அன்னம் பாலிக்கும் அருள்மிகு பௌர்ணமி மிகச் சக்திவாய்ந்த ஐப்பசி பௌர்ணமியே - சித்தர் வாக்கு

அடிமுடிகாணா அனற் பிழம்பாய் எம்பெருமான் அண்ட சராசரம் முழுவதும் அடிஎடுத்து நின்ற மாதம் - கார்த்திகையே!"

# இப்புனிதமான ஐப்பசி, கார்த்திகை பௌர்ணமிகளில் தீபத்திருநகர் திருஅண்ணாமலையில் அன்னதானம் செய்ய அன்புடன் அழைக்கிறோம்!

**பேரன்புடையீர்! வணக்கம். அருள்மிகு ஸ்ரீ அருணாசலேஸ்வரர் தங்களுக்கு அனைத்து நலன்களையும் தந்தருளப் பிரார்த்திக்கிறோம்.**

## ஆன்மீக அன்னதான அறக்கட்டளையின் ஐந்தாம் ஆண்டில் தொடர்ந்து அன்னதான சேவை!

● உலக சிருஷ்டியின்போது முதன்முதலில் உருவான தாவரம் நெல். இவ்வளவு மகிமை பொருந்திய நெல்லை அம்பிகையின் அவதாரமான ஸ்ரீ ஆதாடேவி முதலில் ஏற்றுக்கொண்டாள். அதைப் பிரபஞ்சத்தில் உள்ள அனைத்து ஜீவராசிகளும் உண்ணும் உணவாக மாற்ற நெல்மணி முனையில் அன்னை வித்தையும் புரிந்தாள். திருஅண்ணாமலையார் ஆலயத்தில் அம்பிகை தவம் புரிந்த இடமே "வாரண தரிசனம்" என்றழைக்கப்படுகிறது. எம்பெருமானின் திருவருட்சக்தியால் 'அந்த அக்னி' மூலம் நெல்மணிகளை அன்னமாக்கி அந்நாளுலகம்பானாக அக்னிக்ஷேத்ரமான திருஅண்ணாமலையில் அருள்பாலிக்கிறாள். அம்பிகையே அண்ணாமலையாரை அன்னமலையாய் அபிஷேகம் செய்த திருநாள் ஐப்பசி பௌர்ணமி. கார்த்திகைப் பௌர்ணமியில் அனைத்து தெய்வங்களுமே அண்ணாமலையாரை கிரிவலம் வருகின்றனர். இப்புனிதமான இரு மாதங்களிலும் வரும் பௌர்ணமியில் கிரிவலம் வருவோர் மற்றும் தங்களால் வர இயலாதவர்கள் கிரிவல அடியார்களுக்கு அமுதளித்து அன்னதானம் செய்தால் கிரிவலப்பயன் மேலும் பன்மடங்கு பெருகும்.

தாங்கள் எதை நினைத்து அன்னதானம் செய்ய விரும்புகிறீர்கள் என்பதை தெரிவித்தால் அதன்படி நாங்கள் பௌர்ணமி அன்று அன்னதானம் செய்து பிரசாதத்துடன் ஸ்ரீ அருணாசலேஸ்வரர், ஸ்ரீ உண்ணாமுலையம்மன் படத்தையும் தங்களுக்கு அனுப்பி வைக்கிறோம்.

❖ பிறந்தநாள் ❖ திருமணநாள் ❖ முன்னோர்கள் திதி நாள் ❖ வாழ்க்கையில் உயர்வு ❖ தொழிலில் முன்னேற்றம் பெற ❖ நிரந்தர வேலை பெற ❖ கல்யாண பாக்கியம் பெற, நல்ல வரன் அமைய ❖ புத்திர/பிள்ளை பாக்கியம் பெற ❖ கணவன் - மனைவி இடையே ஒற்றுமை நிலவ ❖ கஷ்டங்களும், கடன்களும் எதிர்ப்பு இடையூறுகளும் நீங்க ❖ புதிய முயற்சிகளில் முன்னேற்றமும் வெற்றியும் உண்டாக ❖ புதிதாக தொழில் தொடங்க ❖ புதிதாக வீடு/ மனை பெற ❖ வாகன யோகம் பெற ❖ நல்ல சிந்தனை பெற ❖ சிந்தனை வளம் பெருக ❖ உடல் ஆரோக்கியம் பெற ❖ நீண்ட ஆயுள் பெற ❖ தெய்வசக்தியுடன் திகழ ❖ குடும்ப ஒற்றுமை பெற ❖ உலக ஒற்றுமை பெற ❖ சமுதாய ஒற்றுமை பெற ❖ தேச ஒற்றுமைபெற ❖ எல்லா உயிர்களும் இன்புற்று வாழவும்.

- தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.
- ரூ.500/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஒரு ஆண்டிற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.1000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.5000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் பத்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ.500, ரூ.1000, ரூ.5000 அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு காசியில் பூஜிக்கப்பட்ட ஸ்ரீ அன்னபூரணி அன்னையின் விக்கிரகமும், ஸ்ரீ அருணாசலேஸ்வரரின் வண்ணப்படமும், சிறிய அளவில் சிவபுராண புத்தகமும் அனுப்பி வைக்கப்படும்.

**★ ரூ.5000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்கள் சார்பாக, ஒவ்வொருமாதமும் பௌர்ணமி அன்று திருஅண்ணாமலையில் அன்னதானம் செய்து தொடர்ந்து பத்து ஆண்டுகளுக்கு பிரசாதமும் 'ஆன்மீகம்' மாத இதழும் தங்களுக்கு அனுப்பி வைக்கப்படும். மேலும் தாங்கள் விரும்பும்போது சந்ததியரின் முகவரிக்கும் மாற்றம் செய்து தருகிறோம். ஆன்மீக அன்பர்கள் ஒவ்வொருவரின் பூஜை அறையும் புனிதம் பெற வேண்டும் என்ற இறைசிந்தனையோடு ரூ.5000 செலுத்துபவர்களுக்கு 1024 பக்கங்களுடன் கூடிய பெரிய அளவில் உள்ள ஸ்ரீமத் பகவத்கீதை புத்தகத்தை (தமிழில்) அனுப்பி வைக்கிறோம்.**

● நன்கொடை அனுப்பும் சிவநேசச்செல்வர்கள் (Aanmeeka Annadhana Charitable Trust Chennai - 4) என்ற பெயரில் Cheque /D.D/ M.O. மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். அன்னதான திருப்பணிகளை நலம்தரும் இறைபணி சேவைகளாக 'ஆன்மீக அன்னதான அறக்கட்டளை' ஆற்றிவர தங்களது ஒத்துழைப்பை என்றும் பேரன்புடன் வேண்டுகிறோம்.



ஸ்ரீ அருணாசலேஸ்வரர்

நன்கொடைகளுக்கு 80 G பிரிவின்படி வரிவிலக்கு உண்டு.

*Cheque / D.D / M.O அனுப்ப வேண்டிய முகவரி :*

## ஆன்மீக அன்னதான அறக்கட்டளை

**AANMEEKA ANNADHANA CHARITABLE TRUST (Regd.)**

68, Nadu Street, (Opp. Sri Kapaleeswarar Temple) Mylapore, Chennai - 600 004.

Tel : 4959302 Fax : (044) 4616311 E - Mail: siva siva @vsnl.net



ஸ்ரீ உண்ணாமுலையம்மன்

**கார்த்திகை தீப பௌர்ணமியில் அன்னதானம் செய்தால் நம் உடற்பிணி உடனே நீங்கும்!**





**ஜ**ப்பான் வீதிகளில் நிறையப் பூனைகள் குறுக்கே நெடுக்கே வரும். உடனே அபசகுனமாச்சே என்று அலறிவிடாதீர்கள். அத்தனையும் அதிர்ஷ்டமய்யா அதிர்ஷ்டம்! கடைகள், உணவகங்கள், பெட்ரோல் பங்குகள் என சகல இடத்திலும் இந்தப் பூனை

• அழைக்கும் பூனைகள்...



'ஹரிகோ டாக்'



# அதிர்ஷ்ட மியாவ்!

உருவத்தைப் பார்க்கலாம். 'மெனேகி-நெகோ' (அழைக்கும் பூனை) என்ற பெயர் கொண்ட இது, ஸ்டைலாக ஒரு கையைத் தூக்கி வாடிக்கையாளர்களை 'வா' என அழைப்பதோடு, செல்வத்தையும் வரவழைக்குமாம்!

'**ஓ**-டாஃபூகு' என்ற இந்தக் கலை பொம்மை, 'ஹாப்பி உமன்' என அழைக்கப்படுகிறது. சின்னக் கண்கள் திருஷ்டியை விரட்டும். சிரித்த வாய் சந்தோஷம் தரும் என நம்புகிறார்கள். ஆசையுடன் வாங்கி வைத்துக் கொள்கிறார்கள். திருஷ்டி போயே போச்!

'**ஹ**ரிகோ டாக்' கலைப் பொருள், கர்ப்பிணிப் பெண்கள் வைத்துக் கொள்ள

விரும்புகிறார்கள். காரணம், சுகப் பிரசவத்திற்கும் அழகான, அதிர்ஷ்டமான குழந்தைகளை அடைவதற்கும் 'ஹரிகோ டாக்' உதவி தேவை என அவர்கள் பெரிதும் நம்புகிறார்களே!

''வியாபாரத்தில் மந்தமா?



• மகசூல் பொம்மை



• கல்யாண பரிசு...

தொழிலில் பிரச்னையா? கல்லா நிரம்ப மாட்டேங்குதா? 'ஃபுக்கு – சூக்' பொம்மையை வாங்கி, வையுங்க. அப்புறம் பாருங்க. பிசினெஸ் தூக்குதா இல்லையான்னு'' என்று சவாலே விடுகிறார்கள் ஜப்பானியர்கள். சாமுராய் உடை, தலையில் குடுமி முடிச்சு, என வடிவமைக்கப்பட்ட இந்த அதிர்ஷ்ட பொம்மையின் ஸ்பெஷாலிடியே முறம் போன்ற காதுகள் தான். பெரிய காது, பெரிய அதிர்ஷ்டத்தைக் கொண்டு வரும் என்பது நம்பிக்கை!

'சப்த கன்னிகள், அஷ்டலக்ஷ்மி'ன்னு நாம்ப சொல்ற மாதிரி, 'எஸ்கி_மோனோ' எனப்படும் ஏழு தெய்வங்கள் ஜப்பானில் பிரபலம். புதிதாகக் கல்யாணமான தம்பதிகள் இதைத் தான் பரிசாகப் பெற விரும்புகிறார்கள். இந்த ஏழு பேரும், ஏழு விதமான பேறுகளைத் தந்து ஆசீர்வதிக்கிறார்களாம்.

'ரேக்' எனப்படும் இந்த கலைப்பொருள், நம்ம ஊர் சோளக் கொல்லை பொம்மையேதான். பண்ணைகளிலும் வயல்களிலும்



• பெரிய காது பெரிய அதிர்ஷ்டம்

இதைக் கட்டி வைத்தால், பூமி பொன்னாக விளையும். மகசூல் மகிழ்ச்சி தரும் என நம்புகிறார்கள். தஞ்சை விவசாயிகளுக்குத் தந்து பார்க்கலாமா?

– அப்ஸரா

## மும்பை மசாலா

புயலடித்து ஓய்ந்து விட்டது என்றுதான் நினைத்தோம். மீண்டும் சலசலக்கிறதே? மனிஷா கொய்ராலா சென்று முறையிட்டதன் பேரில், தாக்கரே சாஹேப் தன் சிவசேனையை விரட்டி, 'ஏக் சோடி ஸி லவ் ஸ்டோரி' திரையிடப்பட்ட தியேட்டர்களிலெல்லாம் கலாட்டாவும் ரகளையும் செய்வித்தாரா? மேட்டர் அத்துடன் 'சுதம் சுதம்' என்று பார்த்தால்... சஷிலால் நாயர் தம் பங்குக்கு தாக்கரே தரிசனத்துக்குக் காத்துக் கிடக்கிறாரே? "ஒரு பக்கத்துக் கதை மட்டும் தெரிந்து கொண்டால்



• சச்சின் மாதிரி...

ரவீனாவும் விஜ்ஜத் அம்மாவும்

# ரவீனாவின் அப்பள அம்மா!

போதுமா? என் பக்கத்துச் சோகக் கதையையும் கேட்டுத்தான் ஆக வேண்டும்" என்று அவர் வீட்டு வாசலில் தவம் கிடக்கிறார். அப்படியும் அவர் மனமிரங்கவில்லை என்றால் 'உண்ணாவிரதம்' தான் என்கிறார் நாயர். ஆக மொத்தம், மஹராஷ்ட்ராவில், கோர்ட் தீர்ப்பைக் காட்டிலும் அதிக சக்தி, தாக்கரே தீர்ப்புக்குத்தான்.

தீர்ப்பு வழங்குவதில் மக்கள் சோடை போனதேயில்லை. பாருங்களேன். அனுகபூர் என்ற, ஒரு க்ளாமரும் இல்லாத மனிதர் நடத்திய 'அந்தாக்ஷரி' நிகழ்ச்சிக்கு, டி.வி.யில் ஒன்பது வருட காலம் டாப் ரேடிங் கொடுத்து, இடமளித்திருந்தார்கள். உச்சத்திலிருக்கும் போதே 'பைபை' சொல்வதுதான் மெச்சத் தகுந்தது என்று அவர்கள் இப்போதுதான் கடைசி நிகழ்ச்சியை நடத்தி 'சுபம்' போட்டார்கள். ஆனால் ஆஹா ஓஹோ என்று விளம்பரப்படுத்தப்பட்டு, அழகின் அரசி மாதுரி தீக்ஷித் தொகுத்து வழங்கிய 'கஹின் கஹி கோயி ஹை', 'மாட்ச

ஆயிரமாயிரம் ஆட்டோகிராஃப்களும், ஃபோட்டோக்களும் அன்புத் தொல்லைகளும், விசிறிகளின் துரத்தலும் கலந்த ஒரு வினோத உலகத்தில்...

ஃபிக்ஸிங்' நிகழ்ச்சிக்கு அதற்குள்ளேயே அதல பாதாள 'ரேடிங்க்ஸ்'; முதலில் கட்ட 44 எபிஸோடுகளுடன் மங்களம் பாடிவிடப் போகிறார்களாம். மாதுரிக்கே ஒரு மாதிரியாகிவிட்டதாம்.

ஒரு மாதிரியாக... அதாவது முன் மாதிரியாக இருப்பவர்களை கௌரவிப்பது தனிச் சிறப்புதானே? பிஸினஸ் சம்பந்தமாக வழங்கப்பட்ட அவார்டுகளில் இம்முறை, 'எகனாமிக் டைம்ஸ்' வழங்கிய "பிஸினஸ் உமன் ஆஃப் த இயர்" அவார்டைப் பெற்றது யார் தெரியுமா? மகளிர் முன்னேற்றத்திற்காக வென்றே எளிமையாக துவக்கப்பட்ட 'லிஜ் ஜத் பாபட்' நிறுவனத்தின் தலைவி திருமதி ஜெஸ்வந்தி பென் போபட். காலை நாலரை மணிக்கே துவங்கிவிடும் இவர்கள் தொழில் கூடம். நீண்ட க்யூ வரிசையில் நின்று, அப்பள மாவை வாங்கிச் சென்று, தத்தம் வீட்டில் இட்டு, உலர வைத்து மாலை திரும்பக் கொடுத்துவிட்டுப் பணம் வாங்கிச் செல்லும் ஆயிரக் கணக்கான பெண்களின் பொருளாதார விடிவுக்குக் காரணமாயிருக்கும் உதய சூரியனான 'லிஜ்ஜத்' கௌரவிக்கப்பட்டது பெண்ணினத்துக்கே பெருமைதான்! பரிசு வழங்கிய ரவீனா டாண்டன் நெகிழ்வுடன், ஜெஸ்வந்தி பெஹனை "பா" (அம்மா) என்றழைத்து, தழுவிக் கொண்டார் பிர்லா போன்ற பெரிய பிஸினஸ் சாம்ராட்களுக்கு இணையாக லிஜ்ஜத்தும் வென்றது என்றால் பெண்களுக்கு ஒரு 'ஓ' போடத்தான் வேண்டும்.

'ஓ' போட்டாலும் 'ஓ' என்று அழக் கூடிய கேசுகள் இல்லாமல் போகுமா? மும்பையிலுள்ள, பெண்களுக்கான SNDT யுனிவர்சிடி, மிகச் சிறப்பான மாணவிகளைக் கௌரவிக்க 'O' போடும் வழக்கத்தை மேற்கொண்டிருக்கிறது. அதாவது A, A+க்கும் மேலான க்ரேட் என்றால் 'O' என்று போடுவது வழக்கமாம். அண்மையில் ஹோட்டல் மானேஜ்மெண்ட்டில் மூன்று 'O'க்களை வாங்கிய பெண் ஒருத்தி, இந்த விஷயம் தெரியாமல் தனக்கு முட்டை கிடைத்திருப்பதாக எண்ணி 'ஓ' வென்று ஒப்பாரி வைக்க... விஷயத்தை விளக்கி அவரைச் சமாதானப்படுத்துவதற்குள்... ஓய்ந்து போய் விட்டதாம். 'ஓ' போலவே ஜீரோ இருப்பதால் வந்த வினை. ஒன்றைப் போலவே மற்றொன்று இருந்தால் டபுள் ட்ரபிள்தான்.





ஒன்றைப் போலவே மற்றொன்று இருப்பதால் டபுள் ட்ரபிள் என்ற விஷயம் சச்சினின் 'டபுளுக்கு, சாலப் பொருந்தும். அவர் நூறாவது டெஸ்ட் விளையாடும் இந்த வேளையில், மட்டையைத் தூக்காமலேயே, ஆயிரமாயிரம் ஆட்டோகிராஃப்களும், ஃபோட்டோக்களும் அன்புத் தொல்லைகளும், விசிறிகளின் துரத்தலும் கலந்த ஒரு வினோத உலகத்தில் சஞ்சரித்து மீண்டிருக்கிறார் வினோத் கெய்க்வாட்! சச்சினின் 'டூப்'பாக சில விளம்பரப் படங்களில் நடித்தவர் மெதுவாக மராத்திய திரைப்படம், இந்தி சீரியல், பாலிவுட் என்று ஏணிப்படிகளில் ஏறியிருக்கிறார். பெரிய ஸ்டார்களின் டூப்ளிகேட்டுகளை வைத்துக் கொண்டே, 'பாம்பே டு அலிபாக்' என்ற படமெடுக்க வேண்டுமென்பது இவரது நீண்ட நாள் கனவு!

— ஜெயஸ்ரீ ராஜ்



கலைப்பொருள் சிறப்பிதழ்

“துண்டுக் காகிதம் என்பது சாதாரணப் பொருளாகத் தெரியலாம். ஆனால் என்னைப் பொறுத்தவரை அது ஓர் அற்புதம். அதே போல் கத்திரிக்கோலும் ஓர் அரிய பொருள். இரண்டையும் வைத்து உருவாக்கப்படும் கலை வடிவம் தரும் சந்தோஷம் இருக்கிறதே அடடா... வண்ணங்களுக்குப் பதிலாக காகிதமும், தூரிகைக்குப் பதில் கத்திரியும் செயல் படுகின்றன. இதைப் படைக்கும்போது நான் தியான நிலைக்குப் போய்விடுகிறேன். அபரிமிதமான அமைதி கிடைக்கிறது” என்கிறார், பெங்களூர் பலவங்குடியிலிருக்கும் சர்வ



# தூரிகைக்குப் பதில் கத்திரி!

தேச 'கொலாஜ்' ஆர்ட் புகழ் வி. பாலு.

“இதைப் படைக்கும்போது நான் தியான நிலைக்குப் போய் விடுகிறேன். அபரிமிதமான அமைதி கிடைக்கிறது”

எழுபத்து மூன்று வயதாகும் பாலு, அரசுப் பணியில் சீனியர் பதவியிலிருந்து ஓய்வு பெற்றவர். சங்கர்ஸ் வீக்லி மற்றும், இந்தியன் எக்ஸ்பிரஸில் குழந்தைகள் பகுதிக்கென வரைந்திருக்கிறார். பல வெளிநாட்டுப் பத்திரிகைகளின் அட்டையில் இவருடைய கலை இடம் பெற்று பாராட்டு பெற்றிருக்கிறது. ரீடர்ஸ் டைஜஸ்டின் அட்டையில் இவருடைய மாஸ்டர்பீஸ் வெளிவந்ததை கௌரவமாகக் கருதுகிறார். 'அமைதி' என்ற தலைப்பில் வெளிநாட்டு அரங்குகளில் பலமுறை சொற்பொழிவுகளை நடத்தியிருக்கிறார்.

பாலுவின் மனைவி சகுந்தலாவும் ஓவியரே. சமீபத்தில் மனைவியை இழந்துவிட்ட பாலு, இருவரும் சேர்ந்து ஓவியக் கண்காட்சிகள் நடத்திய காலத்தை, நெகிழ்ச்சியுடன் நினைவு கூர்கிறார்.

தற்சமயம் பாலு 'அமைதியின் தூதுவர்கள்' என்ற கொலாஜ் ஆர்ட் புத்தகத்தை வெளியிடும் பணியில் மும்முரமாயிருக்கிறார். இப் புத்தகத்தில் ஆதிசங்கராவிலிருந்து மாதா அமிர்தானந்தமயி வரை அத்தனை உருவங்களையும் கொலாஜில் படைத்திருக்கிறார். கூடவே அமைதியைப் பற்றிய அவர்களின் அருளுரையும்.

— லதா சேகர்



இந்த வாரம் கபப் பிரக்ருதிகளின் அடிப்படை குணங் களைப் பார்ப்போம்.

கப தத்துவம் கொண்டவர்களின் அங்கங்கள் பளபளப் பாகவும், மிருதுவாகவும் இருக்கும். சுக்ல தாது நிறைந்து காணப்படுவதால், சந்தான விருத்தி உண்டு. சரீரம் கனத்து பருமனாக இருக்கும். கபத்தின் மந்த குணத்தால் ஆகாரம், விகாரம், பேச்சு, செய்கை எல்லாவற்றிலும் மந்தகதியே (slow) காணப்படும். இவர்களின் தலைமுடி அடர்த்தியாகவும்,




## தேவமருந்து - 8

டாக்டர் எல். மகாதேவன்

# எதையும் தாங்கும் இதயம்!

நகங்கள் திடமாகவும், கண்கள் பெரியதாகவும் இருக்கும். பெண்களின் மாதவிடாய் சீரானதாக, குறைவாக இருக்கும்.

எந்தக் கால நிலையும் இவர்களுக்கு ஒத்துப்போகும். இவர்களின் நாடித் துடிப்பு மெதுவாகக் காணப்படும். ஆழ்ந்த உறக்கம் கொண்டவர்கள். ஜீரணசக்தி நன்றாக இருக்கும். தேவைக்கேற்றவாறே பேசும் தன்மைகள் கொண் டவர் உடலுறவில் ஸ்திரத்தன்மைக் கொண்டவராக இருப் பர். இவர்களுக்குக் கோப தாபங்கள் ஏற்படுவதில்லை. உறுதி, திடத்தன்மை, பொறுமை, தெளிவு போன்ற குணங்களும், உறுதியான உடலும் உடையவர். பசி, தாகம் குறைந்த அளவில் இருக்கும். வியர்வை அதிகமிராது. தெளிவான பார்வையும், அழகிய முகத்தோற்றமும், கம்பீரமான குரலும் கொண்டிருப்பர். பொதுவாக இவர்கள் பலசாலிகளாகவும், சாந்த குணமுள்ளவராயும், தேஜஸ்வீயராகவும், படிப் பாளியாகவும், தீர்க்க ஆயுள் உள்ளவராயும் இருப்பர். மந்த குணத்தால் தமோ குணமாகவோ, ஸ்திர குணத்தால் ஸாத்வீகமாகவோ இருப்பர். எனவே அதிக நித்திரை

இவர்கள் அழகிய முகத்தோற்றமும் கம்பீரமான குரலும் கொண்டிருப்பார்கள்.

உள்ளவர்கள். இவர்களுக்கு கபத் தன்மையுள்ள நோய் வந்தால் கடுமையாகப் பாதிக்கும். விரைவில் குணமடையாது. பொறுமை குணம் மிக்கவர், எதையும் தாங்கும் இதயம் கொண்டவர்கள்.

வாத, பித்த பிரக்ருதியாளர்களைப் போல இவர்கள் உணர்ச்சிகளையும் ஆசைகளையும் வெளிப்படுத்த மாட்டார்கள். ஆனால் உணர்ச்சிகள் கிளம்பிவிட்டால் இவர்களால் அதைக் கட்டுப்படுத்துவது சிரமம். மன உறுதி படைத்தவர்கள். கிடைத்ததைக் கொண்டு திருப்திப் பட்டுக் கொள்வார்கள். மாற்றம் என்பது இவர்களைப் பொறுத்த மட்டில் தேவையில்லாதது.

## கபப் பிரக்ருதியின் ஆகாரங்கள்

### உண்ணத் தகுந்தவை:

துவர்ப்பு, கசப்பு, காரம் சுவையுள்ள ஆகாரங்கள்

பார்லி, கொள்ளு

உலர்ந்த பழங்கள், ஆப்பிள், அத்தி

கத்திரிக்காய், முள்ளங்கி, பீன்ஸ், பூண்டு, வெண்டைக்காய், கீரைகள், சோளம், இஞ்சி

பெருங்காயம், பெருஞ்சீரகம், ஓமம், கிராம்பு, மிளகு.

### தவிர்க்க வேண்டியவை

இனிப்பு, புளிப்பு, உப்புச் சுவையுள்ள ஆகாரங்கள்

எண்ணெயில் வறுத்தவை

தக்காளி, உருளைக் கிழங்கு, மாமிசம்

நெய், தேங்காய்

அரிசி, கோதுமை, தேன், பால் (குறைவாகப் பயன்படுத்தலாம்) மற்றும் பகல் உறக்கம், அதிக ஓய்வு போன்றவற்றைத் தவிர்த்தல் நன்று.

### வரும் நோய்கள்.

தோல் அரிப்பு, உடல் பருமன், உடலில் வீக்கம், உணவு செரியாமை, இருமல், சளி இருதயம், கொழுப்பு சம்பந்தப்பட்ட நோய்கள் வரும்.

### நோய் தவிர்க்கும் வழிகள்:

உடற்பயிற்சி செய்வதும், பகல் தூக்கத்தைத் தவிர்ப்பதும் நல்லது.

அடுத்தவாரம் இரட்டைத் தன்மைகள் கொண்ட பிரக்ருதிகளின் விசேஷ குணங்கள் பற்றிச் சொல்லவிருக்கிறேன்.

## தேவமருந்து - 5

வினா: உடல் மன கூறு 'mind body' டைப்னு சொல்றதை, ஆயுர்வேதம் என்னவென்று குறிக்கிறது?

விடை: ப்ரக்ருதி

சரியான விடையை, விரைவாக எழுதி அமரர் கல்கி புத்தகங்களைப் பரிசாகப் பெறுபவர்கள்:

கே. காமாட்சி,
புது எண் 20, பழைய எண் 27/1
சங்குவார் அக்ரஹாரம் தெரு,
சிந்தாதிரிப்பேட்டை,
சென்னை - 600 002.

எம். வெங்கடேஸ்வரன்,
9, சத்தியமூர்த்தி தெரு,
திருநெல்வேலி டவுன் - 627 006.

B. பரத்குமார்,
22/53.P.M. செட்டி தெரு,
சைதாப்பேட்டை,
வேலூர் - 632 012.

T.R. சுந்தரேசன்,
ஃபிளாட் எண் 3,
ஆனந்த் அப்பார்ட்மெண்ட்,
பழைய எண் 41, புதிய எண் 29,
சுப்பிரமணியம் தெரு,
அபிராமபுரம், சென்னை - 18

பூரணி. அருளாளன்,
கோல்டன் டைலர்ஸ்,
1, முனிசிபல் பில்டிங்கஸ்,
ஆற்காடு ரோடு,
வேலூர் - 632 004

நவராத்திரி
பண்டிகை நாட்களில்

# நவராத்திரி கொலுப்படிகள்

மற்ற நாட்களில்



எங்களிடம் உயர்ரக ஸ்டீல்
கொலுப்படிகள் உங்களது
தேவைக்கேற்ப 7 படிகள்
5 படிகள், 3 படிகள்
அளவுகளில் கிடைக்கும்.
சுலபமாக பிரித்து
பொருத்ததக்கது.



**இவ்வருட ஸ்பெஷல் : ஸ்டெய்ன்லெஸ் ஸ்டீல் கொலுப்படிகள் கிடைக்கும்.**

**FREE** ஒவ்வொரு செட்டுடனும் ஸ்பேனர் மற்றும் பிட்டிங் மேனுவல் கிடைக்கும்.

## ESSAR ENGINEERING INDUSTRIES

645/C, Poonamallee High Road, Aminjikarai, Chennai - 600 029.

Phone : 6260350, 6209251





# S.V.முதியோர் இல்லம்



இங்கு முதியோர்களுக்கு இலவச மருத்துவமனை, ஆரம்பிக்கப்பட்டு அனைவரையும் தனித்தனியாக பரிசோதனை செய்து, உடல் ஆரோக்கியம் கண்காணிக்கப் படுகிறது. படுத்த படுக்கை யில் உள்ள முதியோர்கள் அனைவரையும் 24 மணி நேரமும் நர்சகளும், உதவியாளர்களும் கவனித்துக் கொள்கிறார்கள். எமர்ஜென்சி உபகரணங்கள் உள்ளன.

மனச்சிதைவு, மனவளர்ச்சி குன்றிய முதியோர்கள் மற்றும் எல்லா வயது ஆண்/பெண் நோயாளிகளுக்கென்று தனி இல்லம் மருத்துவ வசதியுடன் செயல்பட்டு வருகிறது.

எல்லா வயது உட்பட்ட அதிக பட்ச மனநோயால் பாதிக்கப்பட்ட நோயாளிகளுக்கு (ஆண், பெண் இருபாலரும்) சிறப்பு பாதுகாப்பு வசதியுடன் முற்றிலும் இலவச மருத்துவ வசதியுடன் தனித் தனி இல்லம் செயல்படுகிறது.

உங்கள் பிறந்த நாள் மற்றும் சிறப்பு நாட்களில் நீங்கள் அளிக்கும் ஒரு சிறிய நன்கொடைத் தொகை எங்கள் இல்லத்தில் உள்ள முதியோர்கள் மருத்துவ வசதிக்கு பயன்படுத்துவதுடன், அவர்கள் வாழ்க்கையை காப்பாற்றிய நல்லாசி உங்கள் குடும்பத்திற்குக் கிடைக்கும் மிகப் பெரிய பரிசாகவும் அமையும்.

*முதியோர் சேவை பெரியது!*

நன்கொடைக்கு வருமானவரி விலக்கு (80G, Income Tax Excemption) உண்டு

## S.V. HOME FOR AGED

# 50 / 88, Panchali Amman Kovil Street, (Near Arumbakkam Post Office)
Arumbakkam, Chennai - 600 106
Tel. Off: 475 5700, 475 1356, 475 5799
Cell No. : 98400 84363
Email: svhome1rediffmail.com

அவனுடைய வீடும், அலுவலகமும் நகரத்தின் வெவ்வேறு விளிம்புகளில் இருந்தன. இரண்டுக்கும் இடையே மிகச்சரியாக ஒன்பது கிலோமீட்டர்கள்.

அவனுக்கு வீட்டை ரொம்பவும் பிடிக்கும். பிரதான சாலையை ஒட்டியும், ஒட்டாமலும் சற்றே உள்தள்ளி இருந்த சுகமான வீடு. தோட்டமும், டென்னிஸ் கோர்ட்டும், நீச்சல் குளமுமாய்ப் பளபளக்கிற வீட்டுக்கு வாடகையும் அதிகம். ஆனால் நான்கு நண்பர்களோடு வீட்டைப் பகிர்ந்து கொண்டிருந்ததால் செலவு பெரிதாய்த் தெரியவில்லை.

**லாவண்யா**



# ஒன்பது கிலோ மீட்டர்களும் நிலையற்ற மனசும்!

**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட வைட்டமின் சிறுகதை - 3**

அந்த வீட்டில் பகலில் கூட இருட்டும், வெளிச்சமும் சமவிகிதத்தில் பரவியிருக்கும். பால்கனியில் நாற்காலியைப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தால் காற்று, செல்லமான காதலியைப் போல தலையைக் கலைத்து விளையாடும். நூறு அடி தூரத்தில் தெரிகிற பரபரப்பான நெடுஞ்சாலையில் இடைவெளியின்றி விரைகிற பேருந்துகளையும், மனிதர்களையும் வேடிக்கைப் பார்த்தபடி சோம்பலாய் அங்கே உட்கார்ந்திருப்பது தனிச் சுகம்!

அவனுடைய அலுவலகமும் பிரமாதமானது. அமெரிக்க நிறுவனம் ஒன்றின் இந்தியக்கிளை என்பதால் செலவைப் பற்றிக் கவலைப்படாமல் பணத்தை வாரி இறைத்திருந்தார்கள். அலுவலகத்தில் அவனுக்கு நல்ல பெயர் இருந்தது.

அடுத்த வருடத்துக்குள் அவன் மேனேஜர் வட்டத்துக்குள் சென்று விடுவான் என்பதற்கான அடையாளங்கள் தெரியத் தொடங்கியிருந்தன. மூடிய கதவுகளோடு அவனுக்குத் தனி அறை கிடைத்திருந்தது. சிறிய அறைதான், ஆனால் தனி அறை. கதவை அடைத்துவிட்டுக் கணினி யோடு ஐக்கியமானால், யாரும் தொந்தரவு செய்வதற்கு இல்லாமல் செயற்கைக் குளிரில் நிம்மதியாய் வேலை பார்க்கலாம். அது சலிக்கிறபோது ஜன்னலைத் திறந்து தோட்டத்தையும், பறவைகளையும், வெய்யிலையும் கூட வேடிக்கை பார்க்கலாம். அவனை கசக்கிப் பிழியாமல், அதேசமயம் சும்மா உட்கார்ந்திருக்கவும் விடாமல் - பூனை தன் குட்டியை வாயில் மென்மையாய்க் கவ்விக் கொண்டு போவதைப் போல _ அவனை வேலைவாங்கிக் கொண்டிருந்தது அவன் நிறுவனம். நல்ல சம்பளம், குறை சொல்ல முடியாத வேலை.

ஆனால் எதனாலோ கொஞ்ச நாளாய் அவனுக்குள் ஒரு சலிப்பு ஏறிக் கொண்டிருந்தது. பசுஞ்சோலைகளுக்கு நடுவே ஓடுகிற அழுக்குச் சாக்கடைபோல எதுவோ அவனுக்குள் புகுந்து குறுக்கிட்டு தொந்தரவு செய்வதை அவனால் உணர முடிந்தது. ஜிக்-சாப் புதிரில் ஒரு துண்டு மட்டும் விடுபட்டது போன்ற ஒரு முழுமையற்ற எண்ணம், குறையொன்றும் இல்லை என்று சொல்லிக் கொண்டிருந்த நிறைவான வாழ்வின் இடையே நுழைந்து கொண்ட சிறு உறுத்தல். நிதானமாய் யோசித்துப்பார்த்தபோது வீட்டுக்கும், அலுவலகத்துக்கும் இடையே யான ஒன்பது கிலோமீட்டர்கள் பயணம் தான் இதற்குக் காரணம் என்று தோன்றியது.

இரண்டு பெரு நகரங்களை இணைக்கிற ரிங் ரோட்டில்தான் அவன் தினமும் பயணம் செய்து வந்தான். அவனிடம் ஒரு நீல நிற சுஸுகி இருந்தது. அதை வாங்கி ஒன்றிரண்டு வருடங்கள்தான் ஆகியிருக்கும் என்பதால், வண்டியில் எந்தப் பிரச்னையும் இல்லை. ஒழுங்காய் பெட்ரோல் போட்டால் களைப்பில்லாமல் ஓடிக் கொண்டே இருக்கும். எந்த வளைவுகளும் இல்லாத நீளமான சாலை, இடையில் ஒன்றிண்டு டிராஃபிக் சிக்னல்கள் மட்டும் உண்டு. மற்றபடி எந்தத் தடையும் இல்லாமல் போய்க் கொண்டே இருக்கலாம். அதிகம் பயன்படுத்தப்படாத சாலை என்றாலும், அவன் கவனமாய் வண்டி ஓட்டுகிறவன் என்பதால், அந்த ஒன்பது கிலோ மீட்டர்களைக் கடப்பதற்கு அவனுக்கு தினமும் முப்பத்தைந்து நிமிடங்கள் ஆயின. காலையில் முப்பத்தைந்து, மாலையில் முப்பத்தைந்து... ஒரு மணி நேரத்துக்கும்மேல் பயணத்தில் கழிக்க வேண்டியிருந்தது.



'வாழ்க்கை என்றால் மேடும், பள்ளமும் வேண்டாமா? எல்லா தினங்களும் அச்சடித்த நோட்டீஸ் காகிதங்கள் போல ஒன்றையொன்று ஒத்திருந்தால், அடுத்த தினத்தை எதற்காக எதிர்பார்ப்பது' என்கிற கேள்வி அவனைத் தின்று கொண்டிருந்தது. 'நாளைக்கும் இதே மாதிரி, நாளை மறுநாளும் இதே மாதிரி, எல்லா நாளும் ஒரே மாதிரி, எதற்கு இந்த வெறுமனே தினம் கழிக்கிற

வாழ்க்கை?"

ஒரு நாள் ராத்திரி நண்பர்களோடு இருக்கும்போது இதைப்பற்றி சொன்னதும் ஒருவர் பாக்கியில்லாமல் சிரித்தார்கள். "எல்லாரும்தான் ஆஃபீசுக்கு பைக்ல போறாங்க. உனக்கு மட்டும் என்னடா பெரிய சலிப்பு?" என்று பொய்க்கோபமாய் அடிக்க வந்தான் ஒருவன். அவர்களுக்குப் புரியும்படி விளக்கத் தெரியவில்லை அவனுக்கு. 'எல்லா நாளும் ஒரே மாதிரி இருந்தா சலிப்பா இருக்குடா' என்றுதான் மீண்டும் மீண்டும் சொல்ல முடிந்தது அவனால். 'ஒவ்வொரு தடவை அந்த ரோட்ல போகும்போதும், நிலையில்லாம மனசு ஊஞ்சலாடிக்கிட்டே இருக்கிற மாதிரி இருக்கு.'



"நம்ம இலாகா மேல கபாலிக்கு அக்கறை இருக்கு!"

"அப்படியா?"

"தொப்பையக் குறைச்சுட்டு வந்தாதான் அடுத்த மாச மாமூல்னு கண்டிச்சு சொல்லிட்டான்னா பாருங்க!"

— அம்பை தேவா

சேகர் ஓரளவு நியாயமாய்ப் பேசினான். "ஆஃபீசுக்குப் பக்கத்தில் ஒரு நல்ல வீடா பார்த்துட்டுப் போயிடேன்", யாரும் அந்த யோசனைக்குப் பதில் சொல்லவில்லை. ஐந்து பேரும் ஒரே குடும்பமாய், சமைத்து, சாப்பிட்டுக் கொண்டு நாலு வருடமாய் இருந்தாயிற்று, பிரிவது என்ற எண்ணமே கஷ்டமாய் இருந்தது. சேகர் தொடர்ந்து சொன்னான், "எங்க எல்லாருக்கும் ஆஃபீஸ் இந்த வீட்டிலிருந்து பக்கம். நீ மட்டும்தான் இத்தனை தூரம் ட்ராவல் பண்றே. எங்களுக்காக உன்னைக் கஷ்டப்படுத்தறமோன்னு உறுத்தலா இருக்குடா!"

அவன் அவசரமாய்ச் சொன்னான், "அப்படி எதுவும் இல்லை சேகர், ஒன்பது கிலோ மீட்டர்ங்கறது பெரிய தூரமே கிடையாது, அதுக்காக நான் இந்த வீட்டைவிட்டுப் போக விரும்பலை."

"பின்னே என்னதான் பண்ணலாம்ங்கறே?"

"தெரியலையே?" அவன் நிஜமான பரிதாபத்துடன் சொன்னான். காரணமில்லாமல் கண்ணில் சட்டென்று நீர் துளித்து விட்டது.

மறுநாள் காலை ஆஃபீசுக்குக் கிளம்பும்போது வீட்டின் எதிரிலிருந்து பஸ் ஸ்டாப்பில் மோகனைப் பார்த்தான். "ஹலோ சார்" என்று காலை மலர்ச்சியோடு கையசைத்தான் அந்தச் சிறுவன். வெண்மையான பளிச் உடை. பள்ளி மாணவர்களுக்கு வெள்ளையைச் சீருடையாய்த் தேர்ந்தெடுத்தவர்களைக் கும்பிட வேண்டும் என்று தோன்றியது. என்ன ஒரு மதிப்பான தோற்றத்தை உண்டாக்கிவிடுகிறது!

நின்று பேசுவதற்கு இருவருக்கும் நேரமில்லாமல் ஒரு புன்னகையோடு விரைய வேண்டியிருந்தது. ஆனால் அன்றைய பயணம் முழுக்க அவன் மோகனைப் பற்றியே யோசித்துக் கொண்டிருந்தான். ரொம்பவும் வறுமையான குடும்பம். உடம்பு சரியில்லாத அப்பா, வேலைக்குப் போகும் அம்மாவும், அக்காக்களும், கல்யாணம் பண்ணிக் கொடுப்பதற்கு வீட்டில் மூன்று பெண்கள் என்று இவனுக்குப் பின்னாலும் ஒரு சினிமாவுக்குரிய சோகக்கதை இருந்தது. ஆனால் அந்தச் சூழலிலும் படிப்பை நிறுத்த மாட்டேன் என்று அவன் பிடிவாதமாய் இருந்ததுதான் வித்தியாசம். பள்ளி நேரம் போக, மீதமிருந்த நேரங்களில் என்னென்னவோ வேலைகள் செய்வதாகச் சொன்னான் அவன். குழந்தைத் தொழிலாளர் பிரச்னை ஆக்கிரமிக்காத இடங்களிலெல்லாம் அவனுக்கு வேலையும், அவன் குடும்பத்துக்குக் கொஞ்சம் நிதியளவில் நிம்மதியும் கிடைத்துக் கொண்டிருந்தது.

மாலையில் மறுபடி மோகனைப் பார்க்க நேர்ந்தது. 'ஜெயநகர் கிளப்பில் யேசுதாஸ் கச்சேரி இருக்கே; போகலாம்' என்று யோசித்தபடி, அலுவலகத்தைவிட்டு வெளியே வந்தபோது, எதிர்சாலையில் மோகனைப் பார்த்தான்.

மனம் எல்லையில்லாமல் எங்கெங்கோ அலைபாய்ந்து கொண்டிருந்தது. எல்லா

சுழல்களுக்கும் நடுவில் ஸ்கூல் பேகோடு மோகன் நின்று சிரித்தான். அவன் ஏன் இங்கே வந்தான்? என்ன விஷயமாய் வந்தான்? தினமும் வருகிறானா, எதற்கு வருகிறான்? ஒரு வேளை அவனுடைய ஸ்கூல் இந்தப் பக்கத்தில்தான் இருக்கிறதோ? தன் ஆஃபீசுக்கு அருகில் ஏதேனும் பள்ளிகள் இருக்கிறதா என்று தீவிரமாய் யோசித்துப் பார்த்தான் அவன். அலுவலகக் கட்டிடத்தையும், ஒரு ஹோட்டலையும், சினிமா தியேட்டரையும், குறைந்தது நான்கு நிமிடங்கள் காத்திருக்க வைக்கிற பெரீ...ய டிராஃபிக் சிக்னலையும் தவிர்த்து வேறெதுவும் ஞாபகத்துக்கு வரவில்லை. இத்தனைக்கும் நாலு வருஷமாய்ப் புழங்குகிற இடம், கடவுளே, சேணம் கட்டிய குதிரைபோல ஆஃபீசைத்தவிர வேறெதையும் கவனிக்காமல் இருந்துவிட்டேனோ!

மறுநாள் காலை அவன் வண்டியைத் துடைத்துக் கொண்டிருந்தபோது மோகன் வந்தான். "குட்மார்னிங் சார்" என்றான் எப்போதுமான சிரிப்புடன்.

"ஹலோ மோகன்" என்றான் அவன் உற்சாகமாய். ஆனால் துடைத்த துணியை வண்டியின் முன்னால் செருகிவிட்டு மோகனைப் பார்த்தபோது முன்பில்லாத ஓர் அந்தரங்கம் இருவருக்கும் இடையே புகுந்து கொண்டதுபோல் பேசுவதற்குத் தயக்கமாய் இருந்தது.

மோகன்தான் முதலில் அதை உடைத்தான். 'நேத்து பஸ்ஸுக்கு லேட்டாயிடுச்சு சார்' என்றான் மன்னிப்புக்கோரும் மெல்லிய குரலில். கன்னடம் கலந்து உடைந்த தமிழ்.

"அதனாலென்ன, பரவாயில்லை."

மோகன் மீண்டும் பேசினான், "உங்க ஆஃபீஸ் அங்கதான் இருக்கா சார்?"

"யெஸ்", அவன் தலையசைத்தான்.

"சார், ஒண்ணு கேட்கணும், தப்பா, ரைட்டா தெரியலை" என்றான் மோகன்.

அவன் வியப்போடு, 'தாராளமா கேளு மோகன், நான் எதும் தப்பா நினைச்சுக்க மாட்டேன்" என்றான்.

"சார், எங்க ஸ்கூலும் அங்க பக்கத்தில் தான் இருக்கு. தினமும் காலையிலமட்டும் நான் உங்களோட பைக்ல வரலாமா?" என்றான். அவன் சற்றும் எதிர்பார்த்திராத கோரிக்கை, என்ன பதில் சொல்வது என்று தெரியாமல் ஆச்சரியத்தோடு அவன் நின்றிருந்தான். அந்த மௌனத்தைத் தப்பாய்ப் புரிந்து கொண்ட மோகன் அவசரமாய், "கண்டிப்பா ஈவினிங் உங்களை டிஸ்டர்ப் பண்ண மாட்டேன் சார், காலையில் மட்டும்தான், கரெக்ட் டைம்க்கு பஸ் கிடைக்கறது ரொம்ப கஷ்டமா இருக்கு சார், அப்படியே வந்தாலும் ரொம்ப கூட்டம், நெரிசல், யூனிஃபார்ம் டிரஸ்ஸெல்லாம் வீணாயிடுது, ஸ்கூல்ல பசங்க கிண்டலடிக்கறாங்க" என்று தலைகுனிந்து கொண்டான்.

அவன் சிந்தனைகளிலிருந்து விடுபட்டு, புன்னகையோடு மோகன் தோள்களில் தட்டினான். "நீ தாராளமாகத் தினமும் என் கூடவே வரலாம் மோகன், எனக்கு நோ ப்ராப்ளம்" என்றான்.

மோகன் மறைக்க முடியாத சிரிப்போடு



"போருக்கு வேண்டிய ஏற்பாடுகள் எல்லாம் தயார் நிலையில் இருக்கிறதா அமைச்சரே!?"

"ஆம் மன்னவா.. அஞ்சாறு வெள்ளைக் கொடிகள் கூட ரெடி பண்ணிட்டேன்!"

— புளியறை கணேசன்

அவனைப் பார்த்து, "தேங்க்ஸ் சார்" என்றான். அதில் திருப்தியடையாதவனாய் இன்னும் இரண்டுமுறை நன்றிகள் சொன்னான். குடுகுடுவென்று படியோரத்துக்குச் சென்று அவனுடைய ஸ்கூல் பையை எடுத்துத் தோளில் மாட்டிக் கொண்டபடி ஓடிவந்து வண்டியில் ஏறி அமர்ந்தான். "போலாம் சார்!" வண்டி உற்சாகமாய் கேட்டைக் கடந்து சாலையைச் சேர்ந்தது.

கொஞ்ச தூரம் போவதற்குள் அவனும், மோகனும் மகிழ்வாய் என்னென்னவோ கதைகள் பேச ஆரம்பித்திருந்தார்கள். அவனுக்குள் தேர், மெல்ல நிலைக்கு வந்திருந்தது. ○

விண்ணிலிருந்து மண்ணுக்கு வந்த தேவதை!

- இப்படித் தைரியமாய் காம்ப்ளிமெண்ட் தரலாம், காலாட்படை கதாநாயகி விதுவுக்கு. யெஸ்! சிங்கப்பூர் ஏர்லைன்சில், விமானப் பணிப் பெண்ணாக இரண்டு வருடம் உலகம் பூராவும் சுற்றிக் கொண்டிருந்த சேலத்துத் தமிழ்ப் பெண் இந்த விது. புதுமாதிரியாய் ஒரு பெயர்? "அம்மா அப்பா ஆசையா வெச்ச பெயர் வித்யா. சினிமாவுக்காக இதை மாத்திக்கணும்னு சொன்னாங்க. அதெல்லாம் முடியாது. வித்யாங்கிற என் பெயரை விதுன்னு வேணும்ன்னா மாத்திக்கிறேன்னு சொன்னேன். ஓகே சொல்



# ஆகாயத்தில் ஆட்டோகிராப்!



விட்டாங்க... ஒருகால் பெயரை மாத்தியிருந்தா... புதுப் பெயரில் யாராவது என்னைக் கூப்பிட்டு, யாரையோ கூப்பிடுறாங்கன்னு நான் கண்டு கொள்ளாமல் போயிட்டு எவ்வளவு கஷ்டம் பாருங்க..." என்று தெளிவான தமிழில் பேசுகிறார் எத்திராஜில் பி.ஏ. இங்கிலீஷ் படித்த வித்யா.

"விமானப் பணிப்பெண் வேலையில் கை நிறைய ஊதியம், உலக நாடுகளை ஓசியில் சுற்றிப் பார்க்கும் வாய்ப்பு இதையெல்லாம் தியாகம் பண்ணிட்டு எப்படி சினிமாவுக்கு வந்திங்க?" என்றால், "ஒருமுறை மும்பை டு சிங்கப்பூர் டிரிப்லே எனக்கு ட்யூட்டி. அந்த விமானத்தில் ஷாருக்கான், கஜோல் டிராவல் பண்ணினாங்க... அவங்க இரண்டு பேர்கிட்டேயும் ஆட்டோகிராப் வாங்கி, ஒரு வார்த்தையாவது பேசணும்கிற ஆசையில், பல பயணிகள் அவங்களைச் சூழ்ந்துட்டாங்க... அப்போதான் சினிமாவுக்கு இவ்ளோ சக்தியிருக்கான்னு தெரிஞ்சுக்கிட்டேன். தவிர உலகம் முழுக்க சுத்தினது ரொம்ப போரடிச்சுடுச்சு. அடுத்து என்னன்னு யோசிச்சப்போ சினிமா சரின்னு தோணுச்சு... வந்துட்டேன். நானும் ஒரு நல்ல நடிகைன்னு பேரெடுத்து நடுவானில் ஆட்டோகிராப் போடுவேன்" என்கிறார் விது!

"உலகம் முழுக்க சுத்தினது ரொம்ப போரடிச்சுடுச்சு. அடுத்து என்னன்னு யோசிச்சப்போ சினிமா சரின்னு தோணுச்சு... வந்துட்டேன்."

பஞ்சதந்திரம் படத்தில் ஸ்ரீமனுக்கு ஜோடியாக அறிமுகமான விதுவுக்கு, அந்த ஒரு பட அனுபவமே நடிப்பு பற்றி தெரிந்து கொள்ள இலவச பயிற்சி பட்டறை மாதிரி இருந்ததாம். "கிளாமரா நடிக்கிறது இப்போ சர்வ சாதாரணமாகி விட்டது... அப்படி நடிப்பதில் எனக்கு நம்பிக்கையில்லை... சரோஜாதேவி, சாவித்ரி மாதிரி ஹோம்லி இன்னோசண்ட் பாத்திரங்களில் வெளுத்து வாங்கணும் என்கிறார் விது.

- ஸ்ரீ சக்கரம்

அண்மையில், அமெரிக்காவில் காலமானார் இசைக் கலைஞர் டி. விச்வநாதன். வீணை தனம்மாள் பாணி சங்கீத பரம்பரையின் அரிய வாரிசாக இறுதிவரை இருந்தவர். அதன் ஒசிந்திருக்கும் கமகங்களை மிக இயல்பாகப் புல்லாங்குழலுக்குள் புகுத்தி குழலிசையில் தன்னிகரற்று விளங்கியவர். கர்னாடக சங்கீதத்தின் மதிப்பையும் மதிப்பீடுகளையும் கட்டிக்காத்த அதே



• டி. விச்வநாதன்

விச்வா —
சில நினைவுகள்

# இசையே சுவாசமாய்...

நேரத்தில் திறந்த மனத்துடன் அதன் எல்லைகளை விரிவுபடுத்திய சாதனையாளர். அவருடன் பழகிய ஸ்ரீராம் பரசுராமும், அநுராதா ஸ்ரீராமும் நம்மிடம் பகிர்ந்து கொண்ட சில பதிவுகள்...

பாஸ்டனில் ஒரு கச்சேரி. குளிர்காலம். ஒரே பனிப் புயல். பாஸ்டன் இதற்குப் பெயர் போனது... அவருடைய மாணவர் ஏற்பாடு செய்த நிகழ்ச்சி. அவருடன், நான் வயலின், அனு பாட்டு. யாருமே அரங்கத்துக்கு வரவில்லை! காரில் பயணம் செய்வது ஆபத்தானதாக இருந்தது. நாங்கள் எப்படியோ, உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு போய்ச் சேர்ந்து விட்டோம். 'என் மாணவனுக்காக நான் செய்யும் கச்சேரி' என்று தொடங்கி விட்டார் விச்வா. கச்சேரி தொடங்கிய பிறகு இரண்டு – மூன்று பேர் வந்தார்கள். 15 – 20 நிமிடங்களுக்குப் பிறகு பார்த்தால் அரங்கமே நிறைந்திருந்தது! பல இடங்களிலிருந்தும் ரசிகர்கள் அவரது இசையைக் கேட்பதற்கென்றே வந்து சேர்ந்திருந்தார்கள்.

மிஷிகனில் ஒரு தடவை, கச்சேரிக்கு முன்னால் அவருக்கு ஆஸ்த்துமா பாதித்து. அவஸ்தைப்பட்டார். அவருடைய மனோதிடம் அந்த நோயை விரட்டி விட்ட மாதிரி, சற்று

நேரத்தில் சமாளித்துக் கொண்டு தொடங்கி விட்டார். இசையே அவர் சுவாசமானதுபோல் பிரமாதமான நிகழ்ச்சியாக அமைந்தது அன்று.

அவருடைய இசை நிகழ்ச்சிகளில் 95 சதவிகிதம் அமெரிக்க ரசிகர்கள்தாம் இருப்பார்கள். அமெரிக்கக் கலாசாரத்துக்கு உதவியவர் என்ற வகையில் அமெரிக்க ஜனாதிபதி அவருக்கு 'நேஷனல் ஹெரிடேஜ் ஃபெலோஷிப்' கௌரவம் அளித்தார். இதற்கு முன்பு, சரோட் இசைக் கலைஞர் அலி அக்பர் கானுக்கு மட்டுமே இந்த உயரிய கௌரவம் வழங்கப்பட்டிருந்தது.

அவருடைய வாழ்வின் மிகப் பெரிய சாதனை, முழுக்க முழுக்க கர்நாடக இசைக்குப் புதியவரான ஜான் ஹிக்கின்ஸை ஒரு பாகவதர் ஆக்கியதுதான். அவர் சொல்லித் தரும் முறையே அலாதியானது. 'நொட்டேஷனல் ஸிஸ்டம்' எனப்படும் இசைக் குறிப்பு முறையையே புதிதாக உருவாக்கி அமெரிக்க மாணவ மாணவிகளைத் தயார் செய்தார். எது கடினமானதோ, அதை முழு நம்பிக்கையுடன் செயலாக்கிக் காண்பிப்பதில் அவரைப் போல் இன்னொருவர் இருக்க மாட்டார்.

மத்தியானம் வகுப்பு முடிந்ததும், அவரே போனில் கூப்பிட்டு சில புதிய கீர்த்தனைகள், சில புதிய சங்கதிகள் கற்றுக் கொள்ளுங்கள் என்று சொல்லிக் கொடுப்பார், எந்தவித எதிர்பார்ப்பும் இல்லாமல்! ஒரே சமயத்தில் 4-5 கிருதிகளைக் கூடச் சொல்லிக் கொடுத்து விடுவார். நமக்குத்தான் அவற்றை கிரகித்துக் கொள்ளும் சக்தி இருக்காது!

சில வேளைகளில் பாட்டுச் சொல்லிக் கொடுக்கும் போது, சகோதரி பாலாவின் (பால சரஸ்வதி) நினைவில் மூழ்கிவிடுவார். இந்தப் பாட்டுக்கு பாலா இப்படித்தான் அபிநயம் பிடிப்பாள் என்று ஆரம்பித்து விடுவார்.

அவரோடு சில மத்தியான வேளைகளில் இருக்கும்போது, அவருடைய அரை சாண்ட்விச்சிலிருந்து பாதியை நமக்குக் கொடுத்து விடுவார். வெகு எளிமையான மனிதர்.

அமெரிக்காவில் கர்நாடக இசையை அறிமுகப்படுத்தியவர் விச்வாதான். கலிஃபோர்னியா இன்ஸ்டிட்யூட் ஃபர் ஆர்ட்ஸ் (CAL ARTS) ஆரம்பித்தவரே அவர் தான். புகழ்பெற்ற கர்நாடக இசைக் கலைஞர்களை எல்லாம் இரண்டு – மூன்று வருடங்கள் வெஸ்லியன் பல்கலைக்கழகத்துக்கு வரவழைத்து ஆசிரியர்களாகப் பணிபுரிய வைத்தவர் விச்வா.

துவஜாவந்தியில் சேதஸ்ரீ பாலகிருஷ்ணம், வேகவாகினியில் வீணா புஸ்தகதாரிணி, ஆனை அய்யாவின் 'வீதியில் லார்க்கு விரும்பினாலும் கிடைக்குமோ நமச்சிவாயம்' எல்லாம் இனி விஷ்வா பாடிக் கேட்க முடியாது என்பது பெரிய துயரம்.



* அனுராதா - பரசுராம்

அவருடைய டைனிங் ரூம், கிச்சன், படுக்கை அறை, பேஸ்மென்ட் எங்கும் ஆயிரக்கணக்கான காசட்டுகளும், புத்தகங்களும் நிறைந்து கிடக்கும். நடப்பதற்குக் கூட இடம் இருக்காது!

நவராத்திரி சமயத்தில், கச்சேரிகள் ஏற்பாடு செய்வார். அவரே இருநூறு பேருக்குச் சமைப்பார்! நாங்கள் சும்மா உதவி பண்ணுவோம், அவ்வளவு தான். வடை, பாயசத்தோடு அப்படி ஒரு விருந்து சமைப்பார். எப்படித்தான் இவ்வளவு கச்சிதமாகச் சமைக்கிறார் என்று எங்களுக்கு ஆச்சரியமாக இருக்கும். எப்போது நவராத்திரி வரும் என்று இதற்காகவே காத்திருந்து, அமெரிக்காவின் வெவ்வேறு மாநிலங்களிலிருந்து 10 மணி, 15 மணி நேரப் பயணத்தையும் பொருட்படுத்தாமல் ரசிகர்கள் வந்து சேர்ந்து விடுவார்கள்! அப்படி ஒரு கம்யூனிடி இன்வால்வ்மென்ட். பெரிய பெரிய கர்நாடக, இந்துஸ்தானி, கிராம இசை, நாதஸ்வர வித்துவான்களை அழைத்து வந்து அவர் நவராத்திரி இசை விழா நடத்துவதைப் பார்த்தால் அசந்தே போய் விடுவோம். இவ்வாண்டு கூட வெஸ்லியன் பல்கலைக் கழகத்தில் நவராத்திரி விழா நடத்த ஏற்பாடு செய்து அழைப்பிதழெல்லாம் அச்சிட்டு அனுப்பி விட்டார். சமைப்பதற்குத் தான் அவர் இல்லை. ஆனால் அங்கே நடக்கும் ஒவ்வொரு இசை நிகழ்ச்சியிலும் அவருடைய ஆசியும் ஆர்வமும் கலந்தொலித்துக் கொண்டுதான் இருக்கும்.

சந்திப்பு : **சாருகேசி**

# மறக்கலாமோ சுவாமியை?

✉ அனைத்துத் தலைப்புகளுக்கும் புதுமை செய்ததுபோல முதல்பக்கம் 'கார்மேகம்' தலைப்பை மட்டும் பிரித்துப் போட முடியவில்லையே!
சென்னை - 14, அய்யாறு வாசுதேவன்.

✉ 'பக்தி உணர்வோடு கர்மம் செய்தாலே பகவத் கிருபையைப் பூரணமாகக் கிரகிக்க முடியும்' என்ற காஞ்சிப் பெரியவரின் அருள்வாக்கு நெஞ்சில் நிறைந்தது.
மணியக்காரன்பாளையம்,
ஏ.ஜி. கல்யாணசுந்தரம்.

✉ கல்கி தலையங்கம் படித்தேன். வீரப்பனைப் பிடிக்கிற விஷயத்தில் தி.மு.க, அ.தி.மு.க இரண்டு அரசுமே, கையாலாகாதவைதான் என்பதை மக்கள் இனியாவது புரிந்து கொள்ளட்டும்.
கும்பகோணம், புலவர் எஸ்.கே. மூர்த்தி.

✉ 'அருள்வாய் நெஞ்சே' என்ற ஜெ ரமேஷ்பாபுவின் வைட்டமின் சிறுகதை மனத்தைத் தொட்டது. 'சேவை மனப்பான்மை' என்பது எப்படி இருக்க வேண்டும் என்பதை, கதாசிரியர் சொல்லாமல் சொல்லி விட்டார்.
திருச்சி-21, ஆர். அப்துல் சலாம்.

✉ 'சுற்றுச்சூழல் மாசு'க்கு 'சுபம்' போட வைத்த சுப்ரியா சாஹூவுடைய சாதனை ஒப்பிட முடியாதது. பாஸிட்டிவ் செய்திகளை நிரம்பவே தரும் கல்கிக்கு மனமார்ந்த பாராட்டு.
குட்டலாடம்பட்டி, கொ. மூர்த்தி.

✉ கவுண்ட் டவுன் உஷாவுக்கு சினிமாவில் நடிக்க விருப்பம் இல்லை என்றாலும் அவர் நடிகைக்கு உரிய தகுதியை எட்டி விட்டார் என்றே சொல்லலாம். ஆமாம். அவர் வயது பற்றிய விவரத்தை, தாமாகவே சொல்லி விட்டாரே.
இராஜபாளையம், வே. ஈஸ்வரன்




✉ டி பார்ட்டி புகழ் சுப்பிரமணிய சுவாமியை இன்றைய ஸ்பெஷல் அறுசுவை விருந்துக்கு அழைக்காமல் விட்டு விட்டது ரொம்பவும் கண்டிக்கத் தக்கது!
நெல்லையப்பபுரம், டி. செல்வன்.

✉ 'இந்த முறை விட மாட்டோம்' என்ற தேவாரத்தின் சூளுரை சிரிக்கவே வைக்கிறது. இத்தனை நாள் இவர்கள் கையை யார் கட்டி வைத்திருந்தார்களாம்?
பொன்மலை, ஆர். பிரகாஷ்.

✉ கொஞ்சம் சிரிப்பு, கொஞ்சம் நடிப்பு, மிஞ்சும் ஜொலிப்பு, விஞ்சும் பூரிப்பு - மொத்தத்தில் ஆயிரம் வாட்ஸ் பல்பு! - அட்டையைத் தான் சொல்கிறேன்...! லட்சம் பெறும் லட்சணம்!
திசையன்விளை, ஆர்.ஜி அம்பி.

✉ 'பார்த்திபன் கனவு', 'இசைக்கனவு', 'ஹீரோ கனவு' என பக்கத்திற்குப் பக்கம் கனவுகளில் சுகமாகப் புரள வைத்து விட்டீரே!
சேலையூர், கே.வி.ராமன்.



• புருஷோத்தம்

ஆறு மணிக்குத்தான் விழா ஆரம்பம். ஆனால் பாரதிய வித்யா பவன் அரங்கில் பிள்ளையாரைக் கொண்டு வந்து வைத்துப் பூப் போட்டு விளக்கேற்றுவதற்குள் ரசிகர்களும் அன்பர்களும் வர ஆரம்பித்து விட்டார்கள். ஐந்தரைக்கு 'ஜே ஜே' என்று கூட்டம் நிறைந்துவிட்டது; ஆறடிக்க சில நிமிடங்கள் முன்னதாக, விழா நாயகர்கள் பாம்பே ஜெய்ஸ்ரீயும், பி.எஸ். புருஷோத்தமும் நுழைந்தபோது ரசிகர் கூட்டம்



• விருதும் பரிசும்

# பழைய நினைவுகள்; புதிய பெருமைகள்!

சூழ்ந்து மொய்க்காமல் அவர்களைப் பாதுகாப்பாக மேடையையொட்டிய க்ரீன் ரூமுக்கு அழைத்துப் போக வேண்டியதாகி விட்டது. சரியாக ஆறு மணிக்கு, சிறப்பு விருந்தினர் கே.பி. வந்திறங்கி, இருபது வயது இளைஞரின் மிடுக்கோடு படியேறி, அரங்கினுள் நுழைய...

அமரர் கல்கியின் நூற்றி மூன்றாவது பிறந்தநாள் விழா, இளம் இசைக் கலைஞர்கள் பாம்பே ஜெயஸ்ரீ பி.எஸ். புருஷோத்தம் (கஞ்சிரா) ஆகியோருக்கு 'கல்கி விருது' வழங்கும் விழாவாக இனிதே ஆரம்பமாயிற்று.



• பாம்பே ஜெயஸ்ரீ

கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக் கட்டளையின் நிர்வாக அறங்காவலர் கி.ரா. மெல்லிய நகைச்சுவை இழையோட நிகழ்ச்சியைத் தொகுக்க, "பேஷா பாடு வாளே" என செம்மங்குடி வாயால் வாழ்த்து பெற்ற அனுஷா, இறைவணக்க மாக அமரர் கல்கியின் 'பொன் மயில் ஏறி வருவான்' பாட, கைதட்டி பார்வை யாளர்கள் மகிழ்ந்தனர். அனுஷா பெருமைகளுக்குக் காரணம் இறையருளும் பூர்வ ஜன்ம புண்ணியமும்தான், இந்தப் பெருமைகள் நீடிக்க அனைவரது நல் லெண்ணமும் ஆசிகளும் வேண்டும்' என் றதும் கச்சேரி கேட்பதற்கு முன்பே கட்டுண்டு போயிற்று கூட்டம்.

சிறப்புப் பேச்சாளரை அறிமுகப் படுத்திய கி.ரா, 'வாழ்க்கை' திரைப்படம்



• பார்வையாளர்கள்...



• பாலசந்தர்

முசிறியின் கொள்ளுப் பேத்தி, சுகுணா புருஷோத்தமனின் மாணவி என்று கி.ரா இணைப்புரையிடையே கூடுதல் தகவல் தந்தபோது அதை ஏற்கெனவே அறிந் தவர்கள் பெருமிதமும், அறியாதவர்கள் ஆச்சர்யமும் அடைந்து மகிழ்ந்தனர்.

"96 முதல், அமரர் கல்கி பிறந்தநாளை கல்கி விருது வழங்கும் விழாவாகக் கொண்டாடி வருகிறோம். இவ்வாண்டு விருது பெறும் ஜெயஸ்ரீ பற்றிப் பல வரு டங்களுக்கு முன் கல்கியில் அட்டைப் படக் கட்டுரை வெளியாயிற்று. '96ல் விஜய் சிவா விருது பெற்று கச்சேரி செய்த போது கஞ்சிரா வாசித்தவர் புருஷோத் தம்" என வரவேற்புரையில் பழைய பொருத்தங்களைச் சுட்டிக் காட்டினார் அறக்கட்டளையின் புதுமுக அறங் காவலர் லக்ஷ்மி நடராஜன்.

விருதுப் பத்திரங்களை சிதா ரவி வாசிக்க, இயக்குனர் சிகரம் கே. பால சந்தரிடமிருந்து பத்திரங்களையும் பரிசு களையும் பெற்றனர் கலைஞர்கள்.

புருஷோத்தம் சார்பாகவும் ஜெயஸ்ரீ ஆற்றிய ஏற்புரையில் 'தங்கள் வெற்றி அடைந்தபோது நடந்த நிகழ்ச் சியை நினைவு கூர்ந்தார்.

"அனைத்துப் பத்திரிகைகளிலும் அப்போது வைஜயந்தி மாலாவின் படம் வெளியாயிற்று. கல்கி துணையாசிரி யர்களும், அவ்வார அட்டைக்கு வைஜ யந்தி மாலா படத்தைத் தயார் செய்தனர். ஆசிரியர் கல்கி கிருஷ்ணமூர்த்தி வந்தார்; 'கொண்டு வா இயக்குனர் ஏவி. மெய் யப்ப செட்டியார் படத்தை' என்றார். அவர் படமே அட்டைப்படம் ஆயிற்று. அவ்வாறே 'ஔவையார்' படம் வெற்றி பெற்றபோது 'ஜெமினி' வாசன் படத்தை கல்கி அட்டையில் வெளியிட்டார். ஒரு திரைப்படத்தில் இயக்குனரின் பங்கு எத் தனை முக்கியமானது என்பதை இச் சம்பவங்கள் காட்டுகின்றன. அப்படிப் பட்ட இயக்குனர்களுள் மிகச் சிறந்த ஒருவர், சின்னத் திரையின் வசிகரம் புரிந்து தீர்க்கதரிசனத்துடன் அத்துறைக்கு மாறியவர் கே. பாலசந்தர்...!"

கி.ராவைப் போலவே பழைய நினைவு களில் தோய்ந்து, விருது பெற்ற கலை ஞர்களுக்குப் புதிய பெருமைகளையும்




• ஜெயஸ்ரீ கச்சேரி...

சூட்டினார் கே.பி.

பாரதிய வித்யா பவன் அரங்கில் தமது திரைப்படக் காட்சிகள் படமாக்க சிறப்பு அனுமதி தரப்பட்டதை நினைவு கூர்ந்தார்.

சென்னைக்குத் தாம் முதன்முதலில் வந்த போது கல்கியையும் எஸ்.எஸ். வாசனையும் சந்திக்க மிகவும் ஆசைப்பட்டதைத் தெரிவித்தார்.

அவர்களுடைய பத்திரிகைகள் மூலம் அவர்களைச் சந்தித்து அவர்களுடைய பெருமைகளை உணர்ந்ததாகக் குறிப்பிட்டார். ஆனந்தவிகடனிலிருந்து கல்கி விலகியபோது வருந்தி; பின்னர், 'கல்கி' பத்திரிகையை அவர் ஆரம்பித்தபோது 'இரண்டு பத்திரிகைகள் கிடைத்து விட்டதே!' என மகிழ்ந்ததைச் சொன்னார்.

"'ஓரிரவு' நாடகத்தை கல்கி விமர்சித்து அண்ணாவைத் தென்னாட்டு பெர்னார்ட் ஷா என அழைத்தார். எனது நாடகங்களுக்கு கல்கி விமர்சனம் எழுதும் பாக்கியம் கிடைக்காமல் போயிற்றே" என ஏங்கினார்...

இவையெல்லாம் கே.பி.யிடமிருந்து எதிர்பார்க்கக்கூடிய விஷயங்களே. பார்வையாளர்கள் சற்றும் எதிர்பாராத வகையில் அவர் பாம்பே ஜெயஸ்ரீ, புருஷோத்தம் ஆகியோரின் சங்கீத ஆற்றலைத் துல்லியமாகப் பிட்டுப் பிட்டு வைத்தபோது, இயக்குனர் கே.பி, பேச்சாளர் கே.பி.யாக மட்டுமின்றி ரசிகர் கே.பி. யாகவும் பிரகாசித்தார்:

'கிம்மிக்' செய்யாத ஜெயஸ்ரீயின் சங்கீதம் சம்பிரதாயத்தை மதிக்கிறது; 'வசீகரா' திரைப்பாடல் மூலம் வசீகரம் என்ற வார்த்தைக்கே ஒரு வசீகரம் தந்திருக்கிறார்; அவருடைய 'ஆத்மா' (இசை ஆல்பம்) என் இல்லத்தில் தினமும் ஒலிக்கிறது...

"கச்சேரி களை கட்டுவது கஞ்சிரா இசையால்தான். அதனுடைய நாதம் நரம்புகளைப் புடைக்க வைக்கிறது. இத்தனை இளம் வயதில் அவ்வாத்தியத்தைக் கைக்குள் போட்டுக் கொண்டிருக்கும் புருஷோத்தமுக்கு வாழ்த்துகள்..."

நன்றியுரை வழங்கிய அறங்காவலர் வி. கோபாலன், பார்வையாளர்கள் அனைவருக்கும் பாரதியார் பாடல் புத்தகம் அன்பளிப்பாகத் தரப்படுவதைச் சொல்லி பாரதி வரிகளையும் அவர்கள் முன் வேண்டுகோளாக்கினார்.

"படிப்பில் சிறந்த, பொருளாதாரத்தில் பின் தங்கிய மாணவர்களுக்கு உதவித் தொகைகள் வழங்கி வரும் அறக்கட்டளை இவ்வாண்டு ரூபாய் 2,15,000 மதிப்புக்கு உதவித் தொகைகள் வழங்கியிருக்கிறது. இந்த




• அனுஷாவுக்கு நினைவுப் பரிசு...

நற்பணியைத் தொடர 'நிதி மிகுந்தவர் பொற்குவை தாரீர்; நிதி குறைந்தவர் காசுகள் தாரீர்'" என்று அவர் கேட்க, அரங்க வாசலில் பாரதியார் நூல்கள் அடங்கிய அட்டைப் பெட்டி காவியாகி, உண்டியலாக உருமாற்றம் பெற, ரூ.2346.50 சேகரமாயிற்று!

பழைய நினைவுகளும், புதிய பெருமைகளும் பாம்பே ஜெயஸ்ரீ நிகழ்த்திய கச்சேரியினிடையேயும் தொடர்ந்தன.

'மாயா தீர்த்த விஹாரிணி' என மாயாமாளவ கௌளையில் ஆரம்பித்தவர், கருணா நிதியே தாயே, சபாபதிக்கு வேறு தெய்வம் என தமிழ்ப் பாடல்களால் இசை

மாலை தொடுத்துக் கொண்டே போனார். யதுகுல காம்போதி ராகத்தில் 'மறவேன் மற வேன்' என்று வேலின் மேல் ஆணையிட்ட மன்னரும் மறப்பாரோ வண்ண மயிலே..' என்ற 'சிவகாமியின் சபதம்' பாடலை அவர் நெக்குருகப் பாடியபோது மாமல்லரும் சிவகாமியும் கடல்மல்லையும் சுழன்று வரும் ஒரு மனோராஜ்ஜியத்துக்குள் ரசிகர்கள் கடத்திச் செல்லப்பட்டனர்.

அமரர் கல்கி நூற்றாண்டையொட்டி அவரது பாடல்களாலான ஒரு நிகழ்ச்சியை 'காற்றினிலே வரும் கீதம்' என்ற தலைப்பில் நடத்தியபோது விஜய் சிவா மெட்டமைக்க ஜெயஸ்ரீ பாடிய இப் பாடல், கச்சேரி மேடைகளை இன்னும் அடையாத, முருகப் பெருமான் மீதான அரிய பாடல்.

தோடி ராகமும் பிரதான கீர்த்தனையாக பாபநாசம் சிவனின் 'கார்த்திகேய காங்கேய'வும் பாடி முடித்ததும் தனியாவர்த்தனம். மிருதங்கம் கணபதிராமன் தமது இசையுலக சகாக்கள் பெற்ற புதிய பெருமையை தீபாவளி போல் கொண்டாட முடிவு செய்து விட்டார்! கணக்குப் பிசகாத தவுஸண்ட் வாலாக்களை அவர் விரல்கள் வெடித்துத் தள்ளின. அவ்வப்போது சுகமான கும்கி கொடுத்து புதுப் புதுச் சொல்லலங்காரங்களைச் செய்ய, விருது பெற்ற புருஷோத்தமன் கொண்டா கொண்டா என்று வாங்கி வாங்கி கணக்குக்குக் கணக்கு பதில் சொன்னார். கஞ்சிரா ராவின் சதங்கை மட்டும் சில நேரம் கேட்க, சதங்கையும் கொட்டும் சில நேரம் சேர்ந்தொலிக்க, கச்சிதமான ஒலிபெருக்கி அமைப்பில் அந்த கலைநயங்கள் போஷிக்கப்பட்டு கச்சேரி மேலும் களைகட்டி உச்சத்தை அடைந்தது.

'கூவியழைத்தால் குரல் கொடுப்பான்' என்ற வாலியின் பாடல், சாமா ராகத்தில் திருப்புகழ், என கச்சிதமான துக்கடாக்கள் பாடி, வாழிய செந்தமிழோடு நிறைவு செய்தார் ஜெயஸ்ரீ.

வயலின் எம்பார் கண்ணன், பிரதான கலைஞரை நிழல் போல் தொடர்ந்து, ஆலாபனைகளில் அளவாக வாசித்தது மட்டுமின்றி ஒலிபெருக்கி அமைப்பைக் கட்டுப்படுத்துவதில் ஆர்வமும் அக்கறையும் காட்டியபடியே இருந்தார்.

அரங்கில் இடமில்லாததால் மேடையில் அமர்ந்து மிக அருகே கச்சேரி கேட்கும் அதிர்ஷ்டமும் சில ரசிகர்களுக்கு வாய்த்தது!

— சுப்ரபாலன்

படங்கள்: ஸ்ரீஹரி

# ஒரே நாளில் 1101 பிள்ளையார்!



வில்லியனூர் முனுசாமி, டெர்ரகோட்டா கைவினைப் பொருட்கள் தயாரிப்பதில் நிபுணர்; 'டெர்ரகோட்டாவின் தந்தை' என்றே இவரைச் சொல்லுவார்கள். கலைமாமணி முதல், விடிஐயின் மகாத்மா காந்தி விருது, தேசிய விருது என்று தொடர்ந்து குவித்து வருபவர். இவர் பயிற்று வித்த கலைஞர்கள் இன்று தென்னாடு முழுக்




கப் பரவியிருக்கிறார்களாம். இத்தனைக்கும், இலவசமாகவே சொல்லித் தருகிறார்!

களிமண், மணலில் சலித்த சவுடு, ஏரி அருகே கிடைக்கும் பச்சை மண், இவற்றைக் குழைத்துப் பதம் பண்ணிச் செய்த பின், ஆறேழு நாட்கள் காய வைத்து, தேவைப்பட்டால் சாயம் பூசுகிறார்கள். பிள்ளையார், புத்தர், விளக்குக் கூடுகள் என்று சுமார் 110 வகைகளில் செய்திருக்கிறார். ஒரே நாளில் 1101 பிள்ளையார் செய்து கின்னஸ் சாதனைச் சான்றிதழுக்காகக் காத்திருக்கிறார் இந்தக் கலைஞர்!

தஞ்சாவூர் பெயின்டிங் 'கணேசா' விலிருந்து சேர்க்கத் தொடங்கி இருக்கும், சென்னைப் பல்கலைக் கழக மாணவி ரேவதி (எம்.ஏ. பொருளாதாரம்) பேரம் பேசி, பிள்ளையாரும் கையுமாக நிற்கிறதைப் பார்த்தால், அவருடைய கலெக்ஷனில் ஒரு புதுப் பிள்ளையார் சேர்ந்து விட்டமாதிரி தெரிகிறது!

- சித்தார்த்

அட்டைப்படம்: யோகா

# இனி பிள்ளை வரம் வேண்டி எங்கும் அலைய வேண்டாம்

# ஹோமியோ - சித்தா - ஆயுர்வேத முக்கூட்டு மருத்துவத்தால் குழந்தை பெறலாம்!

குழந்தை இல்லாத தம்பதிகள் பிள்ளைவரம் வேண்டி இனி எங்கேயும் அலைய வேண்டாம். குழந்தை பெறாமைக்கு குறைபாடு கணவனிடம் இருந்தாலும் சரி, மனைவியிடம் இருந்தாலும் சரி, ஹோமியோ-சித்தா-ஆயுர்வேத முக்கூட்டு மருத்துவத்தின் மூலம் ஆண் மலட்டுத் தன்மையும், பெண் மலட்டுத் தன்மையும் அறவே நீக்கி குழந்தை பிறக்கச் செய்கிறார்கள் டாக்டர் **ஏ.அர்ஜுனா, டாக்டர் வி.ஏ.ஆண்டாள்.** இவர்கள் 'நவீன வைத்தியாலயா' என்ற பெயரில் ஆஸ்பத்திரி நடத்தி வருகிறார்கள். திருவண்ணாமலை மாவட்டம் வந்தவாசியில் பிராமணர் தெருவிலும், சென்னையில் வடபழனி 100 அடி சாலையிலும் வெற்றிகரமாக சிகிச்சை நிலையங்கள் நடத்தி வருகிறார்கள்.

குழந்தைப் பெற்றுக் கொள்ள சிகிச்சைக்கு வரும் தம்பதிகளை டாக்டர் **ஏ.அர்ஜுனா** முதலில் கணவனின் உயிரணு உற்பத்தியை விந்து பரிசோதனையின் மூலம் குறைபாடுகளைக் கண்டறிகிறார்.



• உலகப் புகழ்பெற்ற மருத்துவத் திலகம் டாக்டர் A. அர்ஜுனாவுடன் திருவண்ணாமலை மாவட்டத்தில், உயிரணு உற்பத்தியாகி குழந்தை பெற்ற கிருஷ்ணன் - ஜெகதாம்பாள் தம்பதியர்.

பிறகு மனைவியின் குறைபாடுகளை சில பரிசோதனைகளின் மூலம் தெரிந்து கொண்டு ஆண் மலட்டுத் தன்மை, பெண் மலட்டுத்தன்மை நீங்கி குழந்தை பெற முக்கூட்டு மருத்துவ சிகிச்சையளிக்கிறார்.

"சென்னை கோடம்பாக்கத்தில் சம்பத் என்ற நபர் என்னிடம் சிகிச்சைக்கு வரும்போது அவரது விந்து பரிசோதனையில் டோட்டல் கவுண்ட் 70 மில்லியனும், மொட்டிலிட்டி 70%ம் இருந்தது. 2 மாத சிகிச்சைக்குப்பின் விந்து பரிசோதனையில் டோட்டல் கவுண்ட் 142 மில்லியனும், மொட்டிலிட்டி 80% உயர்ந்துள்ளது.

இது முக்கூட்டு மருத்துவத்தில் ஒரு சாதனையாகும்.

சென்னை புளியந்தோப்பைச் சேர்ந்த, அறவே உயிரணு இல்லாத ரவி எங்களிடம் சிகிச்சை பெற வந்து 2 மாத முக்கூட்டு மருந்தில், நல்ல முறையில் உயிரணு உற்பத்தியாகியுள்ளது.

கோவை பெரியநாயக்கன் பாளையத்தைச் சேர்ந்த லோகநாதனுக்கு அறவே உயிரணு இல்லை. அவருக்கு ஒரே மாத முக்கூட்டு மருந்தில் கவுண்ட் 110 மில்லியன், மொட்டிலிட்டி 20% உற்பத்தி ஆகியுள்ளது.

உயிரணு குறைவாக இருந்த கேரள மாநிலம் பாலக்காட்டைச் சேர்ந்த சேதுமாதவனுக்கு 16.6.2000ல் கவுண்ட் 20மில்லியன், மொட்டிலிட்டி 50% இருந்தது. 13.7.2001ல் கவுண்ட் 60மில்லியன், மொட்டிலிட்டு 50% என்று முன்னேற்றம் கண்டது.

மகாராஷ்டிர மாநிலம் நியூபாம்பே வாஷி பகுதியைச் சேர்ந்த ஜெயராமனுக்கு உயிரணு குறைவாக இருந்தது. 28.12.2000ல் இருந்த கவுண்ட் 45 மில்லியன், மொட்டிலிட்டி 50% ஒரே மாதத்திற்குள் 26.1.2001ல் கவுண்ட் 92மில்லியன், மொட்டிலிட்டி 30% என்று உயர்ந்தது.

சென்னையைச் சேர்ந்த, உயிரணு குறைவாக இருந்த ரகுவுக்கு 6.5.2000ல் கவுண்ட் 29 மில்லியன், 50% மொட்டிலிட்டி இருந்தது. எங்களது முக்கூட்டு மருந்துகள் மூலம் அவருக்கு 20.8.2000ல் கவுண்ட் 160 மில்லியன் உயர்ந்தது.

சென்னை வண்ணாரப்பேட்டையில் மனோகரன் என்பவருக்கு 6 மாத முக்கூட்டு சிகிச்சையில் உயிரணு உற்பத்தி ஆகியுள்ளது.

காஞ்சீபுரத்தில் கணேசன் என்பவருக்கு சில மாத சிகிச்சையில் உயிரணு உற்பத்தி ஆகியுள்ளது.

### ஆண் மலட்டுத் தன்மைக்கான காரணங்கள்:

ஆண்களுக்கு இளம் வயதிலேயே புட்டாளம்மை வந்திருந்தாலும், அம்மை வந்திருந்தாலும், மஞ்சள் காமாலை, டைபாய்டு ஜுரத்தால் பாதிக்கப்பட்டிருந்தாலும், விதைகளில் அடிபட்டிருந்தாலும், வெப்பம் அதிகமுள்ள இடங்களில் வேலை செய்வதாலும், தன்னைவிட வயது முதிர்ந்த பெண்களிடம் தாம்பத்திய உறவு கொண்டாலும் அவர்களால் புத்திர பாக்கியம் அடைய முடியாத நிலை உள்ளது. அவர்களுக்கு முக்கூட்டு மருத்துவ சிகிச்சையால் உயிரணு உற்பத்தி செய்து புத்திரபாக்கியம் அடையச் செய்கிறோம்.

**பெண் மலட்டுத் தன்மைக்கான காரணங்கள்:**

பெண்களில் கருப்பை ஓவரி வளர்ச்சியே இல்லாமல் இருப்பவர்களுக்கு வளர்ச்சியடைச் செய்கிறோம். வீட்டு விலக்கு ஒழுங்கில்லாதவர்களுக்கு ஒழுங்குபடுத்துகிறோம். சிலருக்கு வீட்டு விலக்கின் போது வரும் சூதக வயிற்றுவலியால் கருத்தரிக்க வாய்ப்பில்லாமல் போகும். இந்தக் குறையை முக்கூட்டு மருந்துகளால் நீக்கி கருத்தரிக்கச் செய்கிறோம்.

சில பெண்களுக்கு கருமுட்டை உற்பத்தி இருக்காது. இத்தகையவர்களை ஸ்கேன் மூலம் பரிசோதிக்கச் செய்து, கருமுட்டை உற்பத்தி நிலையை அறிந்து கருமுட்டை உண்டாக்கி கருவுறச் செய்கிறோம். பெண்களிடமுள்ள பிரதான பெரிய பிரச்னை, கருக்குழாயில் சதை அடைப்பு ஏற்படுவது. அதை முக்கூட்டு மருந்துகளால் கரைத்து அடைப்பை நீக்கி கருத்தரிக்க செய்கிறோம்.

சென்னை புதுப்பேட்டையைச் சேர்ந்த ஒரு முஸ்லிம் தம்பதிகளுக்கு எங்கள் வைத்தியத்துக்குப் பின், இரட்டைக் குழந்தை பிறந்தது.

திருவண்ணாமலை நகரத்தைச் சேர்ந்த ஒரு தம்பதிக்கு மூன்று மாத மருந்து சாப்பிட்டதில் தற்போது அந்தப் பெண் நான்கு மாத கர்ப்பவதியாக இருக்கிறார்.

சென்னை குரோம்பேட்டையைச் சேர்ந்த ராஜா – அலமேலு தம்பதியர் திருமணமாகி நான்கு வருடங்கள் குழந்தை இல்லாதிருந்து, அவர்களுக்கு முக்கூட்டு சிகிச்சையளித்ததில், திருமதி ராஜா வுக்கு கடந்த 6.3.2001 அன்று ஆண் குழந்தை பிறந்துள்ளது.

பெங்களூரைச் சேர்ந்த ஜி.பி. மோகனவேலு கீதாஞ்சலி தம்பதிக்கு எங்களது முக்கூட்டு சிகிச்சையால் ஆண், பெண் குழந்தைகள் பிறந்துள்ளன. மதுரையைச் சேர்ந்த அரசாங்கத்தில் பணிபுரி யும் ஒரு மாவட்ட அதிகாரிக்கு 23 ஆண்டு காலம் குழந்தை இல்லாதிருந்து எங்களிடம் சிகிச்சை பெற்ற அவரது மனைவிக்கு கடந்த 5.6.2000ல் பெண் குழந்தை பிறந்துள்ளது.

❍ சென்னை கிண்டியில் கோபால் – சித்ரா தம்பதிகளுக்கு பல ஆண்டுகள் குழந்தை இல்லாமல் இருந்து எங்கள் முக்கூட்டு சிகிச்சையினால் பெண் குழந்தை பிறந்துள்ளது.

❍ விழுப்புரம் மாவட்டம் செஞ்சி அவலூர் பேட்டையில் சந்திரமூர்த்தி தம்பதிகளுக்கு ஆண் மகன் பிறந்துள்ளது.

❍ சென்னை, வடபழனி, கங்கையம்மன் கோயில் தெருவைச் சேர்ந்த, எங்களிடம் சிகிச்சைப் பெற்ற ஒரு முஸ்லிம் பெண்மணி புத்திரபாக்கியம் அடைந்துள்ளார்.

❍ தஞ்சாவூர் புரசகுடியில் சௌந்தர்ராஜன் - வனரோஜா தம்பதிகளுக்கு ஒரு பையன் பிறந்துள்ளது. மீண்டும் வனரோஜா தற்போது கர்ப்பமாக உள்ளார்.

❍ பாண்டிச்சேரி கணபதிபட்டில் சாந்தி செல்வராஜ் தம்பதிகளுக்கு பெண்ணும், பையனும் பிறந்துள்ளார்கள். செஞ்சியைச் சேர்ந்த முருகன் - தமிழரசிக்கு ஒரே மாத மருந்தினால் உயிரணு உற்பத்தி ஆகி, கருக்குழாய் அடைப்பு நீங்கியதால் கடந்த 20.8.02ல் ஆண் குழந்தை (சுகப்பிரசவத்தில்) பிறந்துள்ளது.

இப்படி எங்கள் சிகிச்சையில் பல ஊர்களில் மாதா, மாதம் குழந்தைகள் பிறந்து கொண்டிருக்கின்றன.

எங்கள் மருத்துவமனையில், தமிழ்நாட்டில் எல்லா மாவட்டங்களிலிருந்தும், இந்தியாவின் அனைத்து மாநிலங்களிலிருந்து வந்தும்; அயல்நாடுகளில் அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்ஸ், கனடா, சுவிட்சர்லாந்து, நியூசிலாந்து, சவுதி அரேபியா, துபாய், குவைத், பக்ரைன், ரியாத், ஓமன், இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், ஜெர்மனி போன்ற வெளிநாடுகளில் இருந்து வந்தும் சிகிச்சை பெற்று பயனடைந்து வருகிறார்கள்.

எங்களிடம் சிகிச்சை பெற்று கர்ப்பமடைந்தவர்கள் கர்ப்பமடைந்த பின் 6 மாதம் வரை ஆங்கில மருத்துவர்களிடம் சென்று ஆங்கில மருந்துகளைச் சாப்பிட்டால் கருச்சிதைவு ஏற்படவும் வாய்ப்புண்டு என்றார்'' டாக்டர் **அர்ஜுனா**. சுகப்பிரசவத்திற்கு மருந்து உண்டு என்கிறார் அவர்.

நீங்களும் குறைந்த செலவில் புத்திரபாக்கியம் அடைய **டாக்டர் ஏ. அர்ஜுனா**, அவரது மனைவி **டாக்டர். வி.ஏ.ஆண்டாள்** அவர்களை அணுகவும்.



• டாக்டர் அர்ஜுனா, டாக்டர் V.A. ஆண்டாள் அர்ஜுனா

**நவீன வைத்தியாலயா** ஹோமியோபதி - சித்தா - ஆயுர்வேத மலடு நீக்கும் ஆஸ்பத்திரி

சென்னையில் சனி, ஞாயிறு, திங்கள் ஆகிய தினங்களில் டாக்டரைச் சந்திக்குமிடம்: எண் 65 நெற்குன்றம் பாதை, (டி.எஸ். கவுரி சங்கர் கல்யாண மண்டபம் எதிரில்) 100 அடி ரிங் ரோடு, வடபழனி, சென்னை - 600 026. போன் : 4833464 எஸ்டிடி.044

செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி ஆகிய தினங்களில் டாக்டரைச் சந்திக்குமிடம் -

வீடு : நெ. 30, பிராமணர் தெரு, ஈஸ்வரன் கோயில் அருகில், வந்தவாசி.

திருவண்ணாமலை மாவட்டம் - 604 408

**புதிய தொலைபேசி எண்கள்**
**225208, 226180**
**STD 04183**

ADVT

## செப்டெம்பர் 18 முதல் 24 வரை

## அக்னிசர்மா பக்கம்

# நடக்குமென்பார்; நடக்கும்!

**மேஷம் :** இந்த வாரம் பண நடமாட்டத்துக்குப் பஞ்சமில்லை. பல வழிகள்ல இருந்து வரும். மனசுல துணிச்சல் தன்னம்பிக்கை வரும். சிக்கலான காரியத்தையும் சிரமமில்லாம முடிச்சிடுவீங்க. அலுவலகத்தில் இருந்த சங்கடங்கள் விலகும். சுமூகமான சூழ்நிலை நிலவும். வியாபாரிகளுக்கு இது முன்னேற்ற வாரம். கொடுக்கல் வாங்கல் கை கொடுக்கும். குடும்பத்துல மகிழ்ச்சி பெருகும். சிலர் புதிய வீடு கட்டும், வாங்கும் வாய்ப்பிருக்கு. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்குப் பெயர் புகழ் கூடும்.

**ரிஷபம் :** இந்த வாரம் எடுத்த காரியங்களில் வெற்றி உண்டு. வீட்ல திருமணமாகாதவங்களுக்கு அதுக்கான வாய்ப்பு வரும். தேவைக்கேற்ப பணவசதி கிடைக்கும். எதிர்ப்புகள் மறையும். மதிப்பு, செல்வாக்கு அபிவிருத்தி அடையும். உத்யோகம் தொடர்பாக வெளியூர் போகும் வாய்ப்பிருக்கு. பயணத்தில் கவனமா இருங்க. இதுவரை இழுத்தடிச்சிட்டிருந்த பணம் இப்போ வந்து சேரும். அழகு சாதனம், அலங்காரப் பொருட்கள், மருத்துவம், கெமிக்கல், ரெடிமேட் ஆகிய தொழில் பண்றவங்களுக்கு லாபம் கொட்டும். பெண்களுக்கு இது உற்சாகமான வாரம்.

**மிதுனம் :** இந்த வாரம் குடும்பத்துல சந்தோஷ ஊற்றெடுக்கும். புனித காரியங்களில் ஈடுபட வாய்ப்பிருக்கு. பண வசதிக்குப் பஞ்சமில்லை. மறைமுக நேர்முக எதிரிகள் விலகிப் போவாங்க. அலுவலகத்தில் மேன்மை உண்டாகும். சிலருக்குப் பதவி உயர்வு கிடைக்க வாய்ப்பிருக்கு. கடன்கள் மறையும். வியாபாரிகள் புதிய வியாபாரத்தில் நுழைய வாய்ப்பிருக்கு. குடும்பத்தில் இனிமை நிலவும். பொன், பொருள் சேர்க்கை நிகழும். பெண்களுக்கு உற்சாகமான வாரம். அரசியல்வாதிகள் எச்சரிக்கையா இருக்க வேண்டும். அவசரப்பட்டு அறிக்கைவிட்டு அவதிப்பட வேண்டாம்.

**கடகம் :** இந்த வாரம் ஆன்மீகப் பக்கம் மனசு செல்லும். புனித காரியங்களில் ஈடுபட வாய்ப்பிருக்கு. தடைகள், குறுக்கீடுகள் இருந்தாலும் எடுத்தக் காரியத்தை எப்பாடுபட்டாவது முடிச்சிடுவீங்க. செலவினங்கள் கூடினாலும் அதுக்குத் தக்க பணவசதியும் கிடைக்கும். அரசு விவகாரங்களில் நல்ல திருப்பம் வரும். புதிய முயற்சிகள் வெற்றி தரும். வேலை இல்லாதவங்களுக்கு அதுக்கான வாய்ப்பு வரலாம். வேலை, தொழில் காரணமாக சிலர் வெளிநாடு போக வாய்ப்பிருக்கு. பெண்கள் நகை, நட்டு, ஆடைகள் வாங்க வாய்ப்பிருக்கு.

**சிம்மம் :** இந்த வாரம் முன்னேற்ற வாரம். இதுவரை இழுபறியாக இருந்து வந்த காரியங்கள் இப்போது நிறைவேறும். அலுவலகத்தில் அதிகாரிகளின் பாராட்டு கிடைக்கும். இதனால தலை கால் தெரியாம சந்தோஷத்தில் அலைவீங்க. மனசுல இது நாள் வரை இருந்து வந்த குழப்பங்கள் விலகும். அலுவலக சம்பந்தமாக வெளியூர் போக வாய்ப்பிருக்கு. கொடுக்கல் வாங்கல் லாபம் தரும். சினிமா, ஓவியம் போன்ற கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. குடும்பத்தில் மகிழ்ச்சி நிலவும். சிலருக்கு வீடு வாங்கும், கட்டும் பாக்கியம் ஏற்படும். இதுவரை இழுத்தடித்த காரியங்கள் இப்போது டக்கென்று நிறைவேறும்.

**கன்னி :** இந்த வாரம் உற்சாகமான மனநிலை அமையும். சகல காரியங்களிலும் இட்டமிட்டபடி வெற்றி கிடைக்கும். எந்தவிதமான தடைகள், குறுக்கீடுகள் வந்தாலும் அதைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம். நல்லதே நடக்கும். சிலருக்குப் பதவி உயர்வு, இடமாற்றம் ஆகியவை கிடைக்கலாம். வேலை விஷயமாக சிலர் வெளிநாடு போக வாய்ப்பிருக்கு. பணநடமாட்டத்துக்குப் பஞ்சமில்லை. வியாபாரிகள் புதிய தொழிலில் ஈடுபட வாய்ப்பிருக்கு. பொன், வெள்ளி, நவரத்தினம் ஆபரணம் போன்ற தொழில் பண்றவங்களுக்கு எதிர்பாராத லாபம் உண்டு. குடும்பத்தில் சுபகாரிய முயற்சிகள் நடக்கும்.

**துலாம் :** இந்த வாரம் தாராள பண வசதி உண்டு. மனசுல உற்சாகம் பிறக்கும். எதிர்ப்புகள் மறையும். எதிரிகள் ஓடிப்

போவாங்க. சிறு சிறு குறுக்கீடுகள், பிரச்னை கள் வந்து தொல்லைக் கொடுத்தாலும் உங்கள் அறிவாற்றல் காரணமா சமாளிப்பீங்க. தனியார் நிறுவனத்தில் பணிபுரிபவர்களுக்கு முன்னேற்றம் உண்டு. வேலை சம்பந்தமாக வெளியூர் / வெளிநாடு போக சிலருக்கு வாய்ப் பிருக்கு. வாரக் கடைசியில் எதிர்பார்த்திருந்த நல்ல தகவல் வந்து சேரும். உணவுப் பொருள், ஜவுளி, கெமிக்கல்ஸ், பொன், வெள்ளி போன்ற ஆபரணங்கள் லாபம் கொண்டு வரும். குடும் பத்தில் ஒற்றுமை, மகிழ்ச்சி, அமைதி நிலவும். விலகும். சிலருக்கு இடமாற்றம் ஊதிய உயர்வு கிடைக்கும். புதிய திட்டங்கள் திட்டமிட்டப் படி நடக்கும். பெயர், புகழ் கூடும். உடல் ஆரோக்கியம் சிரா இருக்கும். அழகு சாதனம், அலங்காரப் பொருட்கள், வாகனம், ஏற்றுமதி இறக்குமதி துறைகளில் ஆதாயம் உண்டு. குரு பலம் நிறைந்து இருப்பதால் குடும்பத்தில் ஒற்றுமை, மகிழ்ச்சி நிலவும். கலைத் துறை களைச் சேர்ந்தவங்களுக்கு மாமூல் பலன்கள் தடைபடாது. பெண்களுக்கு எல்லா முயற்சிகளும் கைகூடும். இதனால் சந்தோஷம் நிறையும்.


படம் : யோகா

**'ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ்' அதிபர் கிருஷ்ணாவின் மனைவி உஷா கிருஷ்ணாவின் (கும்பம்) குடும்பத்தில் மகிழ்ச்சி தாண்டவமாடுமாம்!**

**விருச்சிகம் :** இந்த வாரம் உங்கள் துணிவு, தன்னம்பிக்கை, திறமை யாவும் பளிச்சிடும். மனசுல தெளிவான சிந்தனை ஓடும். பணவசதி தாராளமா இருக்கும். பயணத்தில் நன்மை கிடைக்கும். எந்தக் காரியத்திலும் எப்பாடு பட்டாவது வெற்றி பெற்றிடுவீங்க. புதிய பொறுப்புகள் சிலருக்குத் தேடி வரும். அலு வலகத்தில் சுமூகமான சூழ்நிலை நிலவும். கொடுக்கல் வாங்கலில் நன்மை உண்டு. சிலர் புதிய தொழிலில் ஈடுபட சந்தர்ப்பம் இருக்கிறது. குடும்பத்தில் ஒற்றுமை நிலவும். திருமணம் போன்ற சுபகாரியங்கள் கூடி வரும். கோர்ட் விவகாரங்களில் நல்ல திருப்பம் உண்டாகும்.

**தனுசு :** இந்த வாரம் உங்க செல்வாக்கு உயரப் போகுது. நேர்முக மறைமுக எதிரிகள் ஓடிப் போவாங்க. உத்தியோகத்தில் மனத் திருப்தி ஏற்படும். அலுவலகத்தில் உழைப்பு, பொறுப்புக் கூட வாய்ப்பிருக்கு. இதனால் மதிப்பு உயரப் போகுது. சிலருக்கு வெளிநாடு செல்லும் வாய்ப்பு இருக்கு. அரசு விவகாரங் கள்ல நல்ல திருப்பம் உண்டாகும். வியாபாரி களுக்கு முன்னேற்றம் உண்டு. கலைத் துறை யைச் சேர்ந்தவங்களுக்கு புகழ், பாராட்டு கிடைக்கும். குடும்பத்தில் ஒற்றுமை மகிழ்ச்சி உண்டாகும். குடும்பத்திலே திருமணம் போன்ற சுபகாரியங்கள் நடக்க வாய்ப்பிருக்கு. பெண் களுக்கு உற்சாகமானச் சூழ்நிலை உருவாகும்.

**மகரம் :** இந்த வாரம் எடுத்தக் காரியத்தில் வெற்றி உண்டாகும். தடைகள் குறுக்கீடுகள்

**கும்பம் :** இதுவரை இருந்து வந்த சொத்து சம்பந்தமானச் சிக்கல்கள் இந்த வாரம் நீங்கும். இதனால குடும்பத்துல மகிழ்ச்சித் தாண்டவ மாடும். சிலருக்குப் புதிய வேலை முயற்சிகள் கைகொடுக்கும். அலுவலகத்தில் கருத்து வேறு பாடுகள் குறையும். சிலருக்குப் பதவி உயர்வு கிடைக்கும். மதிப்பு, செல்வாக்கு உயரும். வெளிநாடு செல்ல முயற்சிப்பவர்களுக்கு அதுக்கான வாய்ப்பு வரும். வியாபாரிகள் வளர்ச்சி அடைவார்கள். பார்ட்னர்ஷிப்பில் தொழில் பண்றவங்களுக்கு லாபம் உண்டு. குடும்பத்தில் சுமூகமான நிலை காணப்படும். சுபகாரிய நிகழ்ச்சிகள் நடக்க வாய்ப்பிருக்கு. வழக்கு விவகாரங்களில் அமைதியைக் கடைப் பிடிங்க, பேச்சில் இனிமை அவசியம்.

**மீனம் :** இந்த வாரம் தெய்வீக ஈடுபாடு அதிகரிக்கும். பண வசதி தாராளமா இருக்கும். இதுவரை இருந்து வந்த தடைகள் நீங்கி, வெற்றி நடை போடுவீர்கள். அலுவலகத் தில் சுமூகமான சூழ்நிலை ஏற்படும். உயரதிகாரிகளின் பாராட்டு கிடைக்கும். பொருளாதார நிலையில் அபிவிருத்தி உண்டு. குடும்பத்தில் ஜாலியான நிகழ்ச்சிகள் நடக்க வாய்ப்பிருக்கு. நண்பர்கள் உறவினர்கள் வருகையின்னு மகிழ்ச்சியா இருக்கும். வெளியூர் டூர் செல்ல வாய்ப்பிருக்கு. பெண்களுக்கு முன்னேற்றம் உண்டு. புதிய நண்பர்கள் தொடர்புகள் கிடைக்கும். இதனால் ஆதாயம் உண்டு.

# 8 முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

நியாஸம் என்றால் சரணாகதி என்று ஓர் அர்த்தம். சன்னியாசிகள் அந்த எம்பெருமானிடத்திலே, இந்த ஆத்மாவை, 'என்னுடையதல்ல' என்று சமர்ப்பிக்க வேண்டும். **அவன்** ஏற்கும்படியாகச் சமர்ப்பிக்க வேண்டும். பகவான் அதை ஏற்கிறான்.

உபநிஷத் அழகாகச் சொல்கிறது பாருங்கள்:

எல்லா தபஸைக் காட்டிலும், எல்லா உபாயத்தைக் காட்டிலும் சிறந்த, உயர்ந்த தான உபாயம் சரணாகதிதான் என்கிறது. இதை சுவாமி எம்பெருமானார் பாஷ்யக்காரர் ராமானுஜரும் ரொம்ப அழகாகச் சொல்கிறார்:

அந்த எம்பெருமானை நாம் வசியம் பண்ணவேண்டும். வசீகரிக்க வேண்டும், நம் காரியத்தை அவன் செய்ய வேண்டும், நம்மிடத்திலே அவன் வசியமாகவேண்டும் என்றால் ஒரே வழி அவன் திருவடியிலே சரணாகதி பண்ணுவதுதான். வேறு மார்க்கமே இல்லை என்கிறார்.

வேதாந்தத்திலே தெளிவான ஞானம் நமக்கு ஏற்பட்டதானால் பரமாத்மா என்பவன் யார் என்பது நமக்கு நன்கு தெரியும்.

அதைத்தான் சுக்ல யஜுர் வேத உபநிஷத்தாக இருக்கும்படியான ஈசாவாஸ்ய உபநிஷத் விளக்குகிறது.

நாற்பது அத்தியாயங்களாக இருக்கிறது சுக்ல யஜுர் வேதம். **ஸம்ஹிதா** என்று ஒரு பாகம்; அதை அடுத்து **ப்ராஹ்மணம்** என ஒன்று; அதற்கப்புறம் **ஆரண்யகம்;** அதற்கும் அப்புறம் **உபநிஷத்** வருகிறது – உபநிஷத்தான் வேதாந்தம்.

ஒரு வேதத்தை எடுத்துக் கொண்டோமானால் இந்த நான்கும் தெரியும்.

**ஸம்ஹிதை** – ஸம்ஹிதை என்றால் சேர்த்துச் சொல்லுவது. வாக்கியங்கள் முடிவில்லாமல் போய்க் கொண்டேயிருக்கும். நடுவே நாமாகத்தான் எங்கேயாவது மூச்சு விட வேண்டும். அவ்வாறு முடிவில்லாமல் சேர்த்துச் சொல்வது ஸம்ஹிதை.

ஏழு காண்டங்கள் ஸம்ஹிதா பாகத்திலே உண்டு. அந்த ஏழு காண்டங்களைப் பாராயணம் பண்ணினால் அவ்வளவு உயர்வு. ஏழு காண்டங்களினுடைய பெருமையை மகாபாரதத்திலே பீஷ்மாச்சார்யார் அம்புப் படுக்கையிலே படுத்துக் கொண்டு சொல்கிறார். அத்தனை பெருமை அந்த மூலத்தைப் பாராயணம் செய்பவர்களுக்கு.

இந்த ஸம்ஹிதையையே 'இத்யாஹா' என்று சொல்லிச் சொல்லி விவரிப்பதுதான் பிராஹ்மணம். ஸம்ஹிதையில் சொல்லப்பட்டிருக்கிற மந்திரத்தை எடுத்து 'இப்படிச் சொல்லப்பட்டிருக்கிறது பார்..' – (இத்யாஹா) என்று அதனுடைய வினியோகத்தை, பலனை பிராஹ்மணம் என்பது எடுத்துக் காட்டுகிறது.

ஆரண்யகம் என்றால் என்ன...? உபநிஷத்துடைய பிரபாவத்தை நன்கு தெளிவாகக் காட்டக்கூடிய சில வேத வான்மயங்கள் – இவற்றுக்குத்தான் ஆரண்யகம் என்று பெயர். ஆரண்யகத்தின் பலனாய் இருக்கக் கூடியவன் எம்பெருமான்.

ஒரு கதை சொல்வதுண்டு: காட்டிலே இருக்கக் கூடிய மக்கள் சில பழங்களை விற்க வந்தார்களாம், எம்பெருமானிடத்திலே. அவர்கள் வெறுமே பழங்களை விற்கவில்லை; தங்களையே அர்ப்பணம் பண்ணிவிட்டார்கள். அவர்களிலே ஒரு கிழவி களாக்காய், இலந்தைப் பழம் - இதையெல்லாம் வைத்துக் கொண்டு வந்தாள். ஒன்றும் தெரியாத எளிமையானவள் அவள். கிருஷ்ணன் குழந்தையாக இருக்கிறான். குழந்தை அவளைப் பார்த்தது. பார்த்ததும் பழத்தை வாங்கக் கையிலே தானியத்தோடு வருகிறது. தானியத்தைக் கூடையிலே போட்டால் பழத்தைக் கொடுத்துவிடுவாள் அவள். சின்ன குழந்தை அல்லவா...! தானியத்தைக் கையிலே எடுத்துக் கொண்டு தள்ளாடிக் கொண்டே வருகிறது. விரல்களெல்லாம் நெருக்கமாகப் பதியவில்லை; இடைவெளியோடு குவிந்திருக்கிறது கை. அந்த இடுக்குகள் வழியே தான்யங்களெல்லாம் கீழே சிந்திக் கொண்டே வருகிறது.

இப்படி வருகிற குழந்தையை அவள் பார்க்கிறாள். பார்த்தவுடனே அப்படியே

# குறையொன்றுமில்லை

பிரமித்துப் போய்விடுகிறாள். தன்னையே அர்ப்பணித்து விடுகிறாள் குழந்தையிடம்.

அந்தக் குழந்தை என்ன பண்ணிற்று...? தான்யத்தைக் கொண்டுபோய் இவளுடைய கூடையிலே போட்டது. போட்டதுதான் தாமதம்... இலந்தைப் பழம், களாக்காயெல்லாம் தூரப் போய்விட்டது! கூடை மொத்தமும் நவரத்தினமாக நிரம்பிப் போய் விட்டது.

காட்டுவாழ் ஜாதியிலிருக்கக் கூடிய அந்தக் கிழவிக்கு அத்தனை ஐச்வர்யத்தைக் கொடுத்தது அந்தக் குழந்தை.

ஆசார்யர்கள் கேட்கிறார்கள் – 'அந்தக் கிழவி பூர்வ ஜன்மத்திலே என்ன புண்ணியம் பண்ணினாளோ, இவ்வளவு உயர்ந்த பதவியை அடைய! அந்த எம்பெருமான் அவளுக்குப் பரம ஐச்வர்யத்தைக் கொடுத்தான். அவனைக் குழந்தையாக – கையிலே



தானியம் எடுத்து வருகிற அழகைக் கண்டு சேவிக்கக் கொடுத்து வைத்தாளே அவள்!' என்று வியந்து கொண்டாடுகிறார் சுவாமி தேசிகன்.

சாமானியர்களுக்கும் அவன் அனுக் கிரஹம் உண்டு. ஐச்வர்யத்தை – நிஜமான செல்வத்தைக் கொடுத்து அவர்களையும் அவன் காப்பாற்றுகிறான்.

எம்பெருமானுடைய உயர்ந்த குணத்தை உணர்ந்து அவனுடைய திருவடியிலே ஈடுபட்டோமானால், சர்வத்தையும் நமக்குக் கொடுக்கிறான் என்பதை நாம் இங்கே உணர வேண்டும்.

இவ்வாறு உபநிஷத் அர்த்த விசேஷங் கள் அனைத்தும் ஆரண்யகம் என்று சொல் லப்படுகிறது.

இதற்கப்புறம் வருவது வேதாந்தம் – வேதத்தினுடைய முடிவு. பூரணமாக, நேரே பகவானை எடுத்து நமக்குச் சொல்கிறது வேதாந்தம்.

சம்ஹிதா பாகத்திலேயே, சுக்ல யஜுர் வேதத்தில் கடைசிப் பதினெட்டு மந்திரமாக அமைந்திருப்பது ஈசாவாஸ்யம்.

ஈசாவாஸ்யம் இதம் சர்வம் –

'இதம் சர்வம்' என்றால், 'இப்போது நாம் பார்த்துக் கொண்டிருக்கிறோமே, இது மொத் தம் ஈசனே **ஆவாஸ்யம்**' என்று பொருள். – எம்பெருமானால், பகவானால் எல்லாமே பூரணமாக ஆக்கிரமிக்கப்பட்டிருக்கிறது. எல்லாமாக அவன் இருக்கிறான். எல்லா வற்றிலும் அவனே இருக்கிறான். ஆகையால் மொத்தம் அவனுடையது.

மற்றவர்கள் சொத் திலே, மற்றவர்களுடைய ஐச்வர்யத்திலே, மற்ற வர்களுடைய நிலபுலத் திலே ஆசை வைக்காதே! இதரர்களிடத்திலே இருக்கும் தனத்தில் வீணான மோகம் கொள் ளாதே – ஏனென்றால் எல் லாமே ஈச்வரனுடையது. ஆகையால், நீயும், உன் உடைமையும்கூட அவனு டையவைதான்.

இந்த அறிவு நமக்கு ஏற்பட்டுவிட்டதானால், இதரர்கள் பொருளை நாம் திருட வேண்டும், இதரர்களை வஞ்சிக்க வேண்டும் என்ற எண்ணம் நமக்கு வருமா! வஞ்சிப்பதனால் என்ன லாபம் அடை கிறாய்? சர்வத்திலும் அவனே அல்லவா இருக்கிறான். மொத்தத்திலும் **அவனே** இருப்பதை உணர்ந்தால் பிறரை வஞ்சிக்கும் எண்ணமே வராது என்பதை இந்த மந்தி ரத்திலே சொல்லி, 'அந்த மந்திரத்தினிடம், அதன் வழியிலே என்னை அழைத்துக் கொண்டு போ' என்று கடைசி மந்திரத்தில் பிரார்த்தனையும் வருகிறது!

'ஹே அக்னி! நல்ல வழியிலே என்னை அழைத்துப் போ! எல்லாவற்றையும் உணர்ந்தவன் நீதான். வித்வான்!' என்று அழைக்கிற போதே பகவானையும் அழைக் கிறது இம் மந்திரம்.

'நீ என்னை நல்ல வழியிலே அழைத்துப் போக வேண்டும். என்னிடத்திலிருக்கிற பாபங்கள் அனைத்தையும் போக்க வேண் டும். என்னால் என்ன செய்ய முடியும்...?'

'சுமந்து மாமலர் தூபம் கொண்டு' என்கிறார் நம்மாழ்வார்.

அந்தத் திருவேங்கடமுடையானுடைய சன்னிதியிலே நின்று கொண்டு, மாமலர் சுமந்து கொண்டு, சுடர் தீபம் கொண்டு... வழிபடலாம், அவ்வளவுதான் நம்மால் முடி

## பாட்டில் சரக்கு!

“ஹார்லிக்ஸ் பாட்டிலில் ஆரம்பித் தது, இப்போது வெளிநாட்டு மதுபான பாட்டில் வரை வந்து நிற்கிறது” என்று ஸ்ரீதர் என்ற அந்த இளைஞர் சொன்னபோது என்னவோ ஏதோ என்று பதைக்கத்தான் செய்தது. ஆனால் அவர் கையோடு கொண்டு வந்து காட்டிய பாட்டில்களில் இருந்தது ஒவிய சரக்கு மட்டுமே என்று அறிந்ததும் பாராட் டாமல் என்ன செய்ய?

ஒரே பாட்டிலில் 181 வி.ஐ.பி.களின் முகங்கள், 100 ஹார்லிக்ஸ் பாட்டில் களை அடுக்கி வைத்து



யும்.

இஞ்சிமேட்டு ஸ்ரீமத் அழகிய சிங்கர் – நாற்பத்திரண்டாவது பட்டத்து அழகிய சிங்கர் – ஒரு முறை திருவேங்கடமுடையானைப் பார்க்கப் போகிறபோது, கையிலே பெரிய தட்டிலே பழங்கள், திரவியங்கள் தூக்கி வைத்துக் கொண்டு வரிசையிலே நின்று கொண்டிருந்தார். இன்னும் நடை திறக்கவில்லை. வெளியிலே நிற்க வேண்டிய நிலை அவருக்கு ஏற்பட்டது.

மகான் அவர். உத்தமர். அப்படிப்பட்டவர் இவ்வளவு பளுவான வஸ்துவை வைத்துக் கொண்டு நிற்கிறாரே என்று ஒருவர் வந்து, 'அடியேன் அதை வைத்துக் கொண்டிருக்கிறேன். கதவு திறந்த பிற்பாடு எடுத்துக் கொண்டு போகலாம்' என்கிறார்; கையை நீட்டி வாங்கிக் கொள்ளப் பார்க்கிறார்.

அப்போது சுவாமி, 'சுமந்து மாமலர்' என்று இந்தப் பாசுரத்தைத்தான் சொன்னார்.

இந்த சுமத்தல் என்பதிலிருக்கிற சந்தோஷம், இதிலிருக்கிற நிறைவு, இதிலிருக்கிற மனஸ் திருப்தி வேறெதிலே உண்டு!

"பகவானுக்குச் சமர்ப்பிக்கும்படியான திரவியத்தைக் கொஞ்சம் நேரம் சுமக்கிற பாக்கியம் கிடைத்திருக்கிறதே! இதை வேண்டாமென்று தடுக்கிறீரே?" என்று கேட்டாராம்.

பகவத் சன்னிதியிலே காத்திருந்தால் இன்னும் எத்தனை நாழி ஆகுமோ என்று அலுத்துச் சொல்லக் கூடாது. இந்த மாதிரி நிற்க வைத்தானே என்று சந்தோஷம் கொள்ள வேண்டும்.

'சுமந்து' என்றால் இந்த சரீரத்தைச் சுமந்து, இந்த ஆத்மாவிலே அனுராகத்தைச் சுமந்து, எம்பெருமானிடத்திலே சுமந்து செல்லுதல் என்று பல பொருள் வருகிறது பாசுரத்துக்கு.

'நம வென்னலாம் கடமை; அது சுமந்தாருக்கே'– எம்பெருமான் திருவேங்கடமுடையானுக்கே நம வென்னலாம் கடமை என்கிறார் நம்மாழ்வார்.

**ஸ்**வேதத்வீபம் என்றொரு த்வீபம். அங்கே இருக்கிற மொத்த பேரும் சாத்விகர்கள். எப்போதும் நம: நம: என்று சொல்லிக் கொண்டிருப்பார்கள்.

நம: என்பதே சர்வ மந்திரங்களுக்கும் ஹ்ருதயம்.

சரணாகதியின் பொருளை அடக்கிக் கொண்டு உட்கார்ந்திருக்கிறது இந்த இரண்டு அக்ஷர சின்ன சப்தம்.

இன்னும் விரிவாய் அதைப் பார்க்கலாம்.

(வளரும்)





வரையப்பட்ட திருவள்ளுவர் ஓவியம் என கலக்கியிருக்கும் ஸ்ரீதர், அபஸ்வரம் ராம்ஜி இசைக் குழுவில் டிரம்மராக இருக்கிறார்.

பாட்டில்களின் குறுகிய கழுத்தில் தூரிகையை நுழைத்து உட்புறமாகச் சித்திரம் தீட்டுவது புதிய பாணி என்பதால் லிம்கா சாதனை புத்தகத்திலும் இடம்பெறவிருக்கிறார் இந்த இளைஞர்!

– அஜய்



**கலைப்பொருள் சிறப்பிதழ்**

**உ**ங்கள் உள்ளம் கவர்ந்த கலைப் பொருள் எது? கலைப்புலி தாணுவிடம் கேட்டதுதான் தாமதம். பிளாஷ் பேக்கில் அமெரிக்காவுக்குப் பறந்துவிட்டார்.

"1995ஆம் ஆண்டு அமெரிக்கச் சுற்றுப் பயணம் சென்றிருந்தேன். ஒரு மாத காலம் அமெரிக்காவின் பெரும்பாலான மாகாணங்களைச் சுற்றிப் பார்த்துவிட்டு லாஸ் ஏஞ்சல்ஸ் வந்து சேர்ந்தேன். அங்கே நான், பார்த்து வியந்தது யூனிவர்சல் ஸ்டூடியோவை. சினிமாவைக் கனவுலகம் என்று சொல்வார்கள். இங்கே ஸ்டூடியோவே ஒரு கன



# கலைப்புலிக்குப் பிடித்த கலைப் பொருள்

வுலகத்திற்குள் பிரவேசிக்கிற மாதிரி இருந்தது. அங்கே ஸ்பீல்பர்க் எடுத்திருந்த ஈ-டி திரைப்படத்தின் சில காட்சிகளை வெர்ச்சுவல் இமேஜ் திரையில் பார்த்த போது, அதில் வரும் ஏலியன் குழந்தை நம் அருகிலே யில் வந்து நம்மை ஸ்பரிசித்துப் பார்ப்பதுபோல உணர்ந்து சிலிர்த்துப் போனேன். ஹாலிவுட் சினிமா தயாரிப்பிற்கும், இந்தியத் தயாரிப்பிற்குமான இடைவெளியைக் கண்டு மனம் கனத்துக் கொண்டது. அங்கேயிருந்த ஆஸ்கார் விருது வழங்கும் விழா நடத்தப்படும் ஆடிட்டோரியம் என்னை ஆணி அடித்து நிறுத்தியது. இந்த மேடையில் நம் நாட்டைச் சேர்ந்த ஒருவர் கூட ஏறவில்லையே என்று நினைத்தபோது தொண்டையை அடைத்தது. அடுத்த கணம் மனசுக்குள் ஓர் உறுதி பிறந்தது. ஆஸ்காருக்கு நாம் ஏன் முயன்று பார்க்கக் கூடாது? அந்த இடத்திலேயே ஆஸ்காரை எனது வாழ்நாள் லட்சியமாக இதயத்தில் வரித்துக் கொண்டேன். அங்கிருந்து வெளியேறும் முன்பு அங்கே விற்பனைக்கு வைக்கப்பட்டிருந்த ஆஸ்கார் விருது மினியேச்சர் சிலை ஒன்றை ஞாபகார்த்தமாக வாங்கிக் கொண்டேன். எனது மேஜை மீது இருந்து எனது இலட்சியக் கனவை ஒவ்வொரு நிமிஷமும் நினைவுபடுத்திக் கொண்டேயிருக்கும். இதுதான் எனது உள்ளம் கவர்ந்த கலைப் பொருள்."

— ஜெ.

படம் : ராஜன்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Pvt. Ltd.
Editorial Team : C. Egnath Raj, Anuradha Sekhar, C.Jesudoss. Layouts : S.Stephen, P.R. Rajan.
Editor : Seetha Ravi.
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623;
Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 330/-; Half Yearly Subscription : India : Rs. 165/-
Overseas (Air Mail) Annual : 62 U.S. Dollars, Srilanka Rs.2000/-

வீட்டின் அழகு கதவில் தெரியும் !

Now Flat Buyers insist on

# MAYURAM

## TIMBER DOORS



because




Contact:

**MAYURAM TIMBER & GENERAL TRADING CORPN.**

H.O.: 83, G.S.T.Road, Chennai - 45. ☎:236 8297/238 1281.

Showroom: 13, Rameswaram Road, T.Nagar, Chennai - 600 017. ☎: 434 5207

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2002 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka


# ARTHRITIS - மூட்டுவலி, ASTHMA - ஆஸ்துமா

## ASTHMA - ஆஸ்துமா

1. Dyspnea (மூச்சுத் திணறல்) 2. Respiratory difficulties (மேல்மூச்சு வாங்குதல்) 3. Dry cough (வறட்டு இருமல்) 4. Cough with sputum (சளியுடன் கூடிய இருமல்) 5. Running Nose (மூக்கில் நீர் வழிதல்) 6. Nasal Block (மூக்கடைப்பு)

தற்போது, ஆஸ்துமா வியாதிக்கும் இயற்கை வைத்திய முறையில் மிக நல்ல விதமாக பக்கவிளைவுகள் இல்லாமல் சிகிச்சை அளிக்கின்றோம் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

மதிப்பிற்குரிய டாக்டர் அவர்களுக்கு,

நான் ஒரு ஓய்வு பெற்ற ஆசிரியை. கழிந்த 5 வருடங்களாக இடது தோள் வலி மற்றும் முதுகு வலியால் அவதி பட்டு கொண்டிருந்தேன். ஆங்கில மருத்துவம் பார்த்ததில் 'அல்சர்'தான் மிச்சம். இந்த அடையார் நேச்சர் க்யூர் சென்டரில் நல்ல முறையில் இறைபருளுடனும், அன்புடனும், அனுசரணையுடனும், இயற்கை முறை வைத்திய சிகிச்சை பெற்றதில் ஒரே வாரத்தில் எனது இடது தோள்வலி, முதுகுவலி குணமடைந்து நான் பழைய நிலையில் ஆரோக்கியமாக இருக்கிறேன் என்பதை தெரிவித்து கொள்கிறேன்.

B. சுசிலா
சைதாப்பேட்டை, சென்னை - 15.

**1. Osteo Arthritis, 2. Rheumatoid Arthritis, 3. Ankylosing Spondylitis, 4. Gout**

* கை, கால்களில் மூட்டு வீக்கமும், வலியும். * கை, கால் விரல் மூட்டுகளில் வீக்கமும் வலியும். * கழுத்து வலி (Cervical Spondylitis) * நடுமுதுகின் கீழ்பகுதியில் வலி (Lumbar vertebra and Sacral Joint area) * இடுப்பு எலும்பும் (Pelvic Bone) தொடை எலும்பு தலையும் (Femoral Head) சேருமிடம். * குதிகால் இணைப்புகளில் வலி. * குதிகால்களில் எலும்பு வளர்ந்து நடக்க முடியாமல் வலி. (Calcaneal Spur) முதலியவை பல ஆண்டுகளாக இருந்தாலும் ஆங்கில மருத்துவருடைய ஆலோசனையின்படி வித்தியாசமான இயற்கை வைத்திய முறையில், பக்கவிளைவுகள் இல்லாமல் நலம்பெற செய்கின் றோம்.

சென்னை, பம்பாய், டெல்லி மற்றும் அமெரிக்கா, ஜெர்மன், பிரான்ஸ், மலேசியா, ஸ்ரீலங்கா, சிங்கப்பூர், ஜாம்பியா, அரபு நாடுகளில் இருந்தும், தாங்கமுடியாத மூட்டுவலியுடனும், வீக்கத்துடனும் தசை பிடிப்புடன் நடக்க முடியாமல் சிரமப்பட்ட வர்களும், காலையில் படுக்கையை விட்டு எழுந்திருக்க முடியாமல் சிரமப்பட்டவர்களும், எங்களிடம் நல்ல விதமாக சிகிச்சை பெற்று மகிழ்ச்சியுடன் சென்று இருக்கின்றார்கள். மற்ற விபரங்களுக்கு நேரில் வந்து பார்த்தால்தான் நாங்கள் கொடுக்கும் சிகிச்சையின் தன்மை புரியும்.

உடல் பருமன் மற்றும் இதர வியாதிகளுக்கும் இயற்கை மற்றும் மூலிகை மருத்துவ சிகிச்சைகள் அளிக்கப்படும்.

## அடையார் நேச்சர் கியூர் சென்டர்
## ADYAR NATURE CURE CENTER(TM) Regd. Hospital

No. 6, SECOND CROSS STREET, KASTURBHA NAGAR, ADYAR, CHENNAI - 20.
Phone:4413399, 4402470. Tele Fax: 044-4916650 (காந்திநகர் பஸ்டெப்போ எதிரில்)
www.adyarnaturecure.com E-mail: adyarnaturecure@yahoo.com, dr_spnaidu@yahoo.com.

குறிப்பு: எங்கள் ஆஸ்பத்திரியில் சாதாரண மற்றும் A/C ரூம்கள் கிடைக்கும். முன்பதிவு அவசியம். பிராமணர்களால் தயார் செய்யப்பட்ட சைவ உணவு வசதி மட்டும் உண்டு. வியாதியஸ்தர்களுக்கு தேவைப்பட்ட மாற்று உணவுகளும் வழங்கப்படும் என்பதையும் அறியவும்.